# சைவ சமய பிள்ளைத்தமிழ் நூல்கள்

ஒரு திறனாய்வு

டாக்டர் கு. முத்துராசன்

# சைவ சமயப் பிள்ளைத்தமிழ்

# நூல்கள் — ஒரு திறனாய்வு


டாக்டர் கு. முத்துராசன்

எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,



This book is Published at the Financial assistance of Tirumala Tirupathy Devasthanams under the Scheme " Aid to Publish Religious Books "



வசந்த செல்வி பதிப்பகம்

74, வெளிப்பேட்டைத் தெரு

தர்மபுரி — 636 702.

| | | |
|---|---|---|
| நூல் | : | சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்கள் ஒரு திறனாய்வு |
| ஆசிரியர் | : | டாக்டர் கு. முத்துராசன் எம்.ஏ.,எம்.ஃபில்.,பி.எட்.,பிஎச்.டி., |
| உரிமை | : | வசந்த செல்வி பதிப்பகம் |
| பதிப்பு | : | முதற் பதிப்பு |
| ஆண்டு | : | 1988 |
| தாள் | : | 10. 9 டபுள் கிரவுன் |
| நூல் அளவு | : | 1 × 8 கிரவுன் |
| எழுத்து | : | 10 புள்ளி |
| பக்கம் | : | 306 |
| படிகள் | : | 1, 200 |
| விலை | : | 28 - 00 |
| வெளியீடு | : | வசந்த செல்வி பதிப்பகம், 74, வெளிப் பேட்டைத் தெரு, தர்மபுரி - 636 702. |
| அச்சு | : | முத்தமிழ் அச்சகம், 38, தென்மாத்தாதித் தெரு, திருவண்ணாமலை - 606 602. |


## நூல் கிடைக்கும் இடங்கள்

(1) சரசுவதி இல்லம், 37-A தண்டராம்பட்டு ரோடு, பார்வதி நகர், திருவண்ணாமலை - 606 603.

(2) பாரி நிலையம், நூல் வெளியீட்டாளர் & விற்பனையாளர், 184, பிராட்வே, சென்னை - 600 108.

(3) சக்தி புத்தக நிலையம், 5, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

(4) ஐந்திணைப் பதிப்பகம், திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

# முன்னுரை

காலந்தோறும் மக்களின் வாழ்க்கை சமயச் செல்வாக்கிற்கு ஆட்பட்டு வந்துள்ளது. அவர்தம் இலக்கிய வகைகளில் பல சமயச் சார்பில் உருவாக்கப்பெற்றுள்ளன. இவ்வகையில் தமிழ் இலக்கிய வரலாற்றில் பல்வேறு காலங்களில் தோன்றியுள்ள பிள்ளைத்தமிழ் நூல்கள் பெரிதும் சமயச் சார்புடையனவாகவே திகழ்கின்றன. இவ்வுண்மையை அந்நூல்களின் இயல்பிலும் எண்ணிக்கையிலும் அறிய முடிகின்றது.

இந்நூலாசிரியர்க்கு மொத்தம் முந்நூறு பிள்ளைத்தமிழ் நூல்கள் படிக்கக் கிடைத்தன. அவற்றில் இருநூற்று எழுபத்தேழு நூல்கள் சமயத்தின் அடிப்படையில் தோன்றியுள்ளன. அவற்றில் சைவத்தை ஒட்டி இருநூற்றுப் பதினெட்டுப் பிள்ளைத்தமிழ் நூல்களும் வைணவத்தை ஒட்டி முப்பத்து மூன்று பிள்ளைத்தமிழ் நூல்களும் எழுந்துள்ளன.

சமய அடிப்படையில் பிள்ளைத்தமிழ் நூல்களைப் பகுத்துக்காணும் பொழுது சைவசமயம் சார்ந்த நூல்களே மிகமிக அதிகமாக உள்ளன. நாட்டு வரலாற்றிலும் இலக்கிய வரலாற்றிலும் சைவசமயத்திற்கு உள்ள பெரும் பங்கு நோக்கிப் பிள்ளைத்தமிழ் நூல்களில் அச்சார்புடைய நூல்களைப் பற்றி அறிதல் சமய வாழ்வுக்கு இன்றியமையாதது.

இந்நூல் சைவ சமயச் சார்புள்ள பிள்ளைத்தமிழ் நூல்களை உள்ளடக்கப் பகுப்பாய்வு அணுகு முறையில் (Content Analysis Approach) மதிப்பிடுகின்றது. அதன் மூலம் சைவ சமயச் சார்பால் பிள்ளைத்தமிழும் பிள்ளைத் தமிழால் சைவசமயமும் வரலாறாக முடிந்த பாங்கு விளங்கு கின்றது. இந்த வரலாற்று மதிப்போடு கலை, இலக்கியக் கல்வி மதிப்பும், சமய அறமதிப்போடு கூடிய பன்முக மதிப்பும் வெளிப்படும் வண்ணம் இந்நூல் மிகவும் எளிய நடையில் எழுதப் பெற்றுள்ளது. என்னுடைய நூல்களைத் தொடர்ந்துப் படித்து பயன்பெற்று வரும் அன்பர்கள் இந் நூலையும் ஏற்றுப் படிப்பார்களாக; பயன் பெறுவார்களாக.

அன்பன்

கு. முத்துராசன்

சொ. சுப்பிரமணிய கவிராயர்,
எம்.ஏ., எம்.ஃபில்.,
தமிழ்ப் பேராசிரியர்,
இரா. வே. அரசு கலைக்கல்லூரி,
செங்கல்பட்டு-603 001

# அணிந்துரை

தமிழ் இலக்கியங்களில் சமய இலக்கியங்கள் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளன. முந்தைய கால வரலாற்றை நோக்கினால், சமயமும் தமிழும் இணைந்தே காணப்பட்ட உண்மை விளங்கும். தமிழ் வளர்த்த பெரியவர்களும், கவிஞர்களும் சமயப்பற்றுடையவர்களாகவே விளங்கினர். சமயத்தைக் காக்கத் தோன்றிய மடங்களும், மன்னர்களும் சமயத்திற்கு இணையாகத் தமிழையும் போற்றியுள்ளனர். இறைவனின் பெருமைகளை விளக்குகின்ற வகையில் புராணங்களும், தலபுராணங்களும் மிகுதியாக எழுந்தன. இறைவனின் பெருமைகள் முழுமையும் ஒரு சேரப்பாடுவதைவிட, ஒரு குறிப்பிட்ட பருவத்தை, நிகழ்ச்சியைப் பாடினால் பக்தர்கள் மனதில் இடம் பெற முடியுமென்று சிற்றிலக்கிய வகைகளைக் கையாண்டு உலா, பிள்ளைத்தமிழ் என்று பாடினர்.

குழந்தையைக்கண்டு மயங்காதவர்கள் உண்டா? தீமையை அழிக்க வந்த முருகனும் கண்ணனும் நம் உள்ளத்

தில் குழந்தையாகவன்றோ இடம் பெற்றுள்ளார்கள். உலகையே காக்கின்ற அன்னையாகிய தெய்வத்திற்குக்கூட, குழந்தை அலங்காரம் செய்தல்லவா நம் உள்ளம் மகிழ் கின்றது. எனவே, நாம் வணங்கும் தெய்வங்களைக் குழந் தையாக உருவகித்து, அக்குழந்தையின் விளையாட்டுகளை வெளிப்படுத்தும் பிள்ளைத்தமிழ், தமிழ் மொழிக்கே உரிய சிற்றிலக்கியமாகக் காணப்படுகிறது.

“சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்கள் ஒரு திறனாய்வு” என்னும் இந்நூல், பிள்ளைத்தமிழ் நூல்களில், சைவசமயப் பிள்ளைத்தமிழ் பெறுமிடத்தையும், சிறப்பையும் விளக்கிக்காட்டுகிறது. பிள்ளைத்தமிழ் நூல்களின் பத்துப் பருவங்களையும் விரிவாக ஆய்வு செய்துள்ள ஆசிரியர், இந்நூல்களில் இடம் பெற்றுள்ள புராணக்கருத்துக்கள், திருக்குறள் கருத்துக்கள், வரலாற்றுச் செய்திகள் போன்ற வற்றைத் தொகுத்துக் கொடுத்துள்ளது எதிர்வரும் ஆய்வு களுக்குப்பயன் படக் கூடிய ஒன்றாகும். பிள்ளைத்தமிழின் வடிவம், கற்பனை என்று இலக்கியத்தோடு, தன்னுடைய ஆய்வை முடித்துக் கொள்ளாமல் ‘பதிப்பு’ வரை விளக்கி யுள்ளார்.

இளங்கலைப்பட்ட வகுப்பில் என்னுடைய மாணவராகிய இந்நூலாசிரியர் இன்று பல ஆய்வுப்பட்டங்களைப் பெற்று திருவண்ணாமலை அரசு கலைக்கல்லூரியில் பேராசிரியராகப்

பணியாற்றுகின்றார். தமிழ் மொழிக்குத் தன்னுடைய தொண்டாக, பல ஆய்வு நூல்களை எழுதியுள்ளார். அவருடைய பெருமைகளைக் கண்டு, "தன் மகனைச்சான்றோன் எனக்கேட்டதாய்" என்ற நிலையில் மகிழ்ந்து நிற்கின்றேன். வாழ்க, வளர்க என வாழ்த்துகின்றேன்.

செங்கல்பட்டு, **சொ. சு. கவிராயர்**

# பொருளடக்கம்

## 1. பிள்ளைத்தமிழ் நூல்கள் - தோற்றுவாய்

தமிழ்மொழியில் முந்நூற்றுக்கும் மேற்பட்ட சிற்றிலக்கியவகைகள் தோன்றியுள்ளன. என்றாலும் இன்று மக்கள் மன்றத்தில் பிள்ளைத்தமிழ், அந்தாதி, உலா, கலம்பகம், தூது, பரணி, ஆற்றுப்படை, கோவை, பதிகம், சதகம், குறவஞ்சி முதலிய சிற்றிலக்கிய வகைகளே செல்வாக்குடன் விளங்கி வருகின்றன. இவற்றுள்ளும் “தமிழ்” என்னும் சீரிய சொல்லாட்சியைத் தன் பெயரில் இணைத்துக் கொண்டுள்ள பிள்ளைத் தமிழ் என்னும் இலக்கியவகையே மிகுந்த செல்வாக்குடன் திகழ்ந்து வருகின்றது.

ஒப்பற்ற இறைவனையோ இறைவியையோ இறையடியார்களையோ மக்களில் மாண்புற்ற மன்னர்களையோ பெரியோர்களையோ தம்மாசிரியர்களையோ குழந்தைப் பருவத்தினராகப் பாவித்துக் குழந்தைக்குரிய பத்துப்பருவங்கள் அமைத்து, அப்பத்துப் பருவங்களில் அவர்களின் செயற்கரிய செயல்களையெல்லாம் எடுத்தியம்பு முகமாகப் பாடப்பெறும் இலக்கியவகையே பிள்ளைத்தமிழ் ஆகும்.

### *பிள்ளைத்தமிழின் தனித்தன்மைகள் :*

பிள்ளைத்தமிழ் இலக்கியம் தமிழ்மொழியின் அருமை பெருமைகளையும் இறையுணர்வின் மாட்சி மகிமைகளையும் குழந்தைச் செல்வத்தின் சிறப்புக்களையும் மாண்புடையாரின் வரலாற்றினையும் போற்றியுரைக்கின்றது. மானிட வளர்ச்சிப் பருவங்களில் சிறந்து விளங்கும் இளமைப்பருவம் ஒருவர்க்குத் தன் வாழ்நாள்வரை இருப்பின் அத்தகு உயர்ந்த பருவத்தை எவ்வாறு வரவேற்று வாழ்ந்து இன்புறுவாரோ அவ்வாறே வரவேற்றுப் படித்து இன்பம் துய்க்கும் இலக்கியமாக இஃது இலங்குகின்றது. குழந்தைப் பருவம் மாசு மருவற்ற நல்லெண்ணங்களையும் அவ்வெண்ணங்களின் வாயிலாகக் களங்கமற்ற தூய அன்பையும் பெற்றுத் திகழ்வதால் அத்தூய பருவங்களால் விழையும் பிள்ளைத்தமிழ் இலக்கியம் சிறந்த தனித்தன்மைகளுடன் விளங்குகின்றது.

இதுவரை மொத்தம் மூந்நூறு பிள்ளைத்தமிழ் இலக்

கியங்கள் தோன்றியுள்ளன.[1] இவற்றை நோக்கும் பொழுது இறையுணர்வின் அடிப்படையில் தோன்றிய பிள்ளைத்தமிழ் இலக்கியங்களே மிக அதிகம். பக்தி தெய்வப்பக்தி, தேச பக்தி, அரசப்பக்தி, குருபக்தி, பதிபக்தி, மொழிப்பக்தி எனப் பலவகைப் பெறும். இவ்வகையில் நோக்கும் பொழுது அனைத்துப் பிள்ளைத்தமிழ் இலக்கியங்களும் ஏதாகிலும் ஒரு வகை பக்தியின் காரணமாகவே தோன்றியுள்ளன.

தமிழ்மொழி உலக மொழிகளில பக்தி மொழியாகப் போற்றப் பெறும் சிறப்புடையது. இம் மொழியிலுள்ள பக்தி இலக்கியங்களைப்போல் அளவிலும் பொருட் சிறப்பிலும் வேறு எம்மொழியிலும் காண்டல் அரிது. தமிழர் தமிழையும் தெய்வத்தையும் ஒன்றாகவே போற்றி வருகின்றனர். இதனைப்,

" பண்ணும்பா மேழும்பல வோசைத்தமிழையும்
உண்ணின்றதோர் சுவையும்முறு தாளத்தொலி பலவும்
மண்ணும்புன லுயிரும்வரு காற்றும்சுடர் மூன்றும்
விண்ணும்முழு தானானிடம் வீழிம் மிழலையே "[2]

என்றும்,

" எண்ணானவன் இசையானவன் "[3]

என்றும் வரும் திருஞான சம்பந்தர் வாக்குகளாலும்

" தமிழோடு இசைப்பாடல் மறந்தறியேன் "[4]

என்றும் வரும் திருநாவுக்கரசர் வாக்காலும் அறியலாம்.

தமிழின்பத்தைத் துய்க்கவே மதுரையில் பார்வதி தடாதகைப் பிராட்டியாகத் தோன்றினாள்; சிவபெருமான் சவுந்தரபாண்டியனாக அவதரித்தான்; முருகன் உக்கிரகுமாரனாக உருவெடுத்தான் என்னும் கருத்து சமய உலகில் நிலவுகின்றது. இவ்வாறு இறையுணர்வும் தமிழும் ஒருங்கிணைந்து தெய்வத்தமிழாக விளங்க, அத்தெய்வத்தமிழால் இயற்றப் பெற்ற பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் தெய்வ மணம் கமழக் காணலாம்.

தூது, உலா, கலம்பகம், சதகம் முதலிய சிற்றிலக்கியங்கள் இந்திய மொழிகளிலும் பிறமொழிகளிலும் விளங்குகின்றன. ஆனால் பிள்ளைத்தமிழ் இலக்கியம் தமிழ்மொழியில் மட்டுமே காணப்பெறும் இலக்கிய வகையாகும். [5] பிறமொழிகளில் பிள்ளைத்தமிழ் இலக்கியத்திற்குரிய கூறுகள் விளங்குகின்றனவே அன்றித் தமிழ்மொழியில் உள்ளதைப்போல் தனித்ததோர் இலக்கிய வகையாக உருப்பெற்றுத் திகழவில்லை.

## உலகு தழுவிய பாங்கு :

உலகில் இறையருளை ஒப்பாதாரும் குழந்தைச் செல்வத்தை ஒப்பற்றதாகப் போற்றுகின்றனர்.

> " மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு " [6]

என்றும்,

> " அமிழ்தினும் ஆற்ற லினிதேதம் மக்கள்
> சிறுகை அளாவிய கூழ் " [7]

என்றும் திருவள்ளுவர் போற்றுவர்.

சங்க காலத்தில் நாடாளும் மன்னராக விளங்கிய பாண்டியன் அறிவுடை நம்பியிடம் எத்தனையோ செல்வங்கள் மிக்கிருந்தும் அவன்,

> " படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்
> உடைப்பெருஞ் செல்வ ராயினு மிடைப்படக்
> குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
> இட்டுந் தொட்டும் கவ்வியும் துழந்தும்
> நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
> மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
> பயக்குறை யில்லைத் தாம்வாழு நாளே " [8]

எனக் குழந்தைச் செல்வத்தையே பெரிதாகப் போற்றியுள்ளான்.

இடைக்காலத்தில் நாயன்மார்களும் ஆழ்வார்களும்

குழந்தைச் செல்வத்தைப் போற்றிப் பல பாடல்கள் அருளி யுள்ளனர். நம்மாழ்வார்,

> " வேத ஒலியும் விழா வொலியும்
> பிள்ளைக் குழா விளையாட் டொலியு மாரா
> திருப்பேரையில் சேர்வன் நானே " 9

என அருளியுள்ளார். இவ்வாறு கவிஞர்கள் காலந்தோறும் குழந்தைச் செல்வத்தைப் போற்றி வந்துள்ளனர்.

> " இன்று குழந்தைகள் நீங்கள் - எனினும்
> இனியிந்த நாட்டினை ஆளப் பிறந்தீர் "

என்பது வளர்ச்சிக்கான நம்பிக்கை. இரசியாவில் ஏனைய மானிட வளர்ச்சிப் பருவங்களைக் காட்டிலும் குழந்தைப்பருவமே தனிச்சலுகைக்கும் முன்னுரிமைக்கும் உடைய பருவமாக விளங்கி வருகின்றது.

" Child is father of Future "

என்பது கல்வி உளவியல் கோட்பாடு. குழந்தையைப் பயன் தரும் மரமாக வளரக்கூடிய விதையாகக் கருதுவது ஒரு கல்வித் தத்துவம். இன்னோரன்ன சிறப்புக்களுக்குரிய குழந்தையை உலகில் யாவரும் புறக்கணித்துவிட முடியாது.

இங்ஙனம் உலகு தழுவிய நம்பிக்கைக்கு இடம்தரும் இலக்கு எல்லையை முன்வைத்துப் பிள்ளைத்தமிழ் பாடுவதால் அதனுடைய உலகு தழுவிய பாங்கு வெளிப்படையாக விளங்குகின்றது. இதன் காரணமாக ஆண்டவன் முதல் அடியவர் வரை ஆண் பெண் என்னும் வேறுபாடு கடந்து அனைத்துச் சாராரையும் உள்ளடக்கிப் பாட இதில் இடமுண்டு மக்கள் இனத் தலைவர்களையும் அறிவில் சிறந்தோரையும் வணங்கி மகிழ விரும்பும் சமுதாய நோக்கிற்கு இந்த இலக்கு எல்லையில் மிகுந்த வாய்ப்புண்டு. அதனாலும் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் பெற்றி உலகளாவிய பாங்குடையதாக மதிப்பிட இடமுள்ளது. இலக்கியங்களின் இதற்குப்போதிய சான்று காண பிள்ளைத்தமிழ் பல்வேறு வகைகள் இடம் தருகின்றன.

பிற சிற்றிலக்கிய வகைகளில் இத்தகைய விரிவான போக்கிற்கு இடமில்லை என்பதையும் தமிழிலக்கிய வரலாற்றைக்கொண்டு உணரவியலும். உலா, அந்தாதி முதலிய சிற்றிலக்கிய வகைகளெல்லாம் தன்னேறில்லாத் தலைமை சான்ற ஆண்டவனையும் அரச மரபினரையும் மட்டுமே பாட்டுடைத்தலைவர்களாகக் கொண்டிலங்க இவ்வகையில் மட்டுமே சமய குரவர் நால்வர், சேக்கிழார், மறைமலை அடிகள் முதலானோரை முன்வைத்து இலக்கியங்கள் எழுந்துள்ளன. இதனால் பிள்ளைத்தமிழ் இலக்கிய வகையின் தனித்தன்மை புலனாகக் காணலாம்.

## பிள்ளைத்தமிழின் பொதுவிலக்கணம் :

பிள்ளைத்தமிழின் இலக்கணத்தைப் பன்னிருபாட்டியல், வெண்பாப்பாட்டியல், இலக்கண விளக்கப்பாட்டியல், சிதம்பரப் பாட்டியல், பிரபந்த மரபியல், பிரபந்தத் திரட்டு முதலிய பாட்டியல் நூல்கள் வரையறுத்துள்ளன. தொல்காப்பியமும் புறப்பொருள் வெண்பா மாலையும் இவ்விலக்கியம் பற்றிய இலக்கணம் இயம்புவதில் முன்னோடிகளாகத் திகழ்கின்றன.

" குழவி மருங்கினும் கிழவதாகும் "[10]

என்பது தொல்காப்பிய நூற்பா. பிள்ளைப் பருவத்திலும் காமப் பொருண்மையோடு பாட்டுடைத் தலைமகனை வாழ்த்துதல் உண்டு என்பது இந்நூற்பாவின் பொருள். இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் "குழவிப் பருவத்தும் காமப்பகுதி கூறல் பெறும். அவர் விளையாட்டு மகளிரொடு பொருந்தியக்கண்" என உரை வரைந்துள்ளார். நச்சினார்க்கினியர் "குழவிப் பருவத்தும் காமப்பகுதி உரியதாகும்" என உரை வரைந்துள்ளார். மேலும் அவர் "மருங்கு என்றதனான் மக்கட் குழவியாகிய ஒரு மருங்கே கொள்க; தெய்வக்குழவி இன்மையின்; இதனை மேலவற்றோடு ஒன்றாது வேறு கூறினார்; தந்தையாரிடத்தன்றி ஒரு திங்களில் குழவியைப்பற்றிக் கடவுள் காக்க என்று கூறுதலானும், பாராட்டு மிடத்துச் செங்கீரையும், தாலும், சப்பாணியும், முத்தமும், வர அழைத்

தலும், அம்புலியும், சிற்றிலும், சிறுதேரும், சிறுபறையும் எனப் பெயரிட்டு வழங்குதலானும் என்பது என்றும் "குழவிப் பருவங் கழிந்தோர் அது வேண்டியக்காலும் அக்குழவிப்பருவமே கருதப்பாடுக என்றற்குக் கிழவதாகும் என்றார்" என்றும் விளக்கியுள்ளார்.

இவ்விளக்கத்தால் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், சிறுதேர், சிறுபறை ஆகிய ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய பத்துப் பருவங்களைக் காணமுடிகின்றது. இதனால் தொல்காப்பியர் காலத்திலேயே பிள்ளைத்தமிழ் பாடுவதற்குரிய கருப்பொருள் இருந்தது என்பது புலனாகின்றது.

புறப்பொருள் வெண்பாமாலை

" இளமைந்தர் நலம் வேட்ட
வளமங்கையர் வகையுரைத்தன்று " [11]

எனக் குறிப்பிடுகின்றது இக்கொளுவிற்குச் சாமுண்டி தேவ நாயகர், "குழவிப் பருவத்தாராகிய மைந்தரது நலத்தை விரும்பின காமப்பகுதி நிறைந்த மங்கையரது தன்மையைச் சொல்லியது" என விளக்கம் வரைந்துள்ளார். இதில் பிள்ளைத் தமிழின் இலக்கணக் கூறு அமைந்திருக்கிறது.

பொதுவாகப் பிள்ளைத்தமிழ் இலக்கியம் பத்துப் பருவங்களாகப் பகுக்கப் பெற்று ஒவ்வொரு பருவத்திற்கும் பத்து விருத்தப்பாக்கள் வீதம் மொத்தம் நூறு விருத்தப் பாக்கள் கொண்டதாக அமைக்கப்பெறும். குழந்தையின் மூன்றாந்திங்கள் முதல் இருபத்தோராம் திங்கள் வரையில் உள்ள மாதங்கள் பத்துப் பருவங்களாகப் பகுக்கப் பெறும். அதாவது மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது என ஒற்றித்தத் திங்கள் அடிப்படையில் பாடப்பெறும். [12]

மேற்குறித்த காலவரையறையில் மாற்றமும் உண்டு. ஆண்டாற் பிள்ளைத்தமிழுக்குரிய சிறுபறை, சிற்றில், சிறுதேர்ப் பருவங்கட்கு முறையே குழந்தையின் மூன்று, ஐந்து, ஏழாம் ஆண்டுகளைக் கொள்ளலும் உண்டு என்பது பன்னிரு

பாட்டியல்[13] இலக்கண விளக்கப் பாட்டியல்களின் வரையறை.[14] சிற்றில், சிறுதேர்ப் பருவங்களை முறையே குழந்தையின் ஐந்தாம், ஏழாம் ஆண்டினும் பாடல் உண்டு என்பது வெண் பாப் பாட்டியலின் வரையறை.[15] மேலும் ஆண்மகவுக்குப் பன்னிரண்டாண்டு அருகியும்[16] பெண்மகவுக்குக் காமன் நோன்பு குறிக்கப்படின் பன்னிரண்டு ஆண்டு வரை விரித்தும் பாடப் பெறும்.[17]

ஆண்பாற்காயின் பதினாறு ஆண்டளவும், பெண்பாற் காயின் பூப்பு நிகழும் வரையிலும் கேட்பித்தல் இழுக்காகா தென்பது இந்திரகாளியர் மரபாகும்.[18]எனினும் அரசன் இளையனாயினும் முடி சூடியபின் பிள்ளைக்கவி பெறலாகாது என்பது பன்னிருபடல மேற்கோள் நூற்பா ஒன்றினால் தெரிய வருகின்றது.

பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் இடம்பெறும் குழந்தை ஆண்பிள்ளையாயின் ஆண்பாற் பிள்ளைத்தமிழ் என்றும், பெண்பிள்ளையாயின் பெண்பாற் பிள்ளைத்தமிழ் என்றும் வழங்கப்பெறும். ஆண்பாற் பிள்ளைத்தமிழ் காப்பு, தால், செங் கீரை, சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிறுபறை, சிற்றில், சிறுதேர் என்னும் பத்துப் பருவங்களால் பாடப் பெறும்.[20]

பெண்பாற் பிள்ளைத்தமிழ் ஆண்பாற் பிள்ளைத்தமிழுக் குரிய முதல் ஏழு பருவங்களை முறையே கொண்டு இறுதியிலுள்ள மூன்று பருவங்களுக்குப் பதிலாகச் சிற்றில் இழைத்தல், சிறு சோறாக்கல், குழமகன், ஊசல், காமவேள் நோன்பு முதலிய வற்றுள் எவையேனும் மூன்றைக்கொண்டு அமைவுறும்.[21] எவையேனும் மூன்று என்றாலும் பெரும்பாலான பெண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களில் கழங்கு, அம்மானை, ஊசல் ஆகிய பருவங்களே இடம்பெற்றிருத்தல் காணலாம்.

ஒவ்வொரு பருவத்திற்கும் பத்துப்பத்துப் பாடல்கள் வீதம் மொத்தம் நூறு பாடல்கள் பாடவேண்டும் என்பதே வரையறை. இவ்வரையறையை மீறிப் பருவத்திற்கான

பாடல்களின் எண்ணிக்கையைக் குறைத்துப் பாடிய நிலையையும் பருவ எண்ணிக்கையை மிகுத்துப்பாடிய நிலையையும் பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் காணமுடிகின்றது. சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத் தமிழில் ஒவ்வொரு பருவத்திற்கும் ஏழு பாடல்களே அமைந்துள்ளன. கலைசைச் செங்கழு நீர் விநாயகர் பிள்ளைத்தமிழில் ஒவ்வொரு பருவத்திலும் ஐந்து பாடல்களே உள்ளன. பழனிப் பிள்ளைத்தமிழில் ஒவ்வொரு பருவத்திலும் மூன்று பாடல்களே இடம் பெற்றுள்ளன. கலைஞர் பிள்ளைத்மிழில் பருவத்திற்கு ஒவ்வொரு பாடல் வீதம் மொத்தம் பத்துப்பாடல்களே அமைந்துள்ளன. ஆண்டாள் பிள்ளைததமிழில் வரையறை எதுவும் இல்லாமல் பருவத்திற்குப் பருவம் மாறு பட்ட எண்ணிக்கையுடன் பாடல்கள் அமைந்துள்ளன.

பிள்ளைத்தமிழ் பத்துப்பருவங்களில் அமையவேண்டும் என்னும் வரையறை இருந்தும் பதினொரு பருவங்களைக் கொண்டதாக ஆண்டாள் பிள்ளைத்தமிழும் பன்னிரண்டு பருவங்களைக் கொண்டதாகத் தில்லை சிவகாமியம்மை பிள்ளைத்தமிழும் பதின்மூன்று பருவங்களைக் கொண்டதாகக் காவை முருகன் பிள்ளைத்தமிழும் அமைந்துள்ளன.

பிள்ளைத்தமிழ் பெரும்பாலும் ஆசிரிய விருத்தத்தாலேயே அமைந்துள்ளது. ஆசிரிய விருத்தமே பிள்ளைத் தமிழுக்குரிய யாப்பு என்பதைச் சுவாமிநாதமும் இலக்கண விளக்கப் பாட்டியலும் குறிப்பிடுகின்றன. பன்னிரு பாட்டியல் ஆசிரிய விருத்தம், கட்டளைக்கலி, கலிவிருத்தம் ஆகிய மூன்றையும் பிள்ளைத்தமிழுக்குக்குரிய யாப்பாகச் சுட்டுகின்றது. மேலும் அது பஃதொடை வெண்பாவும் சிறுபான்மை இடம் பெறும் என்கின்றது. இந்திரகாளியம் கொச்சகக் கலியும் பஃதொடை வெண்பாவும் பிள்ளைத் தமிழுக்குரிய யாப்பாகக் கூறுகின்றது. வகுப்புப் பாடலாலும் பிள்ளைத்தமிழ் பாடப் பெறும். வகுப்பு என்பதும் விருத்தமே ஆனால் இஃது ஓர் அடியில் பற்பல சீர்கள் அமையப் பாடப்பெறும். ஒரு வகுப்பின் கால் அடியே ஒரு தனிப்பாட்டு போலக் காணப்பெறும்.

**பொருளமைதி :**

பிள்ளைத்தமிழின் முதற்பருவம்.காப்புப்பருவம் இறைவன் ஒப்பற்றவன்; பிறவா இறவா மூவா முதல்வன். அனைத்தையும் இயக்குபவன்; அனைத்தையும் காப்பவன். எனவே பிள்ளைத் தமிழ் இலக்கியம் சிறக்கவும் பாட்டுடைத் தலைவன் மேன்மை யடையவும் காக்கும்படி கடவுளரை வேண்டுவது காப்புப் பருவம். திருமால் காப்புப்பருவத்தில் முதற்கடவுளாகப் போற் றப்பெறுகின்றார். இதற்குரிய பொருத்தத்தைப் பன்னிரு பாட்டியல் பின்வருமாறு குறிப்பிடுகின்றது:

“ அவன்தான்
காவல் கிழவன் ஆகலானும்
பூவின் கிழத்தியைப் புணர்தலானும்
முடியும் கடகமும் மொய் பூந்தாரும்
குழையும் நூலும் குருமணிப் பூணும்
அணியும் செம்மல் ஆகலானும்
முன்னுற மொழிதற்கு உரியன் என்ப ”[23]

இவ்வரையறை இருந்தும் திருவாவடுதுறை மாசிலாமணி தேசிகர் இயற்றிய திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் காப்புப் பருவத்தில் பிரமீசர், திருநிலைநாயகி, திருநீறு, கால்மாறி யாடிய கடவுள், சிற்சித்தி விநாயகக் கடவுள், முருகக் கடவுள், திருப்பொய்கை, பன்னிரு திருப்பெயர்ப் பழம்பதி, திருப்பதிகம், சட்டைநாதர், மற்றைத் தெய்வங்கள் இடம் பெற்றுள்ளனர். மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் இயற்றிய சேக்கிழார் பிள்ளைத்தமிழில் காப்புக்குரிய கடவுளர்களையெல்லாம் விடுத்துத் திருத்தொண்டத்தொகை செய்யுள் முறைப்படி அமையும் திருத்தொண்டர்களையெல்லாம் காப்புக்குரிய கடவுளர்களாகப் பாடப்பெற்றுள்ளது.

வைகுந்தநாதன் பிள்ளைத்தமிழில் நம்மாழ்வார், சரசுவதி, ஆண்டாள், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழி சையாழ்வார், திருப்பாணாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ் வார், மதுரகவியாழ்வார், இராமாநுசர், பெரியநம்பி, மணவாள

மாமுனி ஆகியோர் காப்புக் கடவுளர்களாகப் போற்றப் பெற்றுள்ளனர். காக்கின்ற அரிய தொழிலைப் புரிகின்ற காரணத்தால் திருமாலைக் காப்புப் பருவத்தில் முதற்கடவுளாகக் கொள்ள வேண்டும் என்னும் வரையறை இருந்தும் பலநூலாசிரியர்கள் தங்கள் விருப்பப்படி பாட்டுடைத் தலைவனின் சிறப்பியல்புகளுக் கேற்ப மாற்றியும் பாடியுள்ளனர்.

குழந்தைகளுக்குக் காப்பு இன்றிமையாதது. வழிபடு தெய்வம் காக்க என வாழ்த்துவதால் பாட்டுடைத் தலைவன் பழுதின்றி நோயற்று வளர்வான். நோயற்ற குழந்தையே குறைவற்ற செல்வமாகும். அப்பொழுதுதான் அது நன்கு ஓடியாடி விளையாடும். பின்வரும் செங்கீரை முதலிய பருவங் களுக்கெல்லாம் இக்காப்புப் பருவமே உயிர்நாடியாக அமைந் துள்ளது. நோய்நீங்கி நலம் பெற்று வளரவேண்டித் தாய் மார்கள் இன்றும் தங்கள் குழந்தைகளுக்கு அவை பிறந்த ஏழாவது நாளில் காப்பு அணிவிப்பதைக் காண்கின்றோம். நோயுற்ற குழந்தைகளை வழிபடுகடவுள் முன்கிடத்தி மஞ்சள் துணியில் நெல் முதலியவற்றை முடித்து அம்முடியினைக் காப்பாகக் குழந்தைகள் கையில் கட்டுவது வழக்கமாக இருந்து வருகின்றது. காப்புக்காக அமைந்தமையின் அத்துணி முடி காப்பாகவே ஆயிற்று. இக்காப்பே காலப் போக்கில் 'பொன்னாலும் வெள்ளியாலும் கைகளை அழகு படுத்தும் காப்புக்களாயின. இவ்வாறு பாட்டுடைத்தலைவன் நோயற்று வாழவும், வளம்பெற்ற குழந்தையாக இருக்க வேண்டியும் பிற கடவுளரை வாழ்த்துவது காப்புப்பருவமாயிற்று.

பிள்ளைத்தமிழின் இரண்டாவது பருவம் செங்கீரைப் பருவமாகும். குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டு டைத் தலைவனின் ஐந்தாம் திங்களில் நிகழ்வது. 'கீர்' என்பதற்குச் 'சொல்' எனப் பொருள் கொண்டு தொடைய மைதிகள் இல்லாத ஒன்றைச் செந்தொடை எனக் கூறுவது போலச் சொல்லுக்குரிய அமைதி இல்லாததைச் செங்கீர் என்றார் என்றும் இது குழந்தைகள் மழலையைக் காட்டிலும் இளமைப் பருவத்தையுடையதான பொருள் தெரியாத ஒலியை

எழுப்பும் பருவத்தைக் குறிப்பதாகுமென ஒரு கருத்து பரவலாக நிலவுகின்றது. 'ஆடுக செங்கீரை' என்னும் செய்யுள் வழக்கைக் கொண்டு, குழந்தை ஒரு காலை முடக்கி ஒரு காலை நிமிர்த்தி இரண்டு கைகளையும் நிலத்தில் ஊன்றி முகத்தை மேல் நிமிர்த்தாடுதலாகிய பருவமே செங்கீரை ஆகும் எனப் பிறிதொரு கருத்தும் நிலவுகின்றது. அவ்வாறு ஆடுகின்ற பொழுது சுற்றத்தார் செவ்விய சொற்களைச் சொல்ல வேண்டு மென்று வேண்டிக் கொள்வதாக இரண்டு கருத்துக்களையும் சேர்த்தமைத்துப் பாடுதல் செங்கீரை என்பது மற்றொரு கருத்தாகும்.[24]

குழந்தை தலையெடுத்து முகமசைத்தாடும் நிலையே பெரும்பாலான பிள்ளைத்தமிழ் நூல்களில் கூறப்பட்டுள்ளது. குழந்தை தன் தலையைத் தூக்கிக் கொண்டு இரண்டு கைகளைத் தரையில் ஊன்றி ஒரு காலை முட்டியிட்டுப் பூமியில் பதித்து ஒரு காலைப் பின்னால் நீட்டிக் கொண்டு உடல் அசைந்தாடும் பருவமே செங்கீரைப் பருவம்.

மூன்றாவது பருவம் தாலப்பருவம். குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனின் ஏழாம் திங்களில் நிகழ்வது. தால் என்பது நாக்கு. நாக்கை அசைத்துத் தாலாட்டுப் (தால் ஆட்டுப்) பாடிக் குழந்தையைத் தூங்க வைப்பது தாலாட்டு ஆகும். தாலாட்டு என்பது பின்னர்த் 'தால்' என மருவி வழங்கி வருகின்றது "தாலே தாலேலோ" எனக் குழந்தைக்குத் தாலாட்டு பாடும் பொழுது குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனின் முன்னைச் சிறப்புக்களையெல்லாம் எடுத்துரைத்துப் பாடுவது வழக்கம். 'ஒலுடன் ஆட்ட' என வரும் இறையனார் களவியல் இரண்டாம் சூத்திர உரைக் குறிப்பைக் கொண்டு ஓலாட்டுதலே தாலாட்டல் ஆகும் என ஒரு கருத்து நிலவி வருகின்றது.

தாலப்பருவம், செங்கீரைப் பருவம் ஆகிய இருபருவங்களும் வரிசை முறை மாறி வருதலும் உண்டு. இரண்டாவ

தாகத் தாலப் பருவமும் மூன்றாவதாகச் செங்கீரைப் பருவமும் வரும்.

தாலாட்டு தனியொரு சிற்றிலக்கியமாகவும் விளங்கு கின்றது. "சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் தாலாட்டு" முதன் முதலில் தோன்றிய தாலாட்டு ஆகும். மாரியம்மன் தாலாட்டு, கம்பராமாயணத் தாலாட்டு ஆகிய நூல்கள் குறிப்பிடத் தக்கவை.

சப்பாணிப் பருவம் பிள்ளைத்தமிழின் நான்காவது பருவ மாகும். இது, குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனின் ஒன்பதாம் திங்களில் நிகழ்வது. கள்ளங்கபட மற்ற வெள்ளை உள்ளம் கொண்ட குழந்தை ஒன்பதாவது திங்களில் உட்காரத் தொடங்கிய பிறகு மகிழ்ச் சிப் பெருக்கால் கையாட்டுதல், கைகொட்டுதல் போன்ற விளையாட்டுகள் அதனிடத்து இயல்பாகவே தோன்றும். பெற்றோரும் மற்றோரும் கைகளைச் சேர்த்துத் தட்டிக் காட்டிக் குழந்தையை அழைப்பதோடு கைகொட்டிக் காட்டும் படியும் வேண்டுவர். குழந்தை அதற்கேற்ப 'சப்' என்னும் ஒலி உண்டாகும்படி கையைக் கொட்டி ஒலி எழுப்பும். 'சப்' என்பது ஒருவகை ஒலி. 'பாணி' என்பது கை. எனவே சப்பாணி ஆயிற்று. ஒட்டு நிலையில் உருவான மொழிக் கொள்கை இவ்வழக்கில் இடம் பெற்றுள்ளதை அறியமுடி கின்றது.

குழந்தை நிமிர்ந்து அமர்ந்திருக்கும் அமைப்பைச் சப்பாணி என்று கூறும் வழக்கம் உண்டு. அதனாலேயே இது சப்பாணி பருவமாயிற்று என்றும் 'சப்பாணி' என்பதைச் சக பாணி எனப் பிரித்து 'சக' என்பதன் பொருள் உடன் என்றும் பாணி என்பதன் பொருள் கை என்றும் கொண்டு இரண்டு கைகளையும் உடன் சேர்த்துக் கொட்டுதலாலேயே சப்பாணி ஆயிற்று என்றும் 'ச' என்றால் சேர்த்தல் என்றும் பொருள் கொண்டு கைகளைச் சேர்த்து ஒலி எழுப்புதல் என்னும் கருத்தும் நிலவுகின்றது.

இவற்றால் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையை உட்கார வைத்து அவனின் சிறப்பியல்புகளையெல்லாம் எடுத்துரைத்து இன்ன இயல்புகளுடைய கைகளினால் கொட்டி இனிய ஓசை எழுப்புக என வேண்டும் பருவமே சப்பாணிப் பருவம் என அறிய முடிகின்றது.

முத்தப்பருவம் குழந்தையாகப் பாவித்து பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனின் பதினோராம் திங்களில் நிகழ்வது பிள்ளைத்தமிழில் இப்பருவமே சிறந்த பருவமாகக் கருதப் பெறுகின்றது. இவ்வுலகில் முத்தத்தை விரும்பாதார் யாருமிலர் அதிலும் குழந்தையின் இனிமையான வாயால் பெறும் முத்தம் மிகவும் உயர்ந்தது. பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையைப் பாராட்டி மடியில் தூக்கி வைத்துக் கொண்டு முத்தம் தருமாறு வேண்டுவது முத்தப் பருவமாகும். முத்தப் பருவம் பாடும் பொழுது அறிஞர் மற்ற விலை மதிப்புள்ள முத்தங்களின் இயல்புகளையெல்லாம் எடுத்துரைத்து விலை மதிப்பில்லா குழந்தையாகிய பாட்டுடைத் தலைவனின் முத்தமே மிக உயர்ந்த முத்தம் எனப் பாராட்டுவர். அவ்வாறு பாராட்டும் பொழுது பாட்டுடைத் தலைவனின் சிறப்பியல்புகளை யெல்லாம் எடுத்துரைப்பர். தம் பாட்டுடைத் தலைவனை அல்லது அம்மையைக் குழந்தையாக்கி அதன் முத்தத்துக்கு ஏங்கும் கவிஞர்களின் நிலை எல்லாப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் உண்டு.

வருகைப் பருவம் பிள்ளைத்தமிழின் ஆறாவது பருவம். இது குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனின் பதின்மூன்றாம் திஙகளில் நிகழ்வது. இதனை வாரானைப் பருவம் என்றும் கூறுவர். வரவேற்றல் தமிழ் நாட்டினரின் தலையாயப் பண்பு. அழகுத் தெய்வங்களாக விளங்கும் குழந்தைகளை யாவரும் விரும்பி வரவேற்பர். தத்தித்தத்தித் தளர்நடை இட்டு வரும் குழந்தையாகிய பாட்டுடைத் தலைவனின் சிறப்பியல்புகளையெல்லாம் எடுத்துரைத்து அருகில் வருக வருக என வாய் குளிர மனம் மகிழ அழைக்கும் பருவமே வாரானைப் பருவம்.

அம்புலிப்பருவம் என்பது அம்புலியைக் குழந்தையாகிய பாட்டுடைத் தலைவனோடு விளையாட வருமாறு அழைப்பது சாம பேத தான தண்ட முறைகளில் இப்பருவம் பாடப்பெறும். இது குழந்தையின் பதினைந்தாம் திங்களில் நிகழ்வது.

அம்புலியை அம் புலி எனப்பிரிக்கலாம். புல்லி என்பது புல்லும் இயல்புடையது. ஏனைய நாட்களோடு ( நட்சத்திரங் களோடு ) புல்லும் சிறப்பு நோக்கிப் புல்லி என்பது நிலவைக் குறிப்பதாகக் கொள்வர். புல்லி என்பதன் இடைக் குறையே புலி. அழகு மிக்க தண்ணிய ஒளிக்கதிர்களைப் புல்லியுள்ள தால் அம்புலி என்று நிலவைக் கூறினும் பொருந்தும். நில விலுள்ள களங்கத்தை முயல் என்பர். புலி என்றும் கூறுவர். அகம் கை அங்கை என்றாவது போல அகத்தில் புலி உடை யது அம்புலி என்று கூறுவர்.

பிள்ளைத்தமிழின் பத்துப் பருவங்களில் முத்தம், வாரானை, அம்புலி ஆகிய மூன்று பருவங்களே மற்றைப் பருவங்களைக் காட்டிலும் பொருள் வளமும் கலை நலமும் உடையதாக விளங்குகின்றது. இம்மூன்றனுள்ளும் மிகச் சிறந்து விளங்கும் பருவம் அம்புலிப் பருவம்.

" பிள்ளைக் கவிக்கம்புலி புலியாம் "

எனப் போற்றுவர் அறிஞர்.

வெண்ணிலவைப் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தை யுடன் விளையாட வா என அழைக்கும் பொழுது சாம பேத தான தண்ட முறையால் அழைப்பது பொருள்நலம் சிறந்த ஒன்றாகும். இன்னின்ன வகையில் சந்திரனும் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையும் ஒத்திருக்கின்ற காரணத்தால் சந்திரனைப் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தைக்குச் சரி நிகர் சமானமாக எண்ணி விளையாட அழைப்பது முதல் நிலை. சந்திரனும் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையும் இன்னின்ன வகையில் வேறுபடுகின்றார்கள். என்றாலும் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தை அருள் உள்ளம் வாய்ந்தது. ஆதலின் சந்திரனை விளையாட அழைக்கின்றது. எனவே

வருக என அழைப்பது இரண்டாம் நிலை சந்திரன் பாட்டு டைத் தலைவனாகிய குழந்தையுடன் விளையாடவரின் இன்னின்ன நலன்களைப் பெறுவாய் என எடுத்துரைத்து அழைப்பது மூன்றாம் நிலை. பாட்டுடைத் தலைவனாகிய குழந்தை இத்தனை வகையில் வருந்தி அழைத்தும் சந்திரன் வரவில்லையாயின் சந்திரன் இன்னின்ன வகையில் தண்டனை பெறும் என ஒறுக்குமுகத்தான் அழைப்பது இறுதிநிலை இவ்வாறு நால்வகை உபாயங்களால் அழைக்கும் போது சிலேடை முதலிய அணி இலக்கணங்கள் அழகுற அமையப் பாடும் இயல்புடையது அம்புலிப் பருவம்.

காப்புப்பருவம் முதலாக அம்புலிப்பருவம் ஈறாக இது வரை கூறப்பெற்ற ஏழு பருவங்களும் ஆண்பாற் பிள்ளைத் தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என்னும் இருவகைப் பிள் ளைத்தமிழ் இலக்கியங்களுக்குமுரிய பொதுவான பருவங் களாகும். அடுத்துவரும் மூன்று பருவங்களும் ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்கும் பெண்பாற் பிள்ளைத்தமிழுக்கும் வெவ வேறானவை. குழந்தை வளரவளர அதன் மனநிலையில் மாறுபாடு நிகழ்வது இயற்கையே சாண்பிள்ளை ஆனாலும் ஆண் பிள்ளை அல்லவா ! ஆணின வலிமை மிகுந்த துடுக்குத் தனத் தைக் குழந்தைப் பருவத்திலேயே காணமுடிகின்றது. மகளிர் கட்டிய சிற்றிலை விளையாட்டாகச் சிதைப்பதும் சிறுபறை முழக்குவதும் ஆணின் வலிமை மிகுந்த துடுக்குத் தனத்தைக் குழந்தைப் பருவத்திலேயே காணமுடிகின்றது மகளிர் கட்டிய சிற்றிலை விளையாட்டாகச் சிதைப்பதும் சிறுபறை முழக்கு வதும் சிறுதேர் உருட்டுவதும் ஆகிய மூன்று பருவச் செயல் களும் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரியனவாகும். அம் மானை ஆடல், நீராடல், ஊசல் விளையாடல் ஆகிய மூன்றும் பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரியனவாகும்.

இனி, முதற்கண் ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்குரியன எட்டு, ஒன்பது, பத்து ஆகிய பருவங்கள் கூறப்பெறுகின்றன.

சிற்றில் இழைத்தல் பாட்டுடைத் தலைவனாகிய குழந்தை யின் பதினேழாம் திங்களில் நிகழ்வது. இப்பருவத்திற்கு

முந்தைய பருவமான அம்புலிப் பருவத்தில் அம்புலியே வா வா என்று வாய்சோர அழைத்த பாட்டுடைத் தலைவனாகிய குழந்தை அது வாராமை கண்டு கோபம் கொள்ளல் இயற்கை. ஆண் குழந்தையின் கோபத்திற்குப் பெண் குழந்தை கட்டிய சிற்றில் பலியாகின்றது. அரும்பாடு பட்டுக் கட்டிய சிற்றில் ஆண்மகனால் சிதைக்கப்படும் பொழுது அதனைக் கட்டிய பெண்மகள் ஆண் மகனிடம் தன் சிற்றிலைச் சிதைக்க வேண்டாம் என வேண்டுமுகமாகப் பாடப் பெறுவதே சிற்றில் இழைத்தல்.

ஆண் இளமை நிரம்பியபோது அறிவு சிறந்து உணர்வும் வளர்ந்து விளங்குகின்றான். பெண் இளமை நிரம்பிய போது உணர்வு சிறந்து அறிவும் வளர்ந்து விளங்குகிறாள். வளர்ச்சிக்குரிய வித்துக்கள் விளையாட்டுப் பருவத்திலேயே காணப்படுகின்றன. அமைதியாக இருந்து பெண் சிற்றில் இழைக்கும் பருவத்தில் ஆரவாரமாக இயங்கி ஆண் சிற்றில் சிதைக்கும் நிலையில் இருக்கின்றான். எனவே சிறுமியின் மனம் பெரிதும் ஆக்க வேலையில் முனைந்திருக்கச் சிறுவனின் மனமோ அழிவு வேலையில் ஊக்கம் காட்டுவதால் ஆண் ஆற்றல் மிக்கவனாக வளர்கின்றான் என்பது இயற்கையின் வியக்கத்தக்க முறையாக அமைந்திருக்கின்றது.

பெற்றோரும் பிறரும் பாடுவதாகப் பாவித்து மற்றப் பருவங்கள் அமைய இப்பருவம் மட்டும் சிறுமியர் பாடுவதாகப் பாவித்துப் அமைப்பது இயல்பாகும். அன்றியும் இப்பருவம் நாயகன் நாயகி என்னும் வழக்கத்தில் ஆண்டவனை உயிர்கள் சென்றடையும் தத்துவ விளக்கமாக அமைத்துப்பாடலும் உண்டு.

சிறுபறை முழக்கல் என்னும் பருவம் குழந்தையின் பத்தொன்பதாம் திங்களில் நிகழ்வது. ஒலி இன்பம் குழந்தையை மிகவும் ஈர்க்கு மாதலின் பாட்டுடைத்தலைவனாகிய குழந்தை பறை முதலியவற்றைக்கொட்டிக் கொண்டு விளையாடும். அவ்வாறு கொட்டும் பொழுது ஓசை ஏற்படுகின்றது.

ஒழுங்குள்ள ஓசையையே இசையாகக் கருத இடமுண்டு இசைக்கு மயங்காதார் யாருமிலர்; எதுவுமில. பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையிடம் சிறியபறை முதலிய கருவி களைக் கொடுத்து முழக்குமாறு செய்து மகிழ்விப்பதாகப் பாவனை செய்து பாடுவதே சிறுபறை முழக்கல் பருவம்.

சிறுதேர்ப் பருவம் என்பது மரத்தாலான சிறிய தேரினை உருட்டி மகிழும்படி பாட்டுடைத் தலைவனாகிய குழந்தையை வேண்டுமுகமாகப் பாவனை செய்து பாடுவது. பெற்றோரோ அல்லது பிறரோ மடநடை பயிலும் குழந்தையைத் தனது நடைப் பயிற்சிக்கு உறுதுணையாக உதவும் பொருட்டுச் சிறு தேரினை ஓட்டி மகிழச் செய்வர். குழந்தை வளர வளர தரையில் நடந்து செல்லுதலே அன்றித் தேர் முதலிய வற்றின் மீது ஊர்ந்து செல்லவும் விரும்பும். இவ்விருப்பத்தை நிறை வேற்றி வைக்கும் பொருட்டுப் பெரியோர் தேர் முதலியவற்றை உருட்டி மகிழச் செய்வர். குழந்தையாகிய பாட்டுடைத் தலை வனின் சிறப்பியல்புகளையெல்லாம் எடுத்துரைத்துச் சிறுதேர் உருட்டி மகிழுமாறு பாவனை செய்து பாடப் பெறுவதே சிறு தேர்ப்பருவம்.

இனி, பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய இறுதி மூன்று பருவங்கள் விளக்கப் பெறுகின்றன.

நீராடற்பருவம் பாட்டுடைத் தலைவியாகிய குழந்தை யின் பதினேழாம் திங்களில் நிகழ்வது பாட்டுடைத் தலைவி யாகிய குந்ழதையை நீராட வேண்டுவதாகப் பாவனை செய்து பாடும் பருவம். இச்செயல் நல்ல கணவன்மாரை அடைய கன்னிகள் நோற்கும் மார்கழி நோன்பைத் தழுவி உள்ளதாகவும் கருத இடமுண்டு. “பேணுஞ் சிறப்பின் பெண் மகவாயின் மூன்றாம் ஆண்டில் குழ மணம் ஒழிதலும் ஐந்தின் முதலா ஒன்பதின்காறும் ஐங்கணைக் கிழவனை ஆர்வமொடு நோற்றலும் பனிநீர் தோய்தலும் பாவையாடலும்” எனப் பிங்கலந்தை கூறுவதால் ஐந்து முதல் ஒன்பது வயது வரை யுள்ள சிறுகன்னியரே நீராடி நோன்பு நோற்றற்குரியர் என்பது போதருகின்றது.

அம்மானைப் பருவம் பாட்டுடைத் தலைவியாகிய குழந்தையிடம் கழங்கினை மேலே வீசி ஆடுமாறு வேண்டப் படுவதாகப் பாவனை செய்து பாடும் பருவம். கழங்காவது மரம், ஈயம் முதலிய பொருள்களால் உருண்டையாகச் சிறிய பந்து போன்று செய்வது அவற்றை மகளிர் மேலே ஒன்றன் பின் ஒன்றாக எறிந்து கையால் பிடித்து விளையாடுவர்.

அம்மானைக் காய்கள் கொண்டு இவ்வாறு விளையாட லுமுண்டு. பாட்டுடைத் தலைவியைத் தோழிமார்கள் முத்தம் மானை முதலிய அம்மானைக் காய்கள் கொண்டு ஆடுமாறும் வேண்டுவர். உலா நூல்களில் பேதை அல்லது பெதும்பைப் பருவமகள் தலைவனைக் காண முற்படுவதற்கு முன்பு அம் மானை ஆடிக் கொண்டிருப்பாள். கலம்பக உறுப்புகளில் ஒன்றாகவும் விளங்குகின்றது. மகளிர் மூவர் ஒன்று கூடித் தம் தலைவனைக் குறித்து மூவருள் ஒருத்தி வினா எழுப்ப மற்றொ ருத்திஅதற்கு விளக்கம் சொல்ல, வேறொருத்தி இவ்விரு வர்க்கும் விடைகூறி அம்மானைக் காய்களை மேலே எறிந்து ஆடி மகிழ்வர். இவ்வாறு அமையும் பாடலின் இறுதிச் சீரில் அம்மானை என்னும் சொல் இடம் பெற்றிருக்கும்.

ஊசல் பருவம் குழந்தையாகப் பாவிக்கப்பட்டுள்ள பாட்டுடைத்தலைவியின் இருபத்தோராம் திங்களில் நிகழ்வது. பாட்டுடைத்தலைவியாகிய குழந்தையை ஊஞ்சலாடி மகிழும் படி வேண்டிப் பாடப்பெறும் பருவம். பாட்டுடைத்தலைவி யாகிய குழந்தையை ஊஞ்சலில் அமர்த்தித் தாதியர் அக் குழந்தையின் சிறப்புக்களையெல்லாம் எடுத்துரைத்து ஊஞ் சலை ஆட்டிக் குழந்தையாகப் பாவிக்கப் பட்டுள்ள பாட்டு டைத் தலைவியை மகிழ்விப்பர். ஊஞ்சல் தோட்டங்களில் அமைப்பதும் உண்டு. ஊஞ்சல் அமைத்ததின் சிறப்பு, ஆடும் வகை, குழந்தையாகப் பாவிக்கப்பட்டுள்ள பாட்டுடைத் தலை வியின் சிறப்பியல்புகள், காண்பார்க்கு விளையும் இன்பம் முதலியவற்றை இப்பருவத்தில் அமைத்துப் பாடுவர்.

இவ்வகையில் ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய பொரு

ளமைதியும் பெண்பாற் பிள்ளைத்தமிழுக்குரிய பொருளமைதி யும் அமைந்துள்ளன. ஒவ்வொரு பருவச்செயல்களின் வாயி லாகப் பாட்டுடைத்தலைவன் அல்லது தலைவியின் வரலாற்று நிகழ்ச்சிகளையும் சிறப்பியல்புகளையும் எடுத்துரைத்து நூலா சிரியர் தன்னுடைய கோரிக்கைகளையும் குறைகளையும் இணைந்து இருப்பதை இப்பகுதியில் காண இடமுண்டு.

## பெயரிடும் முறை :

ஒரு வரையறைக்குட்பட்டே பிள்ளைத்தமிழ் நூல் களுக்குப் பெயரிடப் பெற்றிருக்கின்றன. இறைவன் அல்லது இறைவியைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு இயற் றப்பெற்ற நூல்களுக்கு அவர்கள் பெயராலோ அல்லது அவர்கள் எழுந்தருளியுள்ள ஊர்களின் பெயராலோ அல்லது ஊர்களின் பெயர்களோடு அவர்கள் பெயரையும் சார்த்தியோ பெயரிடப் பெற்றிருக்கின்றன. முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களுக்கு இறைவன் பெயர், இறைவிபெயர் இடப்பெற்றி ருக்கின்றன. கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ், அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ், தில்லை சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ் முதலிய நூல் களுக்கு இறைவன் அல்லது இறைவி பெயரோடு ஊரின் பெயரினையும் சேர்த்து இடப் பெற்றிருக்கின்றன. திருச் செந்தூர் பிள்ளைத்தமிழ், பழநிப் பிள்ளைத்தமிழ் முதலிய வற்றிற்கு ஊரின் பெயர் மட்டுமே இடப்பெற்றிருக்கின்றன.

## தோற்றமும் வளர்ச்சியும் :

தொல்காப்பியர் காலத்திலேயே பிள்ளைத்தமிழுக்குரிய கரு இருந்தது. என்றாலும் அக்காலத்தில் தோன்றியதாக எந்த ஒரு பிள்ளைத்தமிழ் நூலும் இல்லை சங்க கால, சமயகால இலக்கியங்களில் பிள்ளைத்தமிழுக்குரிய கூறுகளே காணப்பெறுகின்றன. அவற்றைப் பருவம் வாரியாக ஆராய்ந்து பார்ப்பதற்கு இடமுண்டு.

தொல்காப்பியம் மாயோன், சேயோன், வேந்தன், வருணன் என்னும் நானிலத் தெய்வங்களையும் கொடி நிலை, கந்தழி, வள்ளி என்னும் தெய்வங்களையும் மக்கள் வாழத்தி வழிபட்டு வந்ததாகக் கூறுகின்றது. பரிபாடலில் இன்று கிடைத்துள்ள இருபத்திரண்டு பாடல்களில் ஆறு பாடல்கள் திருமாலின் சிறப்பியல்புகளையும் எட்டுப் பாடல்கள் சேவ்வே ளின் சீர்மைகளையும் எடுத்துரைக்கின்றன. புறநானூறு பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைச் சிவன், திருமால், முருகன், வாலியோன் ஆகிய நால்வருடனும் ஒப்பிட்டுப் பாடியுள்ளது.

சிவன் முக்கணான், நீலகண்டமுடையவன், திங்கட் கண்ணியான், உமையொருபாகன், அவன் மாலை கொன்றை, அவன் படை கணிச்சி, அவள், நாள் திருவாதிரை எனச் சிறப்பிக்கப் பெற்றுள்ளான்.

திருமால் நீல நிறத்தன்; கையில் சக்கரம் உடையவன்; மார்பில் திருமகள்; திருத்துழாய் மாலை; சேவல் ஊர்தி; கருடக்கொடி உடையவன்; பாற்கடலில் அரவணையில் அறிது யில் கொள்பவன்; அவன் நாள் ஓணநாள்; அவன் வேத முதல்வன்; ஞாலம் அளந்தவன் எனச் சிறப்பிக்கப் பெற்றுள் ளான்.

திருக்குறளின் கடவுள் வாழ்த்து அதிகாரம், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு ஆகியவற்றின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள்; திருமுருகாற்றுப் படை முதலியனவெல்லாம் காப்புப் பருவத்தின் கூறுகளை நினைவூட்டுகின்றன.

இடைக்காலம் சமய காலமாகவே திகழ்கின்றது. சமயமே மக்களின் வாழ்வாக இருந்தது. பன்னிரு திருமுறை யும் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தமும் கம்பராமயணமும் இதற்குச் சான்றாகின்றன.

குழந்தை பிறந்த முதல் வாரத்தில் தாய்மார்கள் இன்றும் குழந்தைகளுக்குக் காப்பணிவிக்கின்றார்கள். மேலும் நோயுற்ற குழந்தைகளை வழிபடு கடவுள் முன் கிடத்தி மஞ்சள் துணியில் நெல், அவரை, துவரை முதலிய தானி யங்களை முடிந்து அக்குழந்தையின் கையில் காப்பாக அணி விப்பது இன்றும் வழக்கமாக உள்ளது. மேலே குறிப்பிட்ட பக்தி இலக்கியக் கூறுகளும் இவ்வுலக வழக்கும் பிள்ளைத் தமிழின் காப்புப் பருவத்திற்குத் தோற்றுவாய் எனக் கருத இடமுண்டு. திருத்தொண்டர் புராணத்தில் திருஞான சம்பந் தரின் குழந்தைப் பருவ வளர்ச்சியினைக் குறிப்பிடும்பொழுது,

> "ஆறுலவும் செய்யசடை ஐயர் அரு ளாலே
> பேறுலகி னுக்கென வரும்பெரி யவர்க்கு
> வேறுபல காப்புமிகை என்றவை விரும்பார்
> நீறுதிரு நெற்றியில் நிறுத்திநி றைவித்தார்"[25]

எனப்பாடியுள்ளார். இப்பாடல் காப்புப் பருவப் போக்குள்ள பாடலாக விளங்கக் காணலாம்.

தாலாட்டுப் பருவம் பற்றிய செய்திகளைப் பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களில் எங்கும் காண முடிய வில்லை. குலசேகர ஆழ்வார் இராமபிரானின் குழந்தைப் பருவத்தைப் பாடுங்கால் தாலோ காலேலோ எனத் தாலாட்டுப் பாடி அப்பிரானின் முன்னைச் சிறப்புக்களையெல்லாம் எடுத்துரைத்து உறங்க வேண்டுகிறார். திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் திருஞான சம்பந்தரின் குழந்தைப் பருவத்தைப் பாடும் பொழுது தாலாட்டுப் பருவப் போக்குள்ள பாடலொன்று இடம் பெற்றுள்ளது.

பெரியாழ்வார் யசோதை நிலையில் நின்று கண்ண னாகிய குழந்தையைச் செங்கீரையாடுமாறு பதினொரு பாடல் களில் வேண்டுகின்றார், ஆற்றல் வாய்ந்த நரசிம்மன் வடிவம் கொண்டு இரணியனை வென்ற வெற்றி வீரனே! தேவர்களின் தலைவனான இந்திரன் தனக்கிட்ட சோற்றை உண்டு விட்ட

தால் பசியோடு மிகவும் சினந்து வர, அதனால் மேகங்கள் காற்றோடு கல்மாரி பொழிய, அவ்வேளையிலே கோவர்த்தனக் கிரியையே குடையாகக் கொண்டு பசுக்கூட்டங்களைக் காப் பாற்றியவனே! ஆண்மை பொருந்திய வீரனே! எனக்கு ஒரு முறை செங்கீரை ஆடி அருள்க! ஆயர்களின் காளை போன்ற வனே! செங்கீரை ஆடுக! என அவர் வேண்டுவதாகப் பாடும் பாடலின் விளக்கம் குறிப்பிடத்தக்க சிறப்புடையது. திருத் தொண்டர் புராணத்தில் சேக்கிழார் திருஞான சம்பந்தரின் குழந்தைப் பருவத்தைப் பாடும் பொழுது அவர் செங்கீரை ஆடியதாகப் பாடியுள்ளார்.

பெரியாழ்வார் கண்ணனாகிய குழந்தையைச் சப்பாணி கொட்ட வேண்டிப் பதினொரு பாடல்கள் பாடியுள்ளார். மாற்றுக்குறையாத பசும்பொன்னால் செய்த பொன்மணிக் கோவையையுடைய இடுப்பின் மேல் உள்ளே மாணிக்கத்தைக் கொண்ட அரைச்சதங்கை ஒலி செய்யவும், பவளவாயில் முத்துப் பற்கள் ஒளிவீச, முன்னொரு காலத்தில் பூமியை மாவலி அரசனிடமிருந்து பெற்றுக் கொண்ட கைகளினால் விரும்பிச் சப்பாணி கொட்டியருள்க என வேண்டிப் பாடிய பாடலின் விளக்கம் குறிப்பிடத்தக்கது. பதினோராம் திருமுறையில் இப்பருவப் போக்குள்ள பாடலொன்று இடம் பெற்றுள்ளது. திருத்தொண்டர் புராணத்தில் சேக்கிழார் திருஞான சம்பந்தரின் குழந்தைப் பருவத்தைப் பாடும் பொழுது அவர் சப்பாணி கொட்டியதாக ஒரு பாடல் பாடியுள்ளார்.
பெருமாள் திருமொழியில்,

> "மருவு நின் திரு நெற்றியில் சுட்டி
> அசைதர மணி வாயிடை முத்தம்
> தருதலும் ... "26

என முத்தப் பருவப் போக்குள்ள பாடலடிகள் காணப்பெறு கின்றன. குலசேகர ஆழ்வார் திருமாலின் குழந்தைப் பரு வத்தில் ஈடுபட்டு அந்தெய்வக் குழந்தையிடம் முத்தம் தரு

மாறு வேண்டுகின்றார். திருத்தொண்டர் புராணத்தில்,

பொருநபுலிப் பார்வைப் பேழ்வாய்
முறைமுளைப் பொற்கை நீட்டப்
பரிவுடைத் தந்தை கண்டு
பைந்தழைக் கைக்கொண் டோச்சு
இருசுடர்க் குறுகண் தீர்க்கும்
எழில்வளர் கண்ணீர் மல்கி
வருதுளி முத்தம் அத்தாய்
வாய்முத்தம் கொள்ள மாற்றி"[27]

என முத்தப் பருவப் போக்குள்ள பாடல் இடம் பெற்றுள்ளது.

பெரியாழ்வார் திருமொழியில் இப் பருவப் பாடல்கள் பதினொன்று இடம் பெற்றுள்ளன. இரும்புச் சங்கிலியானது சலார் சலார் என்று ஒலி எழுப்பவும், தொங்குகின்ற பொன்னால் செய்யப் பெற்ற கயிற்றோடு பொருந்திய மணிகள் ஒலிக்கவும் உண்டான மூன்று வகையான மதநீர் வடிய மெல்ல நடந்துவரும் யானை போலக் காலில் கட்டப் பெற்ற சதங்கை ஒன்றொடொன்று மோதி ஒலி செய்ய இடுப்பில் மணிகள் பறைபோல் முழங்க இங்ஙனம் சார்ங்கம் என்னும் வில்லைக் கையில் ஏந்திய குழந்தையாகிய கண்ணன் இள நடையிட்டு வந்து எனக்கு இன்பம் வழங்கமாட்டானோ? என்னும் கருத்து குறிப்பிடத்தக்கது.[28]

குழந்தையைப் பாலமுது உண்ணவேண்டி அழைக்கும் பாடல்கள் பெரிய திருமொழியில் உள்ளன.

" சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையரும் தாதியரும்
காழியர்தம் சிராட்டே கவுணியர்கற் பகமே என்
றேழிசையும் பலகலையும் எவ்வுலகும் தனித்தனியே
வாழவரும் அவர்தம்மை வருகவரு கென அழைப்ப"[29]

என்னும் வருகைப் பருவம் சார்ந்த பாடல் திருத்தொண்டர்

புராணத்தில் இடம்பெற்றுள்ளது.

அம்புலிப்பருவம் சார்ந்த செய்திகள் சங்கஇலக்கியங்களி லும் பிற்கால இலக்கியங்களிலும் காணப்பெறுகின்றன. " ஐயனே ! திங்களாகிய குழவி ! நீ இவனுடன் விளையாட வருவாயாக என்று சொல்லி அவ்வம்புலிக்கு யான் நின்னைக் காட்டி மகிழ்தல் எமக்கு இனிது" என்னும் கருத்தைக் கலித் தொகைப் பாடலடிகள் குறிப்பிடுகின்றன. மேலும் குழந்தைக்கு அம்புலி காட்டி மகிழ் வித்தலை அகநானூறும் 30 புற நானூறும் 31 குறிப்பிடுகின்றன.

பெரியாழ்வார் தம்மை யசோதையாகப் பாவித்து வானத்திலே விளங்கும் வெள்ளி நிலவை குழந்தையாகிய கண்ணனிடம் விளையாட வருமாறு சாம பேத தான தண்டம் என்னும் நால்வகை உபாயங்களால் அழைக்கின்றார். கவின் நிலவே! ஒளிமயமான மண்டலம் உன்னை எவ்வளவு தான் ஒளியினை நிறைத்து அழகு செய்தாலும் ஒப்பற்ற என் மகன் கண்ணன் திருமுகத்திற்கு நீ ஒப்பாக மாட்டாய்! யாவரும் வியந்து போற்றும் நற்குணங்களை யுடையவனும் திருவேங் கட மலையில் கோயில் கொண்டுள்ளவனுமாகிய இவன் உன்னை ஓயாமல் அழைக்கின்றான். உன்னை அழைக்கும் அவன்கைகள் வருந்தாவண்ணம் மிகவிரைவாக நீ ஓடோடி வருவாய் " என அழைப்பது குறிப்பிடத்தக்கது.

கலித்தொகையில்,

" சுடர்த்தொடீ கேளாய் தெருவில்நாம் ஆடும்
மணல்சிற்றில் காலில் சிதையா - அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி "32

என்று இப்பருவப் போக்குள்ள பாடலடிகள் காணப்பெறு கின்றன. நாச்சியார் திருமொழியில் பத்துப் பாடல்கள் சிற்றில் இழைத்தல் பற்றி வருகின்றன.

சிறுபறை முழக்கல் பற்றிய செய்தி,

"பெருமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறுதோள் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத் தெழுகிய குரீஇப் போலக்
கோல்கொண் டலைப்பப் படீஇயர் மாதோ"33

என்று நற்றிணையில் இடம் பெற்றுள்ளது.

பொன்போன்ற கால்களையுடைய சிறுவர்கள் இல்லத்தின் முற்றத்தில் மூன்று கால்களையுடைய சிறிய தேரினை உருட்டி விளையாடுவர் என்னும் குறிப்பு பட்டினப்பாலையில் கலித் தொகையிலும் இடம் பெற்றுள்ளது. அன்றியும் சிறுவர்கள் சிதேர் உருட்டி விளையாடுவர் என்றும் குறிப்பு பெரும் பாணாற்றுப் படையிலும் குறுந்தொகையிலும் ஐங்குறுநூற்றிலும் காணப்பெறுகின்றன.

சிறுவர்கள் நீராடிக் களித்தல் பற்றிய செய்தி புறநானூற்றில் இருக்கின்றது தைத்திங்களில் நீராடல் சிறப்புடையதாகக் கருதப் பெறுகின்றது. இதனை,

" தாயருகா நின்றுதவத்தைந் நீராடுதல் "
" தைஇத் திங்கள் தண்கயம் படியும் "

என வரும் சங்க இலக்கியப் பாடலடிகளால் அறிய முடிகின்றது. திருப்பாவை, திருவம்பாவை நூல்கள் பாவை நீராடலைச் சிறப்பிக்கின்றன.

தொடக்கத்தில் அம்மானைப் பாடல் நாட்டுப் புறப் பாடல் வகையைச் சார்ந்ததாகவே இருந்திருக்க வேண்டும். சிலப்பதிகாரத்திலுள்ள அம்மானைப் பாடல்களும் திருவாசகத்திலுள்ள திருவம்மானைப் பாடல்களும் இதற்குச் சான்றாகின்றன.

புறா ஒன்றிற்காகத் துலாத்தில் ஏறி விண்ணவர் போற்றத் தன் உடம்பை அரிந்த மன்னவன் யார்? தன் உடம்பினை அரிந்த மன்னவன் யாவரெனில் அரண்மனை

வாயிலின் முன்வந்த பசுவின் பொருட்டுத் தன் மகன் மீது தேர்க்காலைச் செலுத்தி முறை செய்த வேந்தனாவான். அத்தகைய மன்னனுடைய புகார் நகரினைப் புகழ்ந்து அம்மானைப் பாடுக" என்றும் திசை யானைகள் எட்டும் அஞ்சி இமையாமல் பார்க்குமாறு இமய நெற்றியில் புலியினை எழுதியோன் எவன்? இமய மலையில் புலியைப் பொறித்தோன் எட்டுத்திசைகளையும் தன்னுடைய குடை நிழலில் வைத்துக் காத்தவன் சோழ மன்னன் ஆவான், அத்தகைய சோழ மன்னனுடைய புகார் நகரைப் புகழ்ந்து அம்மானை பாடுக என்றும் சிலப்பதிகாரத்தில் வரும் கருத்துக்கள் கதை, வரலாற்றுக் குறிப்புள்ளன வாகத் திகழ்கின்றன.

கலம்பக உறுப்புக்கள் பதினெட்டனுள் அம்மானை நான்காவது உறுப்பாகும். மூன்று பெண்கள் பாடிக் கொண்டே அம்மானைக் காய்களை வைத்து ஆடுவர். ஒருத்தி தலைவனைச் சிறப்பிக்கக் கதை அல்லது புராணச் செய்தி ஒன்று கூறுவாள்; இரண்டாமவள் அதிலோர் ஐயத்தை எழுப்புவாள். மூன்றாமவள் இருவரும் ஏற்கக் கூடிய விடையினை வழங்குவாள். அவ்விடை சிலேடை நயத்துடன் விளங்கும். மூவரும் அம்மானை என்னும் சொல்லைச் சொல்லியே தத்தம் உரையாடலை முடிப்பர். உலா நூல்களிலும் அம்மானை இடம் பெறுவதுண்டு. பாட்டுடைத் தலைவன் உலா வரும் பொழுது அவனைக் காண முற்படுவதற்கு முன்பு பேதை அல்லது பெதும்பைப் பருவப் பெண்கள் அம்மானை ஆடிக்கொண்டிருப்பது வழக்கம்.

ஊசற் பருவம் பற்றி அகநானூற்றில் "வளைந்த கழியிலுள்ள தாழை விழுதாலாய கயிற்றால் புலிநகக் கொன்றையின் உயர்ந்த கிளையில் கட்டித் தொங்க விட்ட ஊசலில் ஆடியும்" என்னும் செய்தி இடம் பெற்றுள்ளது சிலப்பதிகாரத்தில் மூன்று பாடல்களில் ஊசல் பற்றிய செய்திகள் விளங்குகின்றன. "கொடுஞ் சொல்லினையுடைய யவனரது வளமிக்க நாட்டினையும் இமயமலையினையும் தென்குமரி

யையும் ஆண்டு போர்க்குரிய வில், கயல், புலி ஆகியவற்றை உடையானாய்க் குடிகளைப் புரக்கும் தலைவனாகிய சேர மன்னனது பண்புகளைப் புகழ்ந்து மின்னலைப் போன்ற நுண்ணிடை துவள ஊஞ்சல் ஆடுவோம். வெற்றி பொருந்திய வில் இலச்சனையைப் புகழ்ந்து ஊஞ்சல் ஆடுவோம்" என வரும் கருத்து பிள்ளைத்தமிழின் ஊசற்பருவப் பாடற் கருத்துடன் ஒத்துக் காணத்தக்கது.

இதுகாறும் கண்டவற்றால் தொல்காப்பியர் காலத்தில் பிள்ளைத்தமிழுக்குரிய கரு இருந்தது என்பதும் நற்றிணை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, புறநானூறு ஆகிய பாட்டுத்தொகை நூல்களிலும் பத்துப் பாட்டு நூல்களிலும் சிலப்பதிகாரத்திலும் பிள்ளைத்தமிழ்ப் பருவப்போக்குள்ள செய்திகள் இருக்கின்றன என்பதும் புலனாகின்றன. இடைக்கால நூல்களாகிய பெருமாள் திருமொழி, நாச்சியார்திருமொழி, பெரியதிருமொழி, மும்மணிக்கோவை, பெரியபுராணம் ஆகியவற்றில் சங்ககால நூல்களைக் காட்டிலும் விரிவாகப் பிள்ளைத்தமிழ்ப் பொருண்மையுள்ள பாடல்கள் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது. பெரியாழ்வார் யயோதை நிலையில் நின்று கண்ணனைக் குழந்தையாகப் பாவித்து அவனின் பிறப்பு, உருவஅழகு, தாலாட்டு, நிலாவை அழைத்தல், செங்கீரை, சப்பாணி, வாரானை, ஓடிவந்து தன்னை அணைத்துக் கொள்ளுமாறு தாய் குழந்தையை அழைத்தல், புறம் புல்குதல், அப்பூச்சி காட்டுதல், முலையுண்ணுமாறு அழைத்தல், காது குத்தல், எண்ணெய் நீராட அழைத்தல், காக்கையை அழைத்தல், மாடுமேய்க்கக் கோல் கொண்டு வரச் சொல்லல், பூச்சூட்டுவேன் வருக! என்றழைத்தல், குழந்தையின் குறும்புகளால் சுற்றுப்புறத்தார் தாயிடம் முறையிடலும் தாய் நோகலும் எனப் பதினெட்டுப் பருவ நிலைகளில் பாடியுள்ளார். ஒவ்வொரு பருவ நிலையிலும் பத்து அல்லது பதினொரு பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இவற்றை நோக்கும் பொழுது இவை அமைப்பாலும் பொருளாலும் பிள்ளைத்தமிழாகவே விளங்குகின்றது. இவற்றைக்

கற்ற அறிஞர்கள் மேற் கூறிய பதினெட்டுப் பருவ நிலைகளில் பத்துப் பருவங்களைத் தேர்ந்து கொண்டு பருவத்திற்குப் பத்துப் பாடல்கள் வீதம் நூறு பாடல்களைப் பாடிப் பிள்ளைத் தமிழைத் தோற்றுவித்தார் என்று கூறலாம். பிள்ளைத்தமிழ் என்னும் பெயரிலேயே நமக்கு முதன் முதலாகக் கிடைக்கும் நூல் கி. பி. 12 - ஆம் நூற்றாண்டில் ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்ட குலோத்துங்கன் பிள்ளைத்தமிழே. இது இரண்டாம் குலோத்துங்கனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு இயற்றப்பெற்றது. ஒட்டக்கூத்தரால் முழுமையாகத் தோற்றுவிக்கப் பெற்ற இவ்விலக்கியப்பணி பகழிக் கூத்தர், குமரகுருபரர், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலான அறிஞர்களால் நன்கு செழித்து வளர்ந்துள்ளது. இதுவரை முன்னூறு பிள்ளைத்தமிழ் நூல்கள் தோன்றி யுள்ளன.

## அடிக்குறிப்புகள்

(1) காண்க : பின்னிணைப்பு : இதுவரை தெரியவந்துள்ள பிள்ளைத்தமிழ் நூல்களின் அகர வரிசைப் பட்டியல்

(2) தேவாரம் : 1-11 - 4

(3) மேற்படி : 1 - 16 - 6

(4) மேற்படி : 4 - 1 - 6

(5) டாக்டர் மு. வரதராசன், இலக்கியமரபு, பக்கம் : 22.

(6) வாழ்க்கைத் துணைநலம், குறள் எண் : 4

(7) புதல்வரைப் பெறுதல், குறள் எண் : 4

(8) புறநானூறு, பா. எண் : 188

(9) நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் : 7 - 3 - 1

(10) தொல். புறம். இளம் : 24

(11) பாடாண் : 50

(12) "பிள்ளைப்பாட்டே தெள்ளிதின் விளம்பின்
மூன்று முதலா மூவேழ் அளவும்
ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே"
பன். நூற்பா. எண் : 101

(13) "நிறை உவகை ஆண்மகவிற்கு எழு
ஐம்மூ ஆண்டே அவர்முதல் காற்றல்"
பா. ப். இன. 21

(14) "மூன்றைந் தேழுசம் ஆண்டினும் ஆகும்"
இ. வி. 810

(15) "முறைதரு மூன்று ஆதி மூவேழு ஈறாம் திங்கள்
அறைக நிலம் பத்தும் ஆண்டு ஐந்து ஏழ் -
இறைவளை - யார்க்கு
அந்தம் சிறுபறையே யாதியாய் மூன்று ஒழித்துத்
தந்தநிலம் ஓரேழும் சாற்று"
வெண். பா. செய். 6.

(16) பன். இ. 30
(17) பன். இ. 21
(18) இ. கா. 29; இ. கா. 30
(19) பன். படலமேற்கோள் நூற்பா.
(20) வெண். செய். 7
(21) ப. பா. 105
(22) இ. வி. 47
(23) பன். இ. 24
(24) கலைக்களஞ்சியம், தொகுதி, - 7, ப. 379
(25) பா. எண். 9

(26) பா. எண் : 66

(27) கண்ணப்ப நாயனார் புராணம்

(28) பெரியாழ்வார் திருமொழி : 1 - 7 - 2

(29) திருஞான சம்பந்தர் புராணம்.

(30) பா. எண் : 54 : 17 - 19

(31) பா. எண் : 160 : 22 - 24

(32) பா. எண் : 86

(33) பா. எண் . 58 : 1 - 4

## 2. சிவபெருமானுக்குப் பிள்ளைத்தமிழ் பாடாமை

"தென்னாடுடைய சிவனே எந்நாட்டவர்க்கும் இறைவன்" என்னும் கருத்து பரவலாக நிலவி வருகின்றது. சிவபெருமானே பழம் பெருந்தெய்வம். மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகத்திலேயே இலிங்க வழிபாடு இடம் பெற்றுள்ளதை நோக்கும் பொழுது சைவத்தின் தொன்மை துலங்கும். சிவபெருமானுடைய இயல்புகளைச் சேரமான் பெருமாள் நாயனார்,

> "திருமாலும் நான்முகனும் தேர்ந்துணரா தன்றங்
> கருமால் உறஅழலாய் நின்ற பெருமான்
> பிறவாதே தோன்றினான் காணாதே காண்பான்
> துறவாதே யாக்கை துறந்தான் - முறைமையால்
> ஆழாதே ஆழ்ந்தான் அகலா தகலியான்"[1]

எனப் பாடியுள்ளார். இத்தகைய இயல்புகள் கொண்ட இறைவனைக் குழந்தையாகப் பாவித்துப் பிள்ளைத்தமிழ் பாடும் வழக்கம் இல்லை. என்றாலும் சிவபெருமான் குழந்தையாகி அழுகின்ற காட்சி திருவிளையாடற் புராணத்தில்,

> " எழுதரிய மறைச் சிலம்பு கிடந்து புறத்
> தலம்ப அன்பர் இதய மெனும்
> செழுமலர் ஓடையின் மலர்ந்து சிவானந்தத்
> தேன்ததும்பும் தெய்வக் கஞ்சத்
> தொழுதகு சிற்றடிப்பெரிய விரல்சுவைத்து
> மைக்கணீர் துளும்ப வாய்விட்டு
> அழுதணையா டையிற்கிடந்தான் அனைத்துயிரும்
> ஈன்றுகாத் தழிக்கும் அப்பன் "[2]

எனக் கூறப் பெற்றுள்ளது.

# 8. நூலாசிரியர்களின் வரலாறும் தனித்தன்மைகளும்

சைவ சமயப பிள்ளைத்தமிழ் இலக்கியங்களைப் படைத் தளித்த இலக்கியக் கருத்தாக்களின் வரலாறும் தனித்தன் மைகளும் இங்கே கூறப்பெறுகின்றன.

## அழகிய சொக்கநாதர் :

இவர் திருநெல்வேலிக் காந்திமதியம்மை பிள்ளைத்தமிழை இயற்றியவர். திருநெல்வேலியைச் சேர்ந்த தச்சன் நல்லூரில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். முத்துசாமி என்னும் வள்ளலால் ஆதரிக்கப் பெற்றவர். இளமையிலேயே வளமிக்க கவிபாடும் ஆற்றலும் திருவருட் சிந்தனையும், சைவ சமயப் பற்றும் மிக்கவராய்த் திகழ்ந்தவர். "கலையின் அகத்தியன் என்னும் சிறப்புப் பெயர் கொண்டவர். திருவனந்த புரம் இசைமணி இலக்குமணப் பிள்ளையவர்கள் தம் இசைப் பயிற்சிக்கு அடிகோலியது அழகிய சொக்கநாதர் பாடிய தமிழிசைப்பாட்டே" எனக் குறிப்பதினின்றும் இவர்தம் இசைப் புலமை புலனாகும்.

## பாவலர் சீ. அன்பானந்தம் :

மறைமலையடிகள் பிள்ளைத் தமிழை இயற்றியவர் களுள் இவரும் ஒருவர். இவர் இராமநாதபுர மாவட்டம் திருப்புத்தூரை அடுத்து சிங்கம் புணரியில் 28 - 3 - 1932 - இல் பிறந்தார். தந்தை சின்னமுத்துப் பிள்ளை; தாய் பொன்னழக அம்மையார். இளமையிலேயே பா புனைவதில் வல்லவர். பள்ளிப்பருவம் முடிந்தவுடன் மலேசிய நாட்டிற்குச் சென்று பினாங்கு நகரத்தில் வாணிபத்தில் ஈடுபட்டவர். என்றாலும் தமிழ்மொழியிடத்துப் பெரும் பற்று கொண்ட புலமையாளர் மலேசிய நாட்டிலும் தமிழ் நாட்டிலும் தமிழிலக் கியத் தொடர்பான பல போட்டிகளில் கலந்து கொண்டு பல பரிசுகளைப் பெற்றுள்ளார். மலேசிய நாட்டில் பினாங்கு மாநில ஆளுநர் 16 - 7 - 78 - இல் இவருக்கு பி. ஜே. கே.

என்றும் அரசாங்கச் சிறப்பு விருதினை வழங்கிப் பெருமை சேர்த்துள்ளார்.

இவர் எழுதிய உடைந்த வளையல், பாசத்தின் பரிசு போன்ற சிறுகதைகளும், கிணற்றுத்தவளை, கனிமொழி போன்ற குறுங்காவியங்களும் ஆனைமுகன், ஆறுமுகன் அந்தாதிகளும் பாராட்டுதற்குரியன. இவர் வடலூரார் வள்ளலார் நெறியில் வாழ்வும் பெற்றியர்.

## தவத்திரு கந்தசாமி சுவாமிகள் :

இவர் கொங்கு நாட்டிலுள்ள கோயமுத்தூருக்கு வடக்கே ஏழுகல் தூரத்திலுள்ள சிரவணபுரம் என்னும் ஊரினர். கொங்கு வேளாளத்திருமேனியினர். தவத்திரு இராமானந்த சுவாமிகள் சீடர். இவரின் பிள்ளைத் திருநாமம் கந்தசாமி. தீட்சாநாமம் கந்தசாமி சுவாமிகள். இவர் தமது முப்பதாம் வயதில் பழநி மலையில் மேற்படி ஞானாசிரியரிடம் கௌமார பஞ்சாக்கர மந்திர உபதேசமும், சந்நியாசமும் பெற்று, அவரால் அவரது கௌமார அருட்ட இளவரசுப்பட்டம் சூட்டப்பெற்றவர். இவர் துறவொழுக்கத்தில் நிலைத்தொளிரும் சமரச ஞானானு பூதிச் செல்வர். சந்த வண்ணமாகிய எந்த வண்ணயாப்பிலும் நாற்கவியும் விரைந்து பாடும் இயல்பினர். இவரியற்றிய வேறு நூல்கள் பக்தி மான்மியம் முதலியன. தமிழ்ப்புலமை யுடன் வடமொழி, மலையாள மொழிப் புலமையும் உடையவர்.

## கந்தப்ப தேசிகர் :

இவர் திருத்தணிகைப் பிள்ளைத்தமிழை இயற்றியவர் கந்தப்ப முனிவர், கந்தப்பையர் என்னும் சிறப்புப் பெயர்கள் உடையவர். பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் திருத் தணிகையில் வாழ்ந்தவர். திருவாவடுதுறையைச் சார்ந்த கவி ராட்சசர் என்னும் சிறப்புப்பெயர் வாய்ந்த வரும் தணிகைப் புராணம் முதலியன பாடிய வருமான ஸ்ரீகச்சியப்ப முனிவரின் மாணாக்கர். இவரியற்றிய வேறு நூல்கள் தணிகாசல புராணம், தணிகைப் புராணம்,

**கலைவாணன் :**

இவர் காவை முருகன் பிள்ளைத்தமிழை இயற்றியவர். தமிழகம் அறிந்த கவிஞர். அனைத்திந்தியக் கவிதா சம்மேளனத்தில் பங்கு கொண்டு தமிழ் மொழிக்குப் புகழ் சேர்த்தவர். கவிதையில் மிக்க ஆர்வமுடையவர்.

**குமரகுருபரர் :**

இவர் மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ஆகிய நூல்களை இயற்றியவர். சிவத்தொண்டில் சிறந்து விளங்கியவர். அறுபத்து மூன்று நாயன்மார்களுடைய வரிசையில் வைத்து எண்ணத் தகும் சிறப்புடையவர்.

இவர் இளமையிலேயே செந்திலாண்டவன் திருவருள் கைவரப் பெற்றவர். பிறந்து ஐந்தாண்டுகள் ஆகியும் பேச வில்லை. இதனைக்கண்டு வருந்திய பெற்றோர் திருச்செந்தூர் சென்று முருகனருள் வேண்டினர். தம்மை வேண்டுவோர்க்கு வேண்டியவாறு அருள் வழங்கும் முருகப்பெருமான் குமரகுருபரர்க்குத் திருவருள் வழங்கினான். இவர் அப்பெருமான் மீது 'கந்தர் கலிவெண்பா' அருளினார். முருகப்பெருமான் இவர் கனவிலே தோன்றி "நீ குருபரனாகுக" என்றருளியதால் அன்று முதல் இவர் குமரகுருபரர் என அழைக்கப் பெற்றார்.

இவர் பதினேழாம் நூற்றாண்டினர். பாண்டி நாட்டிலுள்ள ஸ்ரீவைகுண்டத்தில் தோன்றியவர். வேளாளர் குலத்தினர். சண்முக சிகாமணிக் கவிராயரும் சிவகாமியம்மையாரும் இவருடைய பெற்றோர் ஆவர்.

இவர் மேற்குறித்த நூல்களே அன்றி மீனாட்சியம்மை குறம், மீனாட்சியம்மை இரட்டை மணிமாலை, மதுரைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட் கோவை.

சிவகாமியம்மை இரட்டை மணிமாலை, பண்டார மும்மணிக் கோவை, காசிக்கலம்பகம், சகலகலா வல்லிமாலை ஆகிய சிற்றிலக்கியங்களையும் இயற்றியுள்ளார். பிள்ளைத்தமிழ் என்றவுடன் யாவர்க்கும் முதலில் நினைவுக்கு வருவது மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழே. இப்பிள்ளைத்தமிழ் அரங் கேற்றத்தின்போது இறைவியே எழுந்தருளி வந்து இவருக்குப் பரிசளித்தார் என்பது வரலாறு.

டாக்டர் உ. வே. சாமிநாதையர் " குமரகுருபரர் கருவிலே அருளுடையவர்; பிறந்தபோதே அருள் கூட்ட நல்லிளமை யில் தமிழறிவும் தெய்வப் பக்தியும் வாய்ந்து பல கலைகளையும் அறிந்து தலவழிபாடு செய்து ஞானாசாரியரது உபதேசம் பெற்றார். புலமையால் பெற்ற பெருமையோடு தவவொழுக்க த்தால் பெற்ற பெருமையும் சேர்ந்து பொன்மலர் மணப்பது போல இவருடைய சிறப்பை மிகுதியாக்கியது. இவர் ஒரு சிறந்த பக்தர் நிறை புலமையுடைய நாவலர்; உலகியல் அறிந்த பேரறிவாளர்; உயர்ந்த ஞானம் நிறைந்த தவச்சீலர்; பிறருக்கு நல்லுரை' நவிலும் பெரியார் எனக் குமரகுருபரரைப் போற்றுவது இவருடைய தனித்தன்மைக்குச் சான்றுகளாகும். குமரகுருபரர் " சிற்றிலக்கிய வேந்து " எனப் போற்றப் பெறும் சிறப்புடையவர்.

### சங்கர பாண்டியனார் :

இவர் திருமலை வயிரவர் பிள்ளைத்தமிழை இயற்றி யவர். இளம் வயதிலேயே குமரன்மீது அளவற்ற பற்று உடையவர்; இனிய பாடல்களை அவன் மீது பாடியவர் குமரன் திருவருள் துணைக் கொண்டு தம் வாழ்க்கையை நடத்தியவர். தூய ஒழுக்கமும் பொது நோக்கமும் அருட் பண்பும் உடையவர்.

> "ஒட்டக்கூத் தன்கவியும் ஓங்கியகம் பன்கவியும்
> பட்டப் பகல் விளக்காய்ப் பட்டவே - அட்ட திக்கும்
> வீசுங் கவிவீர ராகவனாம் வேளாளன்
> பேசுங் கவிகேட்ட பின்"

என்னும் பாடலால் இவரின் தனித்தன்மை விளங்கும்.

இவர் இப்பிள்ளைத்தமிழே அன்றி, திருக்கழுக்குன்றப் புராணம், திருவாரூர் உலா, சந்திரவாணன் கோவை, கயத்தாற்றரசன் உலா, திருக்கழுக்குன்றமாலை, சேயூர்க்கலம்பகம் ஆகியவற்றையும் எழுதியுள்ளார். இவர் பதினேழாம் நூற்றாண்டினர். விஜயநகர அரசின் அமைச்சராயிருந்த திம்மராஜாவின் பரம்பரையினர் என்பர்.

***சிவப்பிரகாச சுவாமிகள் :***

இவர் சிவஞான பாலைய தேசிகசுவாமிகள் பிள்ளைத் தமிழை இயற்றியவர்; காஞ்சிபுரத்தைச் சார்ந்தவர்; குமாரசாமி தேசிகரின் புதல்வர்; திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள துறைமங்கலம் என்னும் ஊரிலும் தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள நல்லாற்றூரிலும் வாழ்ந்தவர். தருமபுர ஆதீனம் வெள்ளியம்பல வானத் தம்பிரான் சுவாமிகளிடம் இலக்கண நூல் கற்றவர். பொம்மபுரம் சிவஞான பாலைய தேசிக சுவாமிகளை ஞானாசாரியராக அடைந்தவர். தமிழ், வடமொழி, தெலுங்கு ஆகிய மொழிகளில நல்ல புலமை உடையவர். தமிழ்மொழியிலுள்ள இலக்கிய இலக்கணங்கள், தருக்கம், சோதிடம், சைவசித்தாந்தம், வேதாந்தம், வீரசைவ சித்தாந்தம், வடமொழி ஆகமப் பயிற்சி முதலியவற்றில் வல்லவராக விளங்கியவர். "கற்பனைக் களஞ்சியம்" "கவிதார்க்கிக சார்வபௌமர்" எனப் போற்றப் பெறும் சிறப்புடையவர்.

இவர் பள்ளிச்சிறுவர் முதல் வீட்டின்பம் விழைவார் வரை கற்கத்தகும் அரிய செந்தமிழ்ப் பனுவல்கள் முப்பத்து நான்கு இயற்றியுள்ளார். பிரபுலிங்கலீலை, திருவெங்கைக் கோவை, திருவெங்கையுலா, நால்வர் நான்மணிமாலை, பெரியநாயகி அம்மை கலித்துறை, சீகாளத்திப்புராணம், கூவப்புராணம், நன்னெறி, சோணசைலமாலை, நெஞ்சுவிடு தூது, தாலாட்டு முதலிய நூல்கள் குறிப்பிடத்தக்கவை.

## சி. கே. சுப்பிரமணிய முதலியார் :

இவர் திருப்புக் கொளியூர் அவிநாசிப் பெருங்கருணையம்மை பிள்ளைத்தமிழை இயற்றியவர். சைவத் திருவாளர் எனப்போற்றப் பெறும் சிறப்பினர். கோயமுத்தூரைச் சேர்ந்தவர். தொண்டை மண்டலச் சைவ வேளாளர் குலத்தினர். வித்துவான் கந்தசாமியின் புதல்வர். கோவை நகர் தேவஸ்தானக் கழகத்தலைவர். சிவத்தொண்டில் சிறந்து விளங்குபவர்.

## சொக்கலிங்கய்யா :

இவர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர் ஆகிய சைவ சமயக்குரவர் நால்வர் மீதும் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார். மேலும் சிவகாமியம்மை பிள்ளைத் தமிழும் இயற்றியுள்ளார். செய்யுள் உரைநடை ஆகிய இரு துறைகளிலும் மொத்தம் இவர்' இயற்றிய நூல்கள் நூற்றெட்டு என்பர்.

இவர் காரைக்குடியில் நாட்டுக்கோட்டை நகரத்தார் மரபில் பிள்ளையார் பட்டிக் கோவிலுரிமையுடைய குடும்பத்தில் தோன்றியவர். இளமையில் யாழ்ப்பாணம் போயிருந்த காலத்தில் அங்கே அறிஞர் ஆறுமுக நாவலர் அவர்களிடமும் அவருடைய மாணாக்கரான பொன்னம் பலப்பிள்ளையிடமும் பின்னர், தேவகோட்டை வன் தொண்டச் செட்டியார், காரைக்குடி மெய்யப்ப சிவாமிகள் ஆகியோரிடமும் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தவர்.

இவர் தமது பதினெட்டாம் வயதில் யாழ்ப்பாணத்தில் சிறப்புத்தீட்சை - திருவாசகபூசையும், பின்னர்த் திருநெல்லூர்ப் பெருமணத்தில் நிருவாண தீட்சை சிவபூசையும் பெற்றுக் கொண்டு சமயநெறி நின்று எழுபத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்தவர்; சுத்தாத்து வித சைவசித்தாந்தச் செந்நெறி தழைத்தோங்கவேண்டுமென்ற பெருநோக்குடன் மெய்கண்ட சித்தாந்த வித்தியாசாலை என்னும் பெயருடன் சிதம்பரத்தில் ஒரு கல்வி நிலையத்தை நிறுவியுள்ளார்.

**அரு. சோமசுந்தரன் :**

மறைமலை அடிகள் பிள்ளைத்தமிழ் நூல்களை இயற்றியவர்களில் இவரும் ஒருவர். இவர் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சார்ந்த புதுவயல் என்னும் ஊரினர். தாய் மீனாட்சி. தந்தை முத்துராமன். பிறந்த ஆண்டு 1936.

இவர் கிட்டத்தட்ட அறுபது நூல்கள் இயற்றியுள்ளார். ஐயாயிரத்துக்கு மேற்பட்ட கவிதைகள் யாத்துள்ளார். பல்துறைச் செந்நாப்பாவலர். கவிஞர்கோ, உலகம் சுற்றும் பொற்கிழிக்கவிஞர் என்னும் சிறப்புப் பட்டங்களைப் பெற்றவர். சிறந்த சொற்பொழிவாளர். இலங்கை, நேபாளம், பிரிட்டன், பிரான்சு, ஜெர்மனி, சுவிட்சர்லாந்து, இத்தாலி, பெல்ஜியம், ஹாலந்து முதலிய நாடுகளில் சுற்றுப் பயணம் செய்து சொற்பொழிவு ஆற்றியவர். இவரது கவிதைகள் சில ஆங்கிலத்தில் " Lyrical Cavalcade " என்னும் நூலக வெளிவந்துள்ளது இவர் சிறந்த கதாகாலட் சேபகர்.

**தாண்டவராயப் புலவர் :**

இவர் திருமயிலைச் சிங்காரவேலர் பிள்ளைத்தமிழை இயற்றியவர். தொண்டைநாட்டைச் சார்ந்தவர். மயிலாப்பூரில் வாழ்ந்து வந்து பூம்பாவை வேலப்ப முதலியார் என்னும் செல்வரின் ஆதரவினால் இப்பிள்ளைத்தமிழையும் " திருமயிலை யமகவந்தாதி " " சிங்காரவேலர் வெண்பா " என்னும் நூல்களையும் இயற்றி அரங்கேற்றினர். பதினெட்டாம் நூற்றாண்டினர்.

**தெய்வசிகாமணிக் கவிராயர் :**

இவர், அறம் வளர்த்த அம்பிகைபேரில் பிள்ளைத்தமிழ் இயற்றியவர். வேளாளர் குலத்தினர். பெரும்புலமை உடையவர். அம்மை அருளினைப் பெரிதும் வேண்டியவர். குறுநில மன்னராகிய செந்தில் காத்த மூப்பனாருக்குத் தோழரும் புலவரும் ஆவார். பதினெட்டாம் நூற்றாண்டினர்.

### பகழிக்கூத்தர் :

இவர் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழைப் பாடியவர். அந்தண மரபினர். திருமால் அடியவர். மறைகளின் மெய்ப் பொருள் உணர்ந்தவர். தமிழ் இலக்கண இதக்கியங்களைக் கற்றுத்துறைபோகிய வித்தகர். இம்மெய்யடியார் சேது மன்னர் ஆட்சிக்கு உட்பட்டிருந்த செம்ப நாட்டுச் சிற்றூ ராகிய சன்னாசிக் கிராமத்தினர். இவர் தந்தையார் வேதாக மங்களை உணர்ந்து மெய்ப்பொருள் அறிந்த தர்ப்பாதனர்.

பகழிக்கூத்தர் ஒருமுறை கொடிய வயிற்று வலியில் வாடி வருந்தினார். எத்தனையோ மருந்துகள் உட்கொண்டும், நோய்தீர்ந்தபாடில்லை. இவர் திருமால் அடியவராய் இருந்தும் திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள செவ்வேளின் திருவருள் வேண்டி இப்பிள்ளைத்தமிழை இயற்றியுள்ளார். இறைவன் திருவருளால் வயிற்று வலியும் நீங்கியது.

சிதம்பர முனிவர்,

> " வரு புலவர் கொண்டாடும்
> நல்ல பகழிக் கூத்தர் "

என இவரைப் பாராட்டுவர். இந்நூலே அன்றி இவர் திருத் தக்கத் தேவரின் சீவக சிந்தாமணியை அடியொற்றிச் " சீவக சிந்தாமணிச் சுருக்கம் " என்னும் நூலையும் இயற்றியுள்ளார்.

### கவிராசப் பண்டாரத்தையர் :

இவர் திருமலை முருகன் பிள்ளைத்தமிழ், திருவிலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ் என்னும் நூல்களை இயற்றியவர் இவர்தம் அவையடக்கச் செய்யுளில் திருமலை முருகன் பிள்ளைத்தமிழை "வெள்ளைத்தமிழ்" என்று குறிப்பிடுவர். இவர் தமிழ் இலக்கண இலக்கியப் புலமை உடையவர். ஒழுக்க நெறி நின்ற குணசீலர். நற்கவிபாடும் நற்புலவர். கவிராசர் என்னும் சிறப்புமிகு பட்டத்திற்கு உரியவர். ஏறத்தாழ எழுபத்தைந்து ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவர்.

### மருதாசலக் கவுண்டர் :

இவர் மருதாசலப் பிள்ளைத்தமிழை இயற்றியவர். கோயமுத்தூரின் வடகிழ்ப்பால் ஏழுமைல் தூரத்திலுள்ள விளாங்குறிச்சி என்னும் ஊரினர். கொங்குவேளாளமரபினர். அவ்வூர் மணியக்காரர் ம. நாச்சிமுத்துக் கவுண்டரின் புதல்வர் பிரமசரியம் மேற்கொண்டவர். ஈசுவர பக்தி உடையவர். மன அமைதி, சகிப்புத்தன்மை முதலிய நல்லியல்புகள் உடையவர்.

இவர் தாய்மொழிப்பற்று மிக்குடையவர். தாம் ஆங்கில மொழி கற்கப் பன்னாள் கழித்ததாகவும் அதனால் ஒரு நலனும் காணேன் என்றும் தாய்மொழியால் பல நன்மைகளையும் அடைந்ததாகவும் இப்பிள்ளைத்தமிழில் கூறியுள்ளார்.

"பாசத்தனமே மிகமலிசொற் பதரேபோலும் புறமொழியின்
பரவை நெடுநாள் மூழ்கவைத்துப் பசியநத்தெய்வத்தமிழின்
ஆசைவாரி தனிலழுத்தி யன்றுமலர்ந்த குராக்கடம்போ
டதிகநறிய வலங்கறொடுத் தடியேன்றுதித்தல் பன்னிருபு
யாசலத்திற் புனைந்தருள வயில்வேற்படையை நெடுந்தண்டை
யணிவான் றோளிற் கராம்புயத்தி லணிந்தேயக்கு நீறிலக
மாசிலிள வெண்ணகையோடுநேர் வருக வருக வருகவே"

இப்பாடலோடு,

"செலவு தந்தைக்கோர் ஆயிரம் சென்றது
தீதெ னக்குப்பல் லாயிரம் சேர்ந்தன
நலமொ ரெட்டுணை யுங்கண்டி லேனிதை
நாற்ப தாயிரம் கோயிலில் சொல்லுவேன்"

என்னும் பாரதியார் பாடலடிகள் இணைத்துக் காணத்தக்கவை.

### மாசிலாமணி தேசிகர் :

இவர் திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழைப் பாடியவர்,

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனக் குருமூர்த்தி களில் ஒருவர். இவர் ஞானபீடத்தில் ஆசாரியராய் இருந்தது கி.பி. 1625 முதல் 1658 வரை. இவர் திருவெண்காட்டில் தவம் செய்தவர்.

## மாதவச் சிவஞான யோகிகள் :

இவர் குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், திருக் கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் என்னும் இரு நூல்களை இயற்றியவர். தென்பாண்டி நாட்டுப் பொதியமலைச் சாரலிலுள்ள பாவநாசத்தைச் சார்ந்த விக்கிரம சிங்கபுரம் என்னும் ஊரில் தோன்றியவர். முக்களாலிங்கர் என்பது இவருடைய இயற்பெயர். இவர்தம் பெற்றோர் ஆனந்தக் கூத்தரும் மயிலம்மையாருமாவார். இவர் சைவ வேளாள மரபினர்.

இவர் இளமையிலேயே திருவாவடுதுறை முனிவர்கள் பால் அன்புகொண்டு அம்முனிவர்களோடு பல சிவத்தலங் கண்டு வணங்கிப் பின்னர் அவ்வாதீனப் பேராசிரியர் நமசிவாய மூர்த்திகளின் அருள் பெற்றவர். பின்னர் வேலப்பத்தேசிகப் பெருமான் திருவடி பணிந்து அவர் திருவருளில் துறவியாகிச் சிவஞானமுனிவர் என்னும் திருப்பெயர் பெற்றார். சிவநெறி விளக்கும் செந்தமிழ் நூல்களையும், வடமொழி நூல்களையும், ஏனைய கலைச்செல்வங்களையும் கற்றுத்தெரிந்த திருவுள்ளத் தோடு விளங்கினார். சிவத்தொண்டே செம்மையான தொண் டாகக் கொண்டவர். சிறந்த ஆசிரியராக விளங்கியவர்

தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, இலக்கண விளக்கச் சூறாவளி முதலிய இலக்கண நூல்களையும் காஞ்சிப் புராணம் (முதற்காண்டம்) சோமேசர் முதுமொழி வெண்பா, திரு முல்லைவாயில் அந்தாதி, இளமைப் பதிற்றுப்பத்து அந்தாதி முதலிய இலக்கிய நூல்களையும் சிவ தத்துவ விவேகம் சித்தாந்தப் பிரகாசிகை, சிவஞான போதச் சிற்றுரை முதலிய தருக்க நூல்களையும் இவர் படைத்துள்ளார்.

## மார்க்க சகாயதேவர் :

இவர் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழைப் பாடியவர் இத்தலத்தில் எழுந்தருளியுள்ள முருகன் பெயரையே தன் பெயராகக் கொண்டவர் இவர் காலம் கி.பி. பதினேழாம் நூற்றாண்டு. இவர் வரலாறு தெளிவாகத் தெரியவில்லை.

இப்பிள்ளைத்தமிழில் ஆசிரியர் பிள்ளையார் வணக்கத்தில் வேண்டியபடி செந்தமிழ் அமுதவாக்கு மதமா முகக் கடவுளால் இவர்க்கு நிரம்ப அருளப் பெற்றுள்ளது என்பது இப்பிள்ளைத்தமிழால் விளங்குகின்றது. காப்புப் பருவத்தில் மற்றை ஆசிரியர் அமைக்காத புதுமுறையில் திருவருள், திருநீறு, மார்க்க சகாய சுவாமி, மரகதவல்லி, கங்கை, கணபதி, வைரவன், திருவேல், திருமயில், திருமுருகாற்றுப் படை, திருப்புகழ் என அழைத்திருப்பது ஆசிரியரின் தனித் தன்மையைக் காட்டுகின்றது.

## மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை :

இவர் சேக்கிழார் பிள்ளைத்தமிழ், திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் முதலிய பத்து நூல்களை இயற்றியுள்ளார். மேலும் இவர் இருபத்திரண்டு தல புராணங்களையும் சிவஞானயோகிகள் சரித்திரம் முதலிய மூன்று சரித்திர நூல்களையும் மருதவாணர் பதிகம் முதலிய நான்கு காப்பியங்களையும், பழமைப் பதிற்றுப்பத்தந்தாதி முதலிய ஆறு பதிற்றுப்பத்தந்தாதி நூல்களையும், குடந்தைத் திரிபந்தாதி முதலிய நான்குதிரிபத்தந்தாதி நூல்களையும் தில்லையமக அந்தாதி முதலிய மூன்றுயமக வந்தாதி நூல்களையும் அகிலாண்ட நாயகி மாலை முதலிய ஏழு மாலை நூல்களையும் சீகாழிக்கோவை முதலிய மூன்று கோவை நூல்களையும் இவ்வாறாகக் கிட்டத்தட்ட எண்பத்திரண்டு நூல்களை இயற்றியுள்ளார்.

இவர் திருச்சிராப்பள்ளி மாவட்டத்திலுள்ள அதவத்தூரில் 1815-ஆம் ஆண்டு தோன்றியவர். தந்தை கணக்காயர்

சிதம்பரம் பிள்ளை. தாயார் அன்னத்தாச்சியார். திருவாவடு துறை வேலாயுத முனிவரிடம் சமய நூல்களையும் இலக்கியங் களையும் கற்று அவ்வாதீனத்திலேயே வித்துவானாகப்பொறுப் பேற்றவர். தம் பதினாறாம் வயதில் காவேரி ஆச்சியை மணந்தார். ஆதீனத்தில் மாணவர்களுக்கு நன்கு பாடம் கற்றுத்தந்தும் பல நூல்களை இயற்றியும் மகாவித்துவான் என்னும் சிறப்புப் பட்டம் பெற்றார்

இவர் காவிய அமைப்பில் கம்பராகவும், பக்திச்சுவை கனியப் பாடுவதில் தெய்வச் சேக்கிழாராகவும் இலக்கணச் செறி வும் சைவாகமக் கருத்துக்களும் அமையப்பாடுவதில் மாதவச் சிவஞான சுவாமிகளாகவும் கச்சியப்ப முனிவராகவும் கவிதை ஓட்டத்திலும் எங்கும் தெய்வச் சிந்தனை குறையாமல் அமைத்துச் செல்வதில் கச்சியப்ப சிவாசாரியராகவும் விளங்கிய வர் என அறிஞர் ச. தண்டபாணி தேசிகர் இவரைப் போற்றுவர்.

மேலும் இவரைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் கம்பர், தமிழ்க்காளிதாசன், நிமிட கவி, புராணம்பாடும் புலவன், தமிழைக் காத்த பெருமான், புலவர் முதல்வன், கவிக் கார் மேகம், செந்தமிழ்க் குருநாதன், சிவநெறிச் செல்வன் விற்பன்ன சிகாமணி, கருணை மூர்த்தி, இணையிலாப் புலவன், மெய்ஞ்ஞானக்கடல், புலவரேறு என்றெல்லாம் பலரும் போற்றுவர். இவர் காலம் கி. பி. 19-ஆம் நூற்றாண்டு.

### தவத்திரு தி. செ. முருகதாச சுவாமிகள் :

இவர் அருள்மிகு கொளஞ்சியப்பர் பிள்ளைத்தமிழை இயற்றியவர். தென் பாண்டி நாட்டுத் திருநெல்வேலியில் 1839 - இல் சைவ வேளாளர் மரபில் தோன்றியவர். இளமை யிலேயே முருகனருள் பெற்று கவிதை பாடியவர். 1898 - இல் ஞான சமாதி அடைந்தவர்,

### அந்தகக்கவி வீரராகவர் :

இவர் சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், செழியதரையன் பிள்ளைத்தமிழ், சேய்யூர் பிள்ளைத்தமிழ், விட்டினர் அம்மை

யப்பன் பிள்ளைத்தமிழ் என்னும் இலக்கியங்களை இயற்றி யுள்ளதாக அறியமுடிகின்றது. இவர் கண்ணொளி இழந்தவர் ஆயினும் பிறவிக்கவிஞர். இவரை டாக்டர் உ. வே. சாமி நாதையர்,

" கண்ணுடையென்னும் நுறட்கிலக்காகிக் கவின்றிலங்கும்

பண்ணுடைச் செல்வன் கவிவீரராகவன் "

என்றும், யாழ்ப்பாணம் கதிரைவேற்பிள்ளை அவர்கள்,

" கண்ணாவென் கண்ணாறு மற்றையபல்
கண்ணாரும் காணாக் காதல்
பண்ணாரும் தென்றமிழின் பரப்பெல்லாம்
அகக்கண்ணாற் பார்த்து மேலாம்
எண்ணாரும் கவிச்சிங்கக் கவிவீர
ராகவன் இங்கு இயற்ற "

என்றும் பாராட்டியுள்ளனர். இவர் மனத்தில் எழுதிப் படித்த மாண்புமிக்க கவிஞர். ஈழநாடு சென்று பரராச சிங்கன் என்னும் தமிழரசனின் அன்பையும் மதிப்பையும் பெற்ற பெருஞ்சிறப் பினர். யாழ்ப்பாண வைபவம் என்னும் நூல் இவரது வரலாற் றைக் குறிப்பிடுகின்றது.

மேலே குறித்த பிள்ளைத்தமிழ் நூல்களே அன்றி இவர் திருக்கழுக்குன்றப் புராணம், திருவாரூர் உலா, சந்திரவாணன், கோவை, சுபத்தாற்றரசன் உலா, திருக்கழுக்குன்ற மாலை சேயூர்க்கலம்பகம் முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார். இவரது காலம் கி. பி. பதினேழாம் நூற்றாண்டு.

## ஸ்ரீ தேவீ கருமாரீ தாசர் :

இவர் அருணகிரிநாதர் பிள்ளைத்தமிழ், காமாட்சி யம்மை பிள்ளைத்தமிழ் காஞ்சிமுனி ஜகத்குரு சந்திரசேகரேந்திர

சுவாமிகள் பிள்ளைத்தமிழ், ஆதிசங்கரர் பிள்ளைத்தமிழ் என்னும் நான்கு நூல்களை இயற்றியுள்ளார். இவையே அன்றி ஸ்ரீ தேவி கருமாரி அம்மன்மீது 7001 எழுசீர்ப் பாடல்களைக் கொண்ட புராணம், ஸ்ரீமத் சுவாமி இராமதாசா” காவியம் முதலியவற்றையும் இயற்றியுள்ளார். இவர்அருட்கவி எனப் போற்றப்பெறும் சிறப்பினர்; ஸ்ரீதேவிகருமாரி அம்மன் சுவாமி நடேசனார் நிகேதனத்தின் ஆஸ்தானக் கவிஞர்.

## 4. ஒருவரே பல பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியிருத்தல்

சிற்றிலக்கிய வகைகளில் பிள்ளைத்தமிழ் என்னும் இலக்கிய வகை செல்வாக்குடையதாக விளங்குகின்றது. ஒருவரே திரும்பத்திரும்பப் பிள்ளைத்தமிழ் வாய்ப்பாட்டைப் பின்பற்றி வெவ்வேறு பாட்டுடைத் தலைவர்களை முன் வைத்துப் பிள்ளைத்தமிழ் நூல்கள் படைத்துள்ளனர். இந் நிலையினைச் சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் மிகுதியும் காண முடிகின்றது.

மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள்,

(1) உறையூர் ஸ்ரீகாந்திமதி பிள்ளைத்தமிழ்
(2) சேக்கிழார் பிள்ளைத்தமிழ்
(3) திருக்குடந்தை ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ்
(4) திருத்தவத்துறைப் பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத்தமிழ்
(5) திருவாவடுதுறை அம்பலவாணதேசிகர் பிள்ளைத் தமிழ்
(6) திருவானைக்கா ஸ்ரீ அகிலாண்ட நாயகி பிள்ளைத்
(7) திருவிடைக்கழி முருகர் பிள்ளைத்தமிழ்
(8) திருவெண்காட்டு பெரியநாயகி பிள்ளைத்தமிழ்
(9) பிரம்மவித்தியா நாயகி பிள்ளைத்தமிழ்
(10) மணவைத்திரு வெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ்

ஆகிய பத்துப் பிள்ளைத்தமிழ் நூல்களை இயற்றியுள்ளார்.

மு. ரா. அருணாசலக் கவிராயர் அவர்கள்,

(1) சேது பர்வத வர்த்தினி அம்மை பிள்ளைத்தமிழ்
(2) சேறைத் தவம்பெற்ற நாயகி பிள்ளைத்தமிழ்

(3) திருப்பரங்கிரி பிள்ளைத்தமிழ்

(4) திருப்பரங்குன்றம் பிள்ளைத்தமிழ்

(5) தில்லைச் சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ்

ஆகிய ஐந்து நூல்களை இயற்றியுள்ளார்.

கந்தசாமி அடிகள்,

(1) குருந்தமலை முருகர் பிள்ளைத்தமிழ்

(2) சிரவை முருகன் பிள்ளைத்தமிழ்

(3) பேரூர் பச்சைநாயகி பிள்ளைத்தமிழ்

ஆகிய மூன்று பிள்ளைத்தமிழ் நூல்களை இயற்றியுள்ளார்.

அந்தகக்கவி வீரராகவர்,

(1) செய்யூர் பிள்ளைத்தமிழ்

(2) செழியதரையன் பிள்ளைத்தமிழ்

(3) சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்

ஆகிய மூன்று பிள்ளைத்தமிழ் நூல்களை இயற்றியுள்ளார்.

இராம சொ. சொக்கலிங்கம் அவர்கள்,

(1) சுந்தரர் பிள்ளைத்தமிழ்

(2) திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழ்

(3) திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ்

(4) மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ்

ஆகிய நான்கு நூல்களை இயற்றியுள்ளார்.

சொக்கலிங்கய்யா அவர்கள்,

(1) சிவகாமி பிள்ளைத்தமிழ்

(2) திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்

(3) திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ்

(4) மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ்

ஆகிய நான்கு நூல்களை இயற்றியுள்ளார்.

ஸ்ரீதேவி குருமாரிதாசர் அவர்கள்,

(1) அருணகிரிநாதர் பிள்ளைத்தமிழ்

(2) ஆதிசங்கரர் பிள்ளைத்தமிழ்

(3) காஞ்சி முனி ஜகத்குரு ஸ்ரீசந்திரசேகரேந்திர சுவாமிகள் பிள்ளைத்தமிழ்

(4) காமாட்சியம்மை பிள்ளைத்தமிழ்

ஆகிய நான்கு நூல்களை இயற்றியுள்ளார்.

மேலே குறிப்பிடப்பெற்ற அளவிற்கு ஒருவரே பல பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியிருத்தலைச் சைவ சமயத்தில் மட்டுமே காணமுடிகின்றது, பிற சமயங்களில் இந்த அளவிற்குக் காண்டல் அரிது. இதிலிருந்துப் பிள்ளைத்தமிழ் இலக்கியக் கொள்கையில் சைவ சமயத்திற்கு இருந்த செல்வாக்கையும் படிப்பவர்களுக்குச் சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் இருந்த ஈடுபாட்டையும் ஆராய்ந்து உணர முடிகின்றது.

# 5. பலர் ஒருவர் பற்றியே பாடியிருத்தல்

ஒரே இறைவனையோ அல்லது இறைவியையோ ஒரு புலவர்க்குமேல் இன்னொருவர் பாடியதை அறிய பெரும்பாலும் சான்று இல்லை. காட்டாகப் புள்ளிருக்கு வேளூர் முத்துக் குமார சுவாமியைக் குமரகுருபரரைத் தவிர வேறு எந்தப் புலவரும் பாட்டுடைத்தலைவராக முன் வைத்துப் பாடவில்லை அவ்வாறே மதுரை மீனாட்சியம்மையை முன்வைத்து குமர குருபரர் பிள்ளைத்தமிழ் பாடினாரே தவிர வேறு எந்தப் புலவரும் பாட்டுடைத் தலைவராக முன்வைத்துப் பாடியதாகத் தெரியவில்லை.

இங்ஙனம் ஓர் இறைவன் அல்லது இறைவியின் பெருமையைப் புலப்படுத்தும் பிள்ளைத்தமிழ் நூல்கள் தொடர்ந்து ஒருவர்க்குமேல் இயற்ற முன்வரவில்லை என்பதற்கு ஒரு காரணம் அல்லது நியாயம் இருக்கவேண்டும். அது கூறியது கூறல் என்னும் குற்றம் நிகழாமல் காத்துக் கொள்ளும் ஓரிலக்கியக் கொள்கையை வெளிப்படுத்துகின்றது. மேலும் அந்த இறைவனையும் இறைவியையும் முன்னவர் பாடி நிறுவிய இலக்கிய மதிப்பை ஒத்துக்கொண்டுப் போற்றி யதோடு விளங்கவைத்தல் என்னும் அரண்செய்த பெற்றியை யும் உணர இடமுள்ளது.

இத்தகைய வரலாறு சைவ சமயப் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் நீண்டகால வரலாற்றில் நின்று நிலவ வில்லை என்பதைப் பின்வரும் சான்றுகளால் அறிய இட முள்ளது.

திருஞான சம்பந்தரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு,

(1) மாசிலாமணி தேசிகர்

(2) நா. கனகராஜ் ஐயர்

(3) இராம. சொ. சொக்கலிங்கம்

ஆகிய நான்கு புலவர்கள் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியுள்ளனர்.

திருநாவுக்கரசரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு,

(1) மு. கோ. இராமன்

(2) சொக்கலிங்கய்யா

(3) இராம. சொ. சொக்கலிங்கம்

ஆகிய மூன்று புலவர்கள் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியுள்ளனர்.

சுந்தரமூர்த்தி நாயனாரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு,

1. சொக்கலிங்கய்யா
2. வேலுத்தேசிகர்

(3) இராம. சொ. சொக்கலிங்கம்

ஆகிய மூன்று புலவர்கள் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியுள்ளனர்.

சிவகாமியம்மையைப் பாட்டுடைத் தலைவியாகக் கொண்டு,

(1) கிருட்டிணையர்

(2) சொக்கலிங்கையா

(3) சொக்கலிங்கம் செட்டியார்

ஆகிய மூன்று புலவர்கள் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியுள்ளனர்.

பழனிமலையில் எழுந்தருளியுள்ள முருகனைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு,

(1) சின்னப்ப நாயக்கர்

(2) தண்டபாணி அடிகள்

(3) தண்டாயுத சுவாமிகள்

ஆகிய மூன்று புலவர்கள் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியுள்ளனர்.

மறைமலையடிகளாரைப் பாட்டுடைத் தலைவராக முன் வைத்து,

(1) அரு. சோமசுந்தரன்

(2) அன்பானந்தம்

(3) அரங்கசாமி

ஆகிய மூன்று புலவர்கள் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியுள்ளனர்.

இவ்வாறு ஒருவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பலரும் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடியிருத்தலைச் சைவ சமயத்தில் மிகுதியாகக் காண முடிகின்றது. இவ்வாறு பாடியதால் கூறியது கூறல் என்னும் இலக்கியக் குற்றம் ஏற்பட்டிருக்காதா என்று ஆராய்வதற்கு இடமுண்டு. இங்கே இறுதியாகக் கூறப்பெற்ற மறைமலையடிகளாரைப் பாட்டிடைத் தலைவராகக் கொண்டு புலவர் அரு. சோமசுந்தரன் பாடியுள்ள மறைமலையடிகள் பிள்ளைத்தமிழும் பாவலர் சி. அன்பானந்தம் பாடியுள்ள மறைமலையடிகள் பிள்ளைத்தமிழும் ஒப்பீட்டாராய்வுக்கு எடுத்துக்கொள்ளப் பெறுகின்றன.

அரு. சோமசுந்தரன் எழுதியுள்ள மறைமலையடிகள் பிள்ளைத்தமிழில் இடம் பெற்றுள்ள முக்கியமான செய்திகள் முதலில் ஆராயப்பெறுகின்றன.

புறப்பொருட் சுனிரசமும் அகப்பொருள் இதழ்ரசமும் தரும் இன்பத்தை மறைமலை அடிகளின் கட்டுரைகளைப் பயில்வதன் மூலம் பெறலாம். (பாடல் எண்; 1)

பூவுலகில் வெள்ளம்போல் பாய்ந்து நாக்கில் வெல்லம் போல் தித்தித்து உலகை ஆண்டவள் ஆங்கிலம். எல்லாச்

சாதியினரும் ஆங்கிலம் கற்றனர். சேக்ஸ்பியர் முதலிய கவிஞர்கள் ஆங்கிலத்தை வளர்க்க, மெக்காலே இந்தியாவில் ஆங்கிலக் கல்விக்குப் பாடத்திட்டம் அமைத்தார். மறைமலையடிகள் பள்ளியில் படிக்காவிட்டாலும் தானே ஆங்கிலம் படித்துப் புலமை பெற்றார். (9)

வள்ளுவருக்கு முன்பு யாரும் குறள் வெண்பா பாடியதில்லை (9) வள்ளுவரும் இளங்கோவும் கம்பனும் திரண்டொரு பால் வந்ததேபோல் மறைமலையடிகள் தோன்றினார். அவர் இனிமையாகப் பாடுவார்; ஆங்கிலம் வடமொழி ஆகியவற்றிலும் புலமை பெற்றிருந்தார் (11)

மறைமலையடிகள் மூன்று மனைவியரைத் திருமணம் செய்து கொண்டவர். பல்லவ மன்னன் நந்தியின் நந்திக் கலம்பகம் படித்ததால் அவனைப்போல் தமிழுக்குத் தொண்டு புரியத் துறவு பூண்டார் (12)

சைவர்கள் சங்கரனையும் சைவத்தையும் மறந்தபோது அடிகள் நாடெங்கும் சைவமத மாநாடு கூட்டிச் சைவம் தழைக்கச் செய்தார் (13)

திருமுருகன் அச்சகமும் அம்பலவாணர் நூலகமும் அடிகள் ஏற்படுத்தியவை (14) பல்லாவரத்தில் அடிகள் சன்மார்க்க சங்கம் அமைத்தார் (17)

மறைமலையடிகள் தென்னையில் நாற்று; தென்றலில் கிற்று; தீந்தமிழில் ஊற்று; தித்திக்கும் மருந்து; பக்திக்கும் விருந்து; பண்ணையில் பயிர்; பாலாடைத்தயிர்; பழந்தமிழில் உயிர் போன்றவர் (18)

அடிகள் தன் மகள் நீலாவுக்குத் தமிழ் கற்பித்துத் தமிழாசிரியை ஆக்கி, அவளது காதலர் திருவரங்கம் பிள்ளைத்குத் திருமணம் முடித்துக்கொடுத்துக் காதல் கனவை நனவாக்கினார் (20)

தனித்தமிழின் பெருமையைத் தமிழர்கட்கு உணர்த்திய வர்(21)சிங்கத்தின் ஆற்றலும் சங்கத்தின் தமிழும் தனக்கெனக் கொண்டு அடிகள் சேவை செய்ததால் செல்வம் குறைந்தது அன்பர் கூட்டம் பெருகியது (22)

அடிகள் காலத்தில் வீரப்போர் புரிந்து ஈழத்தமிழ் பேசி மூவுலகும் புகழ வாழ்ந்த தமிழர்கள் தாழ்ந்தபொழுது வாட்டம் தீர்த்தவர் மறைமலையடிகள் (26)

துறந்தும் துறக்காத துறவிகளைப் போல இல்லாமல் உண்மையாகத் துறவு நெறியில் வாழ்ந்தவர் அடிகள் (27)

அடிகள் வெள்ளரிக்காய் போல இனிமையானவர். வெண்மையான அரி போல எதிரிகளை அழிப்பவர் (28)

திருவையாற்று இறைவனிடம் அடிகளுக்கு ஈடுபாடு மிகுதி. அடிகளிடம் திரு.வி. கலியாண சுந்தரனாருக்கு ஈடுபாடு மிகுதி (29)

அடிகள் எழுதிய நூல் கோகிலாம்பாள் கடிதங்கள் (30) "சுங்கம் தவிர்த்த சோழன்" குலோத்துங்கன் ஆவான். அவன் சுங்கவரி நீக்கியதால் சோதனை நீங்கியது. அதுபோல் மறைமலையடிகளின் தொண்டால் தமிழுக்கு ஏற்பட்ட யோசனை நீங்கியது. (32)

தமிழர்தம் வீர உணர்வையும் மொழி உணர்வையும் தட்டி எழுப்பியவர் அடிகள் (34) தமிழர்க்குப் புத்தராகவும் புனிதராகவும் அவதரித்தவர் மறைமலையடிகள் (36)

சிவபெருமான் நாகைப்பட்டினத்துக் காரோணம் என்னும் கோவிலில் வீற்றிருக்கின்றார். நாகையைச் சார்ந்த காடம்பாடி என்னும் கிராமத்தில் சொக்கநாத பிள்ளைக்கும் சின்னமைக்கும் 15-7-1876-இல் பிறந்தார் மறைமலையடிகள் 41

மனோன்மணியம் எழுதிய பேராசிரியர் சுந்தரம்பிள்ளை

யின் ஆதரவால் அடிகள் 1896-ஆம் ஆண்டில் திருவனந்தபுரம் சென்று மார்த்தாண்டன்தம்பி என்பவர் நடத்திய பள்ளியில் தமிழாசிரியராகச் சேர்ந்து பணியாற்றினார். பொது மக்களுக்குப் பல சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். திருக்கழுக்குன்றப் பெருமானைத் தாய் தந்தையர் வணங்கியதால் அடிகள் பிறந்தார் (42)

சீர்காழிச் சிற்றம்பலப் புலவர் எழுதிய "துகளறுபோதம்" என்னும் நூலுக்கும் "சிவஞான சித்தியார்" என்னும் பதினான்கு செய்யுட்கும் 'திருமந்திரம்' முப்பது பாடல்களுக்கும் அடிகள் உரை எழுதினார். "சித்தாந்த தீபிகை' என்னும் மாத இதழுக்கு ஆசிரியராக இருந்தார். (53)

பரிதிமாற் கலைஞருடன் அடிகள் 1898 - ஆம் ஆண்டு முதல் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் 13 ஆண்டுகள் தமிழ்ப்பணி புரிந்தார். ஆங்கில நூல்கள் பலவற்றையும் எடிசனின் நூல்களையும் தமிழில் மொழி பெயர்த்தார் (54)

அடிகளின் குருவாகிய சோமசுந்தர நாயகரின் ஆணைப்படி அடிகள் "சிவஞானபோதம்" பற்றியும் பிற நூல்கள் பற்றியும் ஊர்தோறும் சொற்பொழிவுகள் செய்தார். தணிகைமணி செங்கல்வராயர், ரசிகமணி டி.கே. சிதம்பரநாதர் வையாபுரிப் பிள்ளை ஆகியோர் அடிகளின் மாணவர்களில் குறிப்பிடத்தக்கவர் (55)

திருவொற்றி முருகன் அருளால் கொடிய நோயினின்றும் பிழைத்ததால் அடிகள் "திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை" என்னும் நூலை 1899 - ஆம் ஆண்டில் பாடினார். குருவாகிய நாயகர் 22 - 2 - 1901 - இல் மறைந்ததால் அவர் மீது 'சோமசுந்தரக்காஞ்சி' என்னும் நூலை அடிகள் பாடினார் ஞானசாகரம் (அறிவுக்கடல்) என்னும் மாத இதழை அடிகள் 1904 - ஆம் ஆண்டில் தொடங்கி நிறைய எழுதினார் (56)

அடிகள் தொடங்கிய 'ஞானசாகரம்' மாதஇதழுக்கு வ.உ. சிதம்பரனார் அவர்களும் சந்தா செலுத்தி உறுப்பினர்

ஆனார். அடிகளின் "மாணிவாசகர் கால ஆராய்ச்சி" என்னும் நூல் புகழ் பெற்றது.

1905 - ஆம் ஆண்டில் "சைவ சித்தாந்த சபை" என்னும் ஓர் அமைப்பினைத் தொடங்கி அதன் தலைவரானார். இதற்கு நாடு முழுவதும் கிளைகள் தோன்றின. சென்னையில் திருவருட் பிரகாச சபை, மெய்கண்ட சந்தானசபை ஆகியன இதன் கிளைகள். நாகை, திருச்சி, தஞ்சை, தூத்துக்குடி, சிதம்பரம் ஆகிய பல ஊர்களில் கிளைகள் தோன்றின. சிதம்பரத்தில் 1906 - ஆம் ஆண்டில் அடிகளால் முதல் மாநாடு சிறப்பாக நடத்தப் பெற்றது. கொழும்பு இராமநாதத் துரை தலைமை தாங்கினார் (59)

இரண்டாம் மாநாடு சிதம்பரத்தில் பாண்டித்துரைத் தேவர் தலைமையிலும் மூன்றாம் மாநாடு நாகையில் நல்லுசாமிப் பிள்ளை தலைமையிலும் நான்காம் மாநாடு திருச்சியில் யாழ்ப்பாண வள்ளல் கனகசபைப் புலவர் தலைமை யிலும் நடைபெற்றன. எழுதத் தொடங்கி முடிக்காத பல உரைகளை அடிகள் பேச்சில் வெளிப்படுத்தினர் (60)

சென்னை முதல் குமரி வரை அடிகள் சொற்பொழிவு ஆற்றினர். பூச்செண்டாக அவர் திகழ மக்கள் அவரை வண்டாகச் சுற்றினர். தமிழ் பிறந்த பொதிய மலையின் ஒரு துண்டு போல மறைமலை தொண்டு செய்தார். அகத்தியனின் மறுபிறவியாக வந்தார் (61)

சவுந்தரம்மாள், பொன்னம்மாள், கண்ணம்மாள் என்னும் மூன்றுதாரம் அடிகட்கு உண்டு. சவுந்தரவல்லி அம்மாள் பெற்ற குழந்தைகள் சிந்தாமணி நீலாம்பிகை, ஞானசம்பந்தன், மணிவாசகம், திருநாவுக்கரசு, சுந்தரம், திரிபுரசுந்தரி ஆகிய எழுவர் பொன்னம்மாள் பெற்ற குழந்தைகள். அம்பலவாணன், கலாவதி ஆகிய இருவர் கண்ணம்மாள் பெற்ற குழந்தைகள் பச்சையப்பன், சொக்கம்மாள் (65)

அடிகள் தமது முப்பத்தைந்தாம் ஆண்டில் (1911 -

ஆம் ஆண்டில்) துறவு பூண்டார் (67)

1911 - ஆம் ஆண்டில் ஒருநாள் அடிகள் "பெற்ற தாய்தனை" என்னும் திருவருட்பா பாடலை இனிமையாய்ப் பாட, அதனைக் கேட்ட அவரது மகள் நீலாம்பிகை அப் பாடலிலுள்ள 'தேகம்' என்னும் வடசொல்லுக்குப் பதிலாக யாக்கை' என்னும் தமிழ்ச்சொல் இருந்தால் மேலும் இனிமை, யாக இருக்காதா? என்று கேட்டதனால் அடிகள் தனித்தமிழ் இயக்கம் தொடங்கினார்.

திருவாசகத்திற்கு உரை எழுதுவோர் அது முடியுமுன் முக்தி பெறுவர் என்பது பழமொழி. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் அவர்கள் திருவாசக உரை எழுதத் தொடங்கி அது முடியுமுன் மறைந்தார்கள். மறைமலை அடிகள் 1920 - ஆம் ஆண்டு பிப்பிரவரி முதல் ஏப்பிரல்22 வரை தாம் நடத்திய "செந்தமிழ் களஞ்சியம்" என்னும் மாத இதழில் திருவாசகம் முதல் நான்கு அகவலுக்கு உரை எழுதினார். உரை முற்றுப் பெறவில்லை (68)

1910 - ஆம் ஆண்டில் அடிகள் "பொதுநிலைக் கழகம்" தொடங்கினார். 1) ஒன்றே குலம் ஒருவனே தேவன்; 2) அன்பு அருள் ஒழுக்கம் 3) தனித்தமிழ் ஆகிய மூன்றும் அதன் கொள்கைகள் (69)

நடராசப் பெருமானுக்கு மறைமலையடிகள் பல்லாவரத்தில் பொது நிலைக்கழக மாளிகையில் "அம்பலவாணர் திருக்கோவில்" கட்டி நால்வர் படம் வைத்து 2 - 2 - 1931 - ஆம் ஆண்டு குட முழுக்குச் செய்தார்[70] அம்பலவாணர் கோவில், நால்வர்மடம், ஞானசாகரம் இதழ், திருமுருகன் அச்சகம், செந்தமிழ்க் களஞ்சியம் இதழ், பொது நிலைக் கழகம், மணிமொழி நூலகம் ஆகியன அடிகளின் ஆக்கப் பணிகள் (87)

உடலை வெறுத்தல், உயர்ந்தோரைப் பழித்தல், மந்திர

தந்திரங்கள், கவர்ச்சி, மதிமயக்கல், சொத்துரிமையால் வழக்குகள் போராட்டம் நிகழ்தல் முதலிய தீங்குகள் மனித வாழ்வில், நிறைந்தபோது அடிகள் நல்வழி காட்டினர் (91) சங்க காலத்தில் வாழ்ந்த 'கோசர்கள்' என்னும் இனத்தார் ஒன்றே மொழியும் உரவோர் ஆவர். உண்மையே பேசுவர். அதுபோல் அடிகள் தமிழகம் முழுவதும் ஒரே மொழியாகிய தனித்தமிழ் பரவ விரும்பினார் (92)

நக்கீரரும் சிவஞான முனிவரும் கலந்த உருவே அடிகள்; சங்க நூல்களைப் பரப்பினார். தமிழ்வானில் திங்கள் போல் திகழ்ந்தார் (92) சம்பந்தப் பெருமானின் புகழ் பரப்பினார். அறிஞர் பலர் தோன்ற வழி காட்டினார் என்று திரு. வி. க. மறைமலையடிகளைப் பாராட்டி அவரது தொண்டர் ஆனார் (94)

கா. சு. பிள்ளை, க.ப. சந்தோஷம், உ. வே. சாமிநாதையர், மு. இராகவய்யங்கார் போன்ற பெரும் புலவர்கள் மறைமலை அடிகளின் புலமையைப் புகழ்ந்தனர் (95)

விரிவுரை நிகழ்த்தும் மேடை அமைப்புப்பற்றி முன் கூட்டியே படம் வரைந்து அனுப்புவது அடிகளின் வழக்கம் காலை 8-30 மணிக்குத் தேவார திருவாசகப்பாடல்; 9 மணிக்கு விரிவுரை தொடங்கல் 12 மணிக்கு முடித்தல் என்பது அடிகளின் திட்டமாகும் (98)

இனி, பாவலர் சி. அன்பானந்தம் இயற்றியுள்ள மறைமலையடிகள் பிள்ளைத்தமிழிலுள்ள முக்கியமான செய்திகள் ஆராயப் பெறுகின்றன.

மறைமலையடிகள் பிறந்த ஊர் நாகப்பட்டினத்தை அடுத்த சிற்றூர்(1) திருக்கழுக்குன்றத்துச் சிவபெருமான் பெயர் வேதாசலர். அடிகளின் பெற்றோர் குழந்தைப் பேற்றிற்காக இங்கு நாற்பது நாட்கள் நோன்பிருந்து தவத்தின் பயனாய்ச் செவ்வேளைப் போன்ற அடிகளைப் பெற்றனர் 5

அடிகள் பொன்னம்பல வாணரைத்தம் வழிபடு தெய்வ மாகக் கொண்டவர் (6) அடிகளின் ஞானாசிரியர் சோம சுந்தர நாயகர் (7)

அடிகள் தாமரையும் நாணும்படியாக விளங்கும் கால்க ளோடும் உள்ளக்களிப்பினை ஒலியாக வெளிப்படுத்தும் மணி புனைந்த கைகளோடும் தோள்றியதால், நிலமகள் முழுமையான பெறற்கரும் பேறு பெற்றாள். அகமும் முகமும் மலர மொழி நலம் பேணும் அடிகட்கு நிலமகள் மேன்மைகள் என்னும் திறைப்பொருளை அளிக்க ஏற்றுக்கொண்டு உவந்தனர் அடிகள் (13)

மீனாட்சியம்மை திருமணமும் பாண்டியனுக்காகக் கால்மாறி ஆடிய திருவிளையாடலும் சுட்டப்பெற்றுள்ளன. திருத்தில்லை நகர வேந்தன் செந்தமிழ் வாழ்ந்திட மறைமலை யடிகளைத் தோற்றுவிக்க அடிகள் தனித்தமிழ்க்கொள்கையை நிறுவித் தமிழ் வளர்க்க தென்னகம் சேர்ந்தார் (15)

"பரணியில் பிறந்தார் தரணி ஆள்வார்" என்பது ஆன்றோர் வாக்கு (16) அடிகள் பரணி விண்மீன் ஆட்சி யுற்ற நாளில் தோன்றியவர். அடிகளின் உருவப்பொலிவு தெய்வ வடிவங்களோடு ஒப்பிட்டுப் பாராட்டப்பெறுகின்றது (59)

மனோன்மணியம் நாடகம் இயற்றிய பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்களின் தொடர்பால் அடிகள் திருவனந்த புரத்தில் ஓர் ஆங்கிலப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியில் அமர்ந்தார். (24) அடிகள் சென்னைக் கிறித்துவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணி புரிந்த பரிதிமாற் கலைஞரின் உதவியால் அக்கல்லூரியிலேயே தமிழாசிரியராக அமர்த்தப் பட்டார். அங்குப் பணியாற்றும் காலத்தில் முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரையும் பட்டினப்பாலை ஆராய்ச்சி உரையும் எழுதினார் (26)

தென்றல் தென்பொதிகை மலையிலிருந்து பிறந்து வருவது இயல்பு அடிகள் நாகையில் தோன்றியவர். ஆதலின்

வங்கக்கடலின்மீது எழுந்துவரும் தென்றலாகக் கூறப்பட்டார் (27)

வள்ளுவராண்டு எனக் குறிப்பிடும் வழக்கை அடிகள் தாம் தோற்றுவித்தார் அடிகள் திருவாசகத்தின் சில பகுதிகளுக்கு விரிவான ஆய்வுரை எழுதியுள்ளார் (30) சங்கத்தமிழ்க் கொள்கையே பிற்காலத்தார் கொண்ட சைவ சித்தாந்தம் என ஆராய்ந்துரைத்துள்ளார். பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம் என்பது அடிகள் எழுதிய நூல். "சிறுவர்க்கான செந்தமிழ்" என்பது அறிவு புகட்டும் கதைகளும் கட்டுரைகளும் அமைத்து அடிகள் சிறுவர்களுக்காக எழுதிய நூல் (32) நாகப்பட்டினத்திலிருந்து வார இதழாக வெளிவந்த நீலலோசனியிலும் காரைக்காலில் இருந்து வெளிவந்த திராவிட மந்திரியிலும் அடிகளை ஆசிரியராகக் கொண்டு சென்னையிலிருந்து திங்கள் இதழாக வெளிவந்த சித்தாந்த தீபிகையிலும் அடிகள் காய்தல் உவத்தலின்றி கட்டிரைகளும் மறுப்புகளும் எழுதி வந்தார் (34) "தமிழர்மதம்" கோகிலாம்பாள் கடிதங்கள்" மக்கள் நூறாண்டு வாழ்வது எப்படி?" "பொருந்தும் உணவும் பொருந்தா உணவும்" என்னும் நூல்களை அடிகள் எழுதினார் (35)

வடலூரர் வள்ளல் இராமலிங்கரின் திருவருட்பா பாக்கள் பற்றி எழுந்த கருத்து வேறுபாட்டில் அடிகள் அருட்பாவின் சிறப்புக்களைப் பல மன்றங்களில் எடுத்துரைத்து வென்றார் (36)

அடிகள் 'யோகநித்திரை' என்னும் அறிதுயிலின் பயிற்சியாலே தன்மகன் திருநாவுக்கரசருக்கு நேர்ந்த இளைப்பிருமல் நோயைத் தவிர்த்திருக்கின்றனர் "தொலைவில் உணர்தல் என்னும் மறைப்பொருள் உணர்ச்சி என்பது அடிகள் எழுதிய நூல் சிவஞானபோதம் இயற்றிய மெய்கண்டதேவர் திருநாளைச் சென்னையில் கொண்டாட அடிகள் வழிகோலினார் (39) சைவ சமய வளர்ச்சிக்காக சைவ சித்தாந்த சபை நிறுவி அதன் தலைவர் ஆனார். அடிகள் திருவொற்றியூர் முருகனிடத்துக் கொண்ட ஈடுபாட்டால் "திருவொற்றியூர்

முருகர் மும்மணிக்கோவை என்னும் நூல் இயற்றினார் (45)

அடிகள் சிறிதும் நேரத்தை வீணாக்காமல் நூல்களைப் படிப்பதிலும் ஆய்வுகள் எழுதுவதிலும் ஈடுபடுவர். சென்னையில் எந்தப் பொது, சிறப்பு நிகழ்ச்சிகளுக்கும் போகமாட்டார் என்பது வரலாறு (46) ஓரேருழவனின் முயற்சியைப் போல அடிகள் மொழிநலம் பேணலையே தம் கருத்தாய்க் கொண்டு வாழ்ந்தார். (51)

பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, வ. உ. சிதம்பரனார், திரு. வி. க. ரசிகமணி சிதம்பரர், பாண்டித் துரைத்தேவர், திருவரங்கம் பிள்ளை முதலியோர் மறைமலையடிகளிடம் நட்பு கொண்டிருந்தனர் (53) அடிகள் இலங்கைப் பயணம் சென்று வந்துள்ளார். (54)

தமிழ்மொழியில் பேசுவதற்குக் கூசிய அக்காலத்தில் அடிகள் இனிமையாகப் பேசி அக்குறையை நீக்கிப் பிறரும் தமிழில்பேச ஆர்வம் தோற்றுவித்தார் (55)

அடிகள் தம் அறிவாராய்ச்சியால் அறிந்த ஆய்வு முடிவுகளைத் தாம் நடத்தி வந்த அறிவுக்கடல் (ஞானசாகரம்) என்னும் இதழ் மூலம் வெளியிட்டு வந்தார். அடிகள் பூண்ட துறவு தமிழ்த்துறவு; மக்களொடு மகிழ்ந்து மனையறம் காத்து துறவு பூணல் தமிழ்நெறி (58)

தென்னாட்டு மக்கள் இதயத்தில் உறங்கிக் கிடந்த மொழியுணர்வைத் தூண்டி, உலகனைத்தும் தமிழ்மொழியின் பெருமையைப் பரப்ப இறைவனே கருணை கொண்டு மறைமலையடிகளாகத் தோன்றினார் (73)

"மரணத்தின் பின் மனிதர் நிலை" எனும் ஆவி உலக வாழ்வைப் பற்றிய நூல் ஒன்றையும் எழுதியுள்ளார். (74)

"பெற்ற தாய்தனை மகமறந்தாலும் பிள்ளையைப் பெறும்தாய் மறந்தாலும் உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்"

என்னும் திருவருட்பா பாடலடியிலுள்ள தேகம் என்னும் சொல் லுக்குப் பதிலாக 'யாக்கை' என்னும் சொல் இருந்தால் இனி மையாயிருக்கும் என நீலாம்பிகை கூற அடிகள் தனித்தமிழ் ஆர்வம்கொண்டு வேதாசலம் என்னும் தம் பெயரை மறை மலையடிகள் என மாற்றியதோடு தமிழ் இயக்கமும் கண்டவர் (78) எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்னும் கொள்கையுடைய அடிகள் இறைவழிபாடும் திருமணம் முதலிய சடங்குகளும் தமிழ்மொழியிலேயே நடை பெற வேண்டும் என்னும் கொள்கையை மக்களிடத்துப் பரப்பியவர் (80)

புராணங்களில் கடவுளர்க்கு அவதாரம் கூறி மனிதப் பிறப்பு எடுப்பதாகக் கூறப்படும் செய்தியை அடிகள் வன்மை யாய் மறுத்தார். 'தமிழ் நாகரிகம்' என்னும் நூலையும் எழுதியுள்ளார், (84)

அடிகள் இலங்கையில் கொழும்பு முதலிய இடங்களுக்குச் சென்று சைவ சமயக் கொள்கையைப் பரப்பினார்; கொல்லா மையை வலியுறுத்தினார். (88)

அடிகளின் அருட்குரு சோமசுந்தர நாயக்கர் மறைந்த போது கையாறடைந்த அடிகள் நிலையாமை பற்றி இரங்கல் பாடலாக 'சோமசுந்தரக் காஞ்சி' பாடினார். பின்னர் அது "சோமசுந்தரக் காஞ்சி ஆக்கம்" என்னும் நூலாயிற்று. அடிகளின் மொழிபெயர்ப்புத் திறனுக்கோர் எடுத்துக்காட்டு சாகுந்தல நாடகம் (91)

அடிகளின் பிறப்பு திருவள்ளுவராண்டு 1907. ஆங்கில ஆண்டு 1876 ஜூலை 15-ஆம் நாள் (92)

அடிகள் தாம் கற்றுணர்ந்து ஆய்ந்த கருத்துக்களை நூல் வடிவில் நிலைபெறச் செய்வதற்கு, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகதிற்குப் பேருதவியாக இருந்தார். தனித்தமிழ் இயக்கம், தையலர் மறுமணம், மகளிர் கல்வி இவற்றிற்கு அடிகள் பாடுபட்டார். அடிகள் எழுபத்தைந்து ஆண்டுகள் தாம் வாழ்ந்தார் (94)

பன்னிற மலர்களும் நார் ஒன்றில் இணைவதுபோலப் பல சமயத்தவர்களும் அடிகளிடம் ஒன்றிப் பழகினார்கள். கடம்பவன சுந்தரம் என்னும் கிறித்துவர் அடிகளிடம் சைவ சமயக் கோட்பாடுகளைக் கேட்டறிந்து, தாம் சார்ந்திருக்கும் கிறித்துவத்தைக் காட்டிலும் சைவமே சிறந்தது எனத் தெரிந்து தம் குடும்பத்தையும் சைவ சமயத்தைத் தழுவச் செய்தார் (95)

முல்லைப்பாட்டாராய்ச்சி, பட்டினப்பாலையாராய்ச்சி, குறிஞ்சிப்பாட்டாராய்ச்சி என்னும் ஆராய்ச்சி நூல்களை அடிகள் இயற்றியுள்ளார். (98)

அரு. சோமசுந்தரன் இயற்றியுள்ள மறைமலையடிகள் பிள்ளைத்தமிழில் முப்பத்துநான்கு முக்கிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. பாவலர் சி.அன்பானந்தம் இயற்றியுள்ள மறைமலையடிகள் பிள்ளைத்தமிழில் இருபத்துமூன்று முக்கிய செய்திகளே இடம்பெற்றுள்ளன, ஒரே தலைவர் பற்றி இவ்வகையில் இருவேறு கவிஞர்கள் பிள்ளைத்தமிழ் பாடியிருந்தாலும் அவ்விருவரின் வெளிப்படுத்தும் திறன்கள் வெவ்வேறு வகையில் அமைந்து இன்பம் பயக்கின்றன. மேலும் ஓராசிரியரால் கூறப்பெறாத முக்கிய செய்தி மற்றொரு ஆசிரியரால் கூறப்பெற்றுள்ளது. என்றாலும் கவிஞர்கோ அரு. சோமசுந்தரன் இயற்றியுள்ள பிள்ளைத்தமிழ் கருத்து வளத்திலும் கலைநலத்திலும் சிறந்து விளங்குவதைக் காண முடிகின்றது. பலர் ஒருவர் பற்றியே பாடுவது பாட்டுடைத் தலைவரை முழுமையாக அறிந்துகொள்ள உதவினாலும் அது கூறியது கூறல் என்னும் இலக்கியக் குற்றத்திற்கு உட்படுகிறது என்பது இவ்வொப்பாய்வினால் பெறப்படும் உண்மையாகும். பிள்ளைத்தமிழ் இலக்கிய வரலாற்றிலே இத்தகைய குற்றத்தைப் பிற்காலத்தில் காண முடிகின்றது.

## 6. அம்புலிப் பருவ மாண்புகள்

சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்கள் அனைத்திலும் அம்புலிப்பருவம் சிறப்பாகப் பாடப் பெற்றுள்ளன. பிள்ளைத் தமிழ் நூல்களுக்கு இப்பருவமே ஓர் அளவு கோலாக விளங்கு கின்றது. இப்பருவத்திலேயே கவிஞரின் திட்பநுட்பங்கள் வெளிப்பெறுகின்றன. இப்பருவம் மற்றையப் பருவங்களைப் போலப் பாட்டுடைத்தலைவன் அல்லது தலைவியாகிய குழந்தையை வேண்டிப் பாடப்பெறும் பருவம் அன்று. இது சந்திரனை வேண்டிப் பாடப்பெறும் பருவம். சந்திரனைப் பாட்டுடைத்தலைவன் அல்லது தலைவியாகிய குழந்தையுடன் ஆட வா என அழைக்கும்போது சாம, பேத, தான, தண்டம் என்னும் நால்வகை உபாயங்களால் அழைத்தல் மரபு. இவ்வாறு அழைக்கும்போது சந்திரனுக்கும் பாட்டுடைத் தலைவன் அல்லது தலைவிக்கும் ஒப்புமை காட்டி அழைத்தல் வேண்டும். அதாவது சிலேடை அணி அமையப்பாடுதல் மரபு.

இக்கட்டுரையில் திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ், சேக்கிழார் பிள்ளைத்தமிழ் ஆகிய மூன்று நூல்களும் சான் றாய்வுக்கு மேற்கொள்ளப்பெறுகின்றன.

திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழின் அம்புலிப் பருவத்தில் ஐந்து பாடல்கள் இடம் பெற்றுள்ளன. முதற்பாடல் சாம உபாயத்தாலும் இரண்டாம் பாடல் பேத உபாயத்தாலும் மூன்றாம் நான்காம் பாடல்கள் தான உபாயத் தாலும் ஐந்தாம் பாடல் தண்ட உபாயத்தாலும் சந்திரனை அழைக்கப் பெறுவதாகப் பாடப்பெற்றுள்ளன.

விநாயகர் வானத்தில் உறையும் தேவர்களும் நான்மறை களும் ஓலமிட விளங்குபவர்; குளிர்ந்த முத்துகள் உதிரும் நீண்ட கொம்பினையுடைய அழகு வாய்ந்த யானை தர வந்து தேவர்களும் நீங்காமல் வழிபட்டு மகிழ்ச்சியடையுமாறு தொட்டிக்கலை என்னும் ஊரில் எழுந்தருளியிருந்து அருளாகிய அமுதத்தை அனைவர்க்கும் அளித்து ஆள்பவர்; ஞாயிறு, திங்கள், நெருப்பு ஆகிய மூன்று கண்களோடு விளங்கும்

பேரழகரான சிவபெருமான் பெற்றுள்ள பல பண்புகளில் உலகம் காக்கும் பண்பே உருவாகத் தோன்றியவர். கண்டவர்கள் வியக்கும் வண்ணம் அழகிய சிவந்த மணிபோல ஒளிவீசும் திருமேனி படைத்தவர். சந்திரன் வெண்திங்கள் என வியந்து கூறப்பெறுவான் என்றாலும் சிவப்புக் கலந்த நிறமே அவன் நிறம். இதனால் விநாயகர் சந்திரனை ஒத்திருக்க சந்திரனும் விநாயகரை ஒத்திருக்கின்றான். இத்தொடர்பால் சந்திரன் விநாயகரோடு விளையாட வரவேண்டும் எனச் செவிலித் தாயர் சாம உபாயத்தால் விநாயகரை அழைக்கின்றார்கள்.

இவ்வாறு சந்திரனுக்கும் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெற்றுள்ள பாட்டுடைத் தலைவனுக்கும் உள்ள ஒப்புமைகளை எடுத்துரைத்த செவிலித்தாயர் சந்திரனைக் குழந்தையாகிய பாட்டுடைத் தலைவனோடு ஒப்பித்தமையான் சந்திரன் செருக்குற்றிருக்கலாம்; இருவர் நிறமும் ஒத்திருத்தல் பற்றியே ஒப்புமை கூறப்பெற்றது என்றும் உண்மையில் இருவருக்கும் பேதம் உண்டென அடுத்து எடுத்துரைக்கின்றனர் சந்திரனுக்கும் குழந்தையாகிய பாட்டுடைத் தலைவனுக்குமுள்ள ஏற்றத் தாழ்வு மலைக்கும் மடுவுக்குமுள்ள ஏற்றத் தாழ்வாகும் என்கின்றனர். சந்திரன் ஒளி வீசி வெளி வருகின்றான். பாதியுடம்பையுடைய பாம்பு ஒன்று அவனை உண்டு உமிழ்கின்றது. இது சில நாட்களில் நிகழ்கின்றது. ஆனால் அது விழுங்க வந்துவிடுமோ என எப்போதும் சந்திரன் அஞ்சி அஞ்சி அலைகின்றான். ஆனால் விநாயகர் உலகப் பகுதிகள் யாவும் ஒருசேர அஞ்சத்தக்க வகையில் மூச்சு விடுவனவும், துளிதுளியாகவுள்ள நஞ்சு வெளிவருவதற்கு ஏற்ற துளை பொருந்திய பற்களைக் கொண்டனவும் புள்ளிகள் நிறைந்த படத்தைப் பெற்றனவும் ஆகிய பாம்புக் கூட்டங்களையெல்லாம் கால், கழுத்து, தோள், விரல் ஆகியவற்றில் அணிகலன்களாக அணிந்துள்ளான். அன்றியும் சந்திரன் அறியாமை மிகுந்து யாவரும் இகழும்படி தேயும் உடலைப் பெற்றிருக்கின்றான். அவ்வுடலில் களங்கத்தையும் பெற்றுள்ளான். விநாயகன் நேர்மையுடையவராக என்றும் தேயாமல்

ஒரே நிலையிலுள்ள திருமேனியினைக் கொண்டவர்க்குக் களங்கம் இல்லாதவர். இருவரிடையே இவ்வளவு வேற்றுமை கள் இருந்தும் சந்திரனைக் குழந்தையாகிய பாட்டுடைத் தலைவரோடு விளையாட அழைத்தது அவனுக்குச் சந்திரனைப் போன்று உள்ளாரிடம் இயல்பாகச் சுரக்கும் அன்பினாலேயே எனப் பேசு உபாயத்தில் குழந்தையாகிய பாட்டுடைத்தலை வனோடு விளையாட வருமாறு சந்திரனைச் செவிலித்தாயர் அழைக்கின்றனர். [2]

இவ்வாறு செவிலித்தாயர் சந்திரனை நோக்கி அழைத்தும் அவன் வரவில்லை எனவே அவன் குழந்தை யாகிய பாட்டுடைத் தலைவனோடு விளையாட வந்தால் அடையும் பயன்களை அடுத்து எடுத்துரைக்கின்றனர். கயமுகன் கரும்பை நெருக்கி அரைத்துச் சாறு வேறு சக்கை வேறு ஆக்கும் ஆலை போலத் தேவர்கள் யாவரையும் பற்றி அடுத்தடுத்து இடர்ப்படுத்திப் புடைத்து வந்தான் என்பதைச் சந்திரன் அறியாதவன் அல்லன்; அவ்வாறு துன்புற்றவர்களில் சந்திரனும் ஒருவன்; சந்திரனை உள்ளிட்ட தேவர்கள் சார்பில் கயமுகனைத் தாக்கி அழிக்தொழித்து யாவரையும் காப்பாற்றி யவன் விநாயகன். மேலும் விநாயகனை நினைத்து இடையூறு தீர்த்துதவ வேண்டுமென்று விண்ணப்பித்துத் தொழில் தொடங்குவார் யாவர்க்கும் முன்நின்று தடைகளைத் தவிர்த்து முடித்து வைப்பவன் இவன் ஒருவனைத்தவிர வேறு எவரும் இல்லை. இவ்வாறு விநாயகன் பெருமையைச் சொல்லிக் கொண்டே இருக்கலாம். இப்போது சந்திரன் இவனோடு விளையாட வந்தால், சந்திரனை விழுங்குவதற்காகப் பின் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும் பாம்பினைத் தன் திருமேனியில் அணிகலனாக உள்ள பாம்புகளோடு சேர்த்து இவன் அணிந்து கொள்வான். இந்தப் பாம்புத் தொல்லை இனிச் சந்திரனுக்கு எப்போதும் இல்லை. [3]

மேலும் செவிலித்தாயர், விநாயகனின் தம்பி வீரபத் திரன், தக்கன் வேள்வியில் கலந்து கொண்ட தேவர்கள் பல

ரையும் சிதைத்துப் பலர் தலையைப் பாழ்படுத்திச் சந்திரனை யும் தேய்த்த வெற்றி வீரன் என்பதைச் சந்திரன் அறிய வேண்டும் என்றுரைக்கின்றனர். அன்றியும் ஒருசமயம் விநாயகன் தன்னை மதியாமல் இருந்த திருமாலின் ஆழிப் படையை எடுத்து விழுங்கிய பின் அவன் கெஞ்சிக் கேட்க அவனைக் கூத்தாடச் செய்து அதன்மேல் அவனுக்கு அதனைத் தந்தான் என்றும் முன்நிற்க அஞ்சி வெருண்டோ டாது சீறித் தன்மேல் வந்த அரக்கன் ஒருவனை வானத்தில் பந்துபோல வீசி எறிந்தான் என்றும் விநாயகனின் ஆற்ற லை எடுத்துரைக்கின்றனர். இத்தகைய ஆற்றல்களை விநாயகர் பெற்றிருப்பதால் இவனைப் பகைத்துக் கொண்டால் சந்திரனுக்கு வாழ்வுக்கு வழி இல்லை என்றும் அவனுடன் விளையாட வந்தால் வாழ்வுக்கு வழி உண்டென்றும் உரைக்கின்றனர். மேலும் செவிலித்தாயர், விநாயகன் கட்ட ளைப்படிச் சந்திரனை அழைத்ததாகவும் சந்திரன் அழைப்பை ஏற்காமல் புறக்கணித்து வான்வழியே அகன்று செல்கின்றான் என்றும் விநாயகன் சற்று இரக்கத்தை விடுத்துச் சினப்பா னாயின் சந்திரன் நிலை என்ன ஆகுமோ? தெரிய வில்லை! விநாயகனைத் தவிர சந்திரனுக்குப் போக்கிடம் வேறு எதுவும் இல்லை. எனவே இவனுடன் விளையாட வருக எனச் சந்திரனைத் தான உபாயத்தில் அழைக்கின்றனர். அப் போதும் சந்திரன் வந்தானில்லை. 4

இதனால் செவிலித்தாயர் குழந்தையாகிய பாட்டுடைத் தலைவனோடு சந்திரனை விளையாட வருமாறு தண்ட உபா யத்தால் அழைக்கின்றனர். விநாயகன் உலகத்தார் யாவராலும் போற்றப்பெறுகின்ற இயல்பு உள்ளவன். இவன் சிறப்பினை உணராத சந்திரன் இவனுடைய பருவயிற்றையும் யானை முகத்தையும் பார்த்து நகையாடினான். அதனால் கடுஞ்சினம் கொண்ட விநாயகன் பலரும் கண்டு நகைக்கும்படியான இழி நிலையைச் சந்திரன் அடையுமாறு செய்தான். இது சந்திரன் வாழ்க்கையில் முன்பு நடந்தது. நான்முகன் முதலானோர் சந்திரனுக்காகப் பரிந்து வேண்டிக்கொள்ள அதன்மேற் சற்றுத்

திருவருள்' பெற்று சந்திரன் பிடைத்திருக்கின்றான். அதனைச் சந்திரன் நினைத்தாவது காலக்கழிவு கொள்ளாது வருதல் வேண்டும். இன்றும் விநாயகன் அழைப்பை மதியாமல் சந்திரன் இருந்தால் நடப்பது வேறு. வானிலுள்ள சந்திரன் தமக்குத் திருக்கலைசை என்னும் ஊரிலுள்ள விநாயகனால் என்ன தீங்கு நேரும் எனக் கருதுகிறான். விநாயகன் வான் சென்று சந்திரனை வதைக்கவேண்டும் என்பதில்லை. இருந்த இடத்தில் இருந்தபடியே சந்திரன்மாட்டு விநாயகனால் எண்ணியதைச் செய்ய முடியும். சந்திரன் துருவமீன் பிணைப்பில் இருக்கின்றான். மாலை போலப் பல விண்மீன்களுக்கு இடையில் அமைந்து ஒன்றுடன் ஒன்று தொடர்புகொண்டு விழாதநிலை சந்திரனுக்கு இருக்கலாம். இதனாலும் செருக்குற்று சந்திரன் வராமல் இருக்கலாம். விநாயகன் கை நீண்ட துதிக்கை. அஃது எவ்வளவு நீட்டினாலும் நீளும் இயல்புடையது. இங்கிருந்து கொண்டே வான் நோக்கிக் கையை உயர்த்திச் சந்திரனை மட்டும் பற்றி அப்பிணைப்பிலிருந்து 'ஒய்' என அறுத்து மண்ணிடை எறிந்தால் சந்திரன் சிதைந்து மாள்வான். இஃது விநாயகனுக்கு மிக எளிது. இதனினும் எளியது இன்னமும் ஒன்று இருக்கின்றது. சந்திரனுக்குப் பாம்புப்பகை உண்டு; அதனைக் கண்டதும் நடுக்கம் அடைவான். விநாயகனிடம் பாம்புகளுக்கோ குறைவில்லை. சந்திரன் விளையாட வாராமையை ஒரு பாம்பு உணர்ந்து கொண்டால் போதும்; சந்திரன் வாழ்க்கை முடிந்து போகும் பாம்பு இங்கிருந்தே அண்ணாந்து சந்திரன் மேல் தாவும்; சந்திரனை எடுத்து விழுங்கும் பின் ஒருபோதும் உமிழாமலே தன் வயிற்றினுள் அடக்கிக் கொள்ளும். இதில் எள்ளளவும் ஐயமில்லை. சந்திரன் நன்மையைக் குறித்தே சொல்லுகிறோம்; தானாக உணர்தலும் பிறர் சொல்லக் கேட்டலுமாகிய தன்மை சந்திரனிடத்து இல்லை. நல்லறிவோடு இனியேனும் சந்திரன் வாழ்க்கை நடத்த வேண்டும். விநாயகன் வெகுள்வதற்கு முன் விளையாட வருக எனத்தண்ட உபாயத்தால் அழைக்கின்றனர்.[5]

இவ்வாறு செவிலித்தாயர் பாட்டுடைத் தலைவனோடு

விளையாட வருமாறு நால்வகை உபாயங்களால் அழைப்பன சிறந்த பொருள் நயத்தோடும் கற்பனை வளத்தோடும் விளங்கு கின்றன.

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழின் அம்புலிப் பருவத் தில் பத்துப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன. முதலிரண்டு பாடல்கள் சாம உபாயத்தாலும் அடுத்த இரண்டு பாடல்கள் பேத உபாயத்தாலும் அதற்கடுத்த இரண்டு பாடல்கள் தான உபாயத்தாலும் இறுதி நான்கு பாடல்கள் தண்ட உபாயத் தாலும் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனோடு விளையாட வருமாறு சந்திரனைச் செவிலித் தாயர் அழைப்பதாகப் பாடப் பெற்றுள்ளன.

முதலிரண்டு பாடல்கள் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனுக்கும் சந்திரனுக்கும் சிலேடையாகப் பாடப் பெற்றுள்ளன. சந்திரன் அமுதமயமாய் இருக்கின்றான். முத்துக்குமாரசுவாமியும் இன்பவடிவினனாக இருக்கின்றான். சந்திரன் மதிக்கடவுள் என்னும் பெயர் உடையவன் முத்துக்குமாரசுவாமியும் பேரறிவுடையவனாக இருக்கின்றான். சந்திரன் கடலிடைத் தோன்றுகின்றான். முத்துக்குமாரசுவாமியும் ஆனந்தமாக்கடலாகிய சிவபெருமா னிடத்துத் தோன்றியிருக்கின்றான். சந்திரன் குமுதம் மலரத் தாமரை குவியத் தோன்றுகின்றான். முத்துக்குமாரசுவாமி வள்ளியின் இதழ்க் குமுதம் மலர அவனது தாமரை புரையும் காமர் நலமுடைய கையைக் குவித்து வணங்குகின்றான். சந்திரன் பயிர்கள் தழைக்க நிலவு பொழிகின்றான். முத்துக் குமாரசுவாமி உயிர்ப்பயிர்கள் தழையத் திருவருள் சுரக்கின் றான். சந்திரன் இறைவனது கண்ணாக விளங்குகின்றான் முத்துக்குமாரசுவாமியும் அப்பெருமானது கண்ணிலிருந்து தோன்றியிருக்கின்றான். 6 சந்திரன், புகழ்பெற்ற தேவர் அவனின் கலையாகிய அமுதத்தைக் கொள்ள இருந்து மகிழ்ச்சியைக் கொண்டருளினான். முத்துக்குமாரசுவாமி சொல் மாலை சூட்டுகின்ற பெரிய புலவோராகிய நக்கீரர் முதலிய வர்களது தமிழ்க் கலைச்சுவையாகிய அமுதத்தைக் கொள்வதற்

காகப் பெரிய மயிலின்மேல் வந்தருளினான். சந்திரன் தன் எதிரே தோன்றி மலைபோல அலைமோதுகின்ற அந்த ஒளி யுள்ள கடலையும் உவந்தவன். முத்துக்குமாரசுவாமி எதிரே தோன்றிச் சினமிகுந்து கிரவுஞ்சமலையை மோதியதுபோல அலைவீசுகின்ற கடலையும் மோதிக்கெடுத்த அந்த ஒளியுள்ள வேற்படையையும் விரும்பினான். சந்திரன் குற்றமில்லாத குணத்தையுடைய இரவில் மலர்கின்றமலர்களின் முகம்கோடாது காத்தான் முத்துக்குமாரசுவாமி குற்றமில்லாத குணத்தைப் பொருந்தி ஏற்பவரிடத்தில் நடுநிலைமையாக இருந்து அவர் களைக் காத்தருளினான் சந்திரன் சூரியன் வரக்கூவுகின்ற சேவற்கோழியைக் கொடிய பொருள் ஆக வைத்தான் முத்துக் குமார சுவாமி சூரியன் உதிக்கும்போது கூவுகின்ற கோழிச் சேவலைக் கொடியாக உயர்த்துக்கட்டியிருக்கின்றான். சந்திரன் பொருந்திய இகழ்களையுடைய குமுதமலர் விரிந்து குளிர்ந்த தேன் ஒழுகும்படி ஒளிமயமான நிலவைத் தோற்று வித்தான் முத்துக்குமாரசுவாமி பொருந்திய வாயாகிய செவ் வல்லி மலர் விரிந்து குளிர்ந்த தேன் போன்ற எச்சில் ஒழுக ஒளி நிலா போன்ற புன் முறுவல் செய்தான். இவ்வாறு சந்திரன் செய்கைகள் எல்லாம் முத்துக்குமாரசுவாமியின் செய்கைகளை ஒத்திருப்பதால் இவன் சந்திரனை நிகர்க்காமல் இருக்கமாட்டான். எனவே நீலகண்டத்தையுடையவனாகிய சிவபெருமான் பெற்ற முத்துக்குமாரசுவாமியுடன் விளையாட வருக; அழகு மிகுந்து விளங்குகின்ற கந்தபுரி செழிக்க எழுந் தருளிய முத்துக்குமாரசுவாமியுடன் விளையாட வருக எனச் செவிலித்தாயர் சந்திரனைச் சிலேடை நயம் அமைய அழைக் கின்றனர். 7

இவ்வாறு சாம உபாயத்தைச் செவிலித்தாயர் கை யாண்டு சந்திரனை அழைத்தனர். அவன் வரவில்லை. எனவே அடுத்துப் பேத உபாயத்தைக் கையாண்டு அழைக்க லாயினர். சந்திரன் கங்கையைத் தலையணியாகக் கொண்ட சிவபெருமானுக்கு ஒரு கண்ணாயிருக்கின்றான். முத்துக்குமார சுவாமி அந்தக் கண்ணுள்ளே மணியாய் இருக்கின்றான்.

சந்திரன் சில நாட்கள் கலைகள் நிறைந்து விளங்குகின்றான்; சில நாட்கள் கலைகள் குறைந்து விளங்குகின்றான். முத்துக் குமாரசுவாமி எந்நாளும் ஒட்பமாகிய கலைகளெல்லாம் நிறைய நிற்கின்றான் சந்திரன் எவ்விடத்தும் இரவோன் என்று சொல்லும்படி திரிகின்றான். முத்துக் குமார சுவாமி அடியவர்கள் அனைவர்க்கும் இருளை முளைக்கின்ற பயிர் களை வளர்க்கின்றான். முத்துக்குமார சுவாமி எல்லா உயிர் களையும் வளர்த்து வருகின்றான். சந்திரன் விளங்குகின்ற அமுதத்தைத் தேவர்கட்குக கொடுத்தான். முத்துக்குமார சுவாமி புத்திகளையும் முத்திகளையும் அளித்தான். உலகங் களையெல்லாம் படைத்த முத்துக்குமார சுவாமி சந்திரனைக் காட்டிலும் மேலானவன் என்று சொல்வது ஒரு பொருளல்ல. அழகிய வழி போன்ற வேதங்களும் முறையிட்டரற்கிம் படி நின்றவனோடு சந்திரனே விளையாடவா எனச் செவிலித் தாயர் அழைப்பதாகப் பாடப் பெற்றுள்ளது [8] மேலும் சந்திரன் எங்கும் பரயை இராக் காலத்து இருட்டை நீக்குவதல்லாமல் மக்கள் உள்ளத்தில் மண்டக் கிடக்கும் அஞ்ஞான இருளை நீக்குவதை அறிந்திருக்க வில்லை. அன்றியும் குளிர்ச்சி பொருந்திய ஆகாயத்தில் விளங்குவது ஒன்றையன்றி உலகப் பரப்பு முழுவதும் விளங்குவதையும் சந்திரன் அறிந்திருக்க வில்லை செவ்விதழ்களையுடைய குமுதமலரை விரிப்பதல்லாமல் மனமாகிய அழகிய தாமரை மலரை விரிக்கவும் சிறை விரிக் கின்ற சகோரப் பறவைக்கு உணவளிப்பது அன்றி எல்லா உயிர்களும் பேரின்பம் நுகரச் செய்யவும் நீ அறிந்திருக்க வில்லை. எனவே, முத்துக் குமார சுவாமிக்குச் சந்திரன் ஒப்பில்லாமையைச் சொல்லுவதில் பயன் இல்லை. இந்தத் தன்மையில் சந்திரனது பெரிய தவப்பயன் யாதொன்றும் இல்லை. நெடியோன் முதலிய தேவர்கள் கிட்டி நிறபவும் சந்திரனை நினைந்து விளையாட அழைத்தருளினன். ஆயிரம் வேதங்களுக்தம் ஒப்பற்ற பொருளாயிருப்பவனுடன் சந்திரனை விளையாட வருமாறு செவிலித்தாயர் அழைக்கின்றனர். [9]

செவிலித்தாயர் அடுத்து, தான உபாயத்தை மேற்

கொண்டு குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனோடு விளையாட வருமாறு சந்திரனை அழைக்கின்றனர். கற்பகத்தரு நிலைபெற்றிருக்கின்ற வானுலகும் மண்ணுலகும் ஒத்திருக்கும்படி இடம் இடந்தோறும் தலைமயங்கக் கூடுகின்ற முத்துக்குமார சுவாமியினது சந்நிதியைச் சேர்ந்தவர்களுடைய பிறவித் துன்பம் முழுவதும் நீக்கி அகம் மகிழ்ந்து நீங்காத சுருப்பத்தில் நிலைபெற்ற ஊழிப்பெரு நோயும் ஒழிந்திடுதலைச் சந்திரன் கண்டிருக்கின்றான். ஆதலால் சந்திரன் தன்னுடைய சயரோகத்துடன் முயற்களங்கமும் ஒழித்துக்கொள்ள நினைப்பானாயின் முத்துக்குமரசாமியினது சந்நிதிக்கு எதிரே அள்ளிக் கொடுக்கின்ற வெண்ணீறும் பிற சிறந்த சாந்துகளும் வேண்டாம். வடியாத சித்தாமிர்தம் என்கின்ற பெருமையான தீர்த்தத்துறையில் பொருந்திய சிறிய நீர்த்துளி ஒன்றேபோதும் 10 தொலையாத புவனங்களிலுள்ள உயிர்கட்கு உயிராய் நிற்பதாகிய ஒரு தெய்வம் உண்டு என்று சொன்னால் அது முத்துக்குமார சுவாமிதான் உடம்பிலுள்ள கண்ணுக்கும் மனமாகிய கண்ணுக்கும் கண்ணாக எதிர்நின்று அருள்சுரந்து அவர்கள் விரும்பின வரங்களைத் தந்தருள்வான் உலகத்தில் இந்தத் தெய்வமன்றி உண்மையாகக் கண்ட தெய்வமானது வேறில்லை. திருமால் உலகமும் நான்முகத் தெய்வமாகிய பிரமன் உலகமும் சுவர்க்கலோகமும் மத்தியம் லோகமும் இவற்றுள் எவ்வுலகம் பெற விரும்பினாலும் சந்திரனுக்கு அவற்றைக் கொடுப்பது ஒரு பொருள் அல்ல. இவ்வுலகங்களின் வேறாகிய கெடாத முத்தியையும் தந்தருள வல்லன். ஆதலால் இவனுடன் விளையாட வா எனச் செவிலித்தாயர் அழைப்பர். 11

செவிலித்தாயர் அழைத்தும் சந்திரன் வாராமையால் தண்ட உபாயத்தை மேற்கொண்டு அடுத்து அழைப்பாராயினர். நெடிய உடம்பையும் பசிய கண்களையும் உடைய கரிய அலகைகளைச் செம்மயிர் வரிசையையுடைய தூணில் கட்டி, ஆரவாரித்து நற்கிற, தறும் பூதம் ஒன்றை ஏவி உடம்பிலுள்ள நெடுகிய பழு எலும்பு கெடும்படி, கட்டென்றும் பிடி

யென்றும் கபோலத்தை உடைத்து அடி என்றும் சொல்லிக் கணநாதர் கடுகுதலும் விரைந்து, கடலானது வாய் திறந்தாற் போலக் குகை போலும் வாயைத் திறந்து அப்பேய்கள் அலறுகிற காட்சியைச் சந்திரன் பார்த்திருக்கின்றான். தேனானது முறுக்குடைத்துச் சுரக்கின்ற பெரியதாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் முதலானவர் வாய்பொத்திப் பயந்து நிற்க, சந்திரனை வாவென்று அழைக்கவும் வாராமல் இருக்கின்றான். முத்துக்குமார சுவாமி வெகுண்டால் சந்திரனுக்கு எட்டுத் திசையிலும் ஒரு புகலிடம் இல்லை [12]

மலையைப் பிளந்திட்ட நுனியையுடைய வேற்படையைச் சூரன் உயிரை உண்ணும் பொருட்டு ஏவி நின்றான். குண்டிகையையுடைய வஞ்சகன் ஆகிய பிரமனைக் குடுமித் தலையில் பச்சை இரத்தம் ஒழுகக் குட்டினான். இன்று பிறந்த குழந்தை என்று எண்ணாமல் இந்திரன் முதலாய எட்டுத் திக்குப் பாலகரும் மற்றுள்ளாரும் ஒருநாள் எதிர்நின்று போர் செய்து அவர்கள் பட்டபாட்டினைச் சந்திரன் அறிந்திருக்கின்றான். முற்காலத்தில் தக்கனது வேள்விக்களமானது கொலைக்களம் என்று சொல்லும்படி முடியையுடைய தேவர் அடிப்பட்ட நாளில் சந்திரன் அவமானப்பட்டது சொல்லத் தகுந்த தன்று. அன்று நிகழ்ந்த செயல் இன்றைக்கும் நிகழும் எனத் தோன்றுகின்றது [13]

தள்ளப்பட்ட பிறவிக்கடலில் வீழ்ந்து வருந்துகின்ற மக்களை மோட்சமாகிய பெருங்கரையில் செலுத்துபவன். சந்திரனைத் தலையளி செய்வானாய் வரவழைக்கவும் அவன் வராவிட்டால் குளிர்ந்த அன்பு ஊறி அருள் வெள்ளம் பொழிகின்ற கடைக்கண் சிவக்கும்படி இவன் முனியாவிடினும் அழுது கண் சிவக்கக் கண்டால் பானு கோபனைக் கொன்ற இளையவீரன் பொறுப்பவன் அல்லன். கள்ளத்தைத் பெற்றிருக்கிற கண்களையுடைய கடைசியரது மக்கள், அலைகளையுடைய காவிரியாற்றின் தண்ணிய துறைதோறும் ஒளியுள்ள முத்துக்கள் குவிந்து கிடக்கின்ற மணற்குன்றின்மேல்

ஏறி அந்தக் கலைமதியாகிய கலசத்திலுள்ள அமுதத்தை அள்ளிக்கோடற்குரிய பெரிய வனங்கள் சூழ்ந்த கோனாட னாகிய முத்துக்குமார சுவாமியுடன் சந்திரன் விளையாட வரவேண்டும் என அழைப்பர்[14]

தன்னை நிகர்த்த தெய்வச் சிறுவரும் இளைய வீரரும் திருவடி நிழலின்கீழே நிற்க. இந்த உலகமும் தேவருலகமும் மற்றப் புவனங்களும் நிலைகுலையும் நாளில் தேவரை அழக் காண்பவனாகிய முத்துக்குமாரசுவாமி, சந்திரனைப் பொருளாக்கி ஒரு விரல் நுனியாற் சுட்டி நீண்ட கழலை அணிந்த காலுதறி, நீண்ட கமலம்போலும் கண்களைப் பிசைந்து அழுது கூப்பிட் டனன். சந்திரனுக்கு இதில் ஒரு வியப்பு இல்லை, ஒன்றோ டொன்று பின்னியதுபோல் வரும் அலைகளோடு கூடிய தேவ நதியின் தண்ணிய துறைகளில் தெய்வப் பெண்களுடைய கூட் டங்கள் போல, பெருகி வருகின்ற நீர்ப்பெருக்கையுடைய காவிரியாற்றின் மலர்கள் விரிந்த பெரிதும் குளிர்ந்த துறை களில் அன்னப் பறவைக் கூட்டங்கள் மூழ்கி ஆடுதற்கிடமான கோனாடனுடனே சந்திரன் விளையாட வரவேண்டும் [15] என இறுதி நான்கு பாடல்கள் குழந்தையாகப் பாவித்துப் பாடப் பெறும் பாட்டுடைத் தலைவனாகிய முத்துக்குமார சுவாமியுடன் விளையாட வருமாறு சந்திரனைச் செவிலித்தாயர் தண்டம் என்னும் உபாயம் மேற்கொண்டு அழைத்ததாகப் பாடப் பெற்றுள்ளன.

சேக்கிழார் பிள்ளைத்தமிழின் அம்புலிப் பருவத்தில் முதலிரண்டு பாடல்கள் சாம உபாயத்தாலும் அடுத்து வரும் ஐந்து பாடல்கள் பேத உபாயத்தாலும் ஏனைய இருபாடல்கள் தான உபாயத்தாலும் இறுதியிலுள்ள பாடல்தண்ட உபாயத் தாலும் செவிலித்தாயர் அம்புலியைக் குழந்தையாகப் பாவித் துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனோடு விளையாட வருமாறு அழைப்பதாகப் பாடப் பெற்றுள்ளன.

சந்திரன் பதினாறு கலைகளுடன் திகழ்பவன். திருப் பாற்கடலில் தோன்றிய சிறப்பும் உடையவன். குளிர்ந்த ஒளி உடையவன். சந்திரனது குளிர்ந்த ஒளியைக் கண்டபோது

கடல் பொங்கும். சந்திரன் இடபராசிக்கு உரியவன். அழகிய வளத்தைக் கொண்டவன். அவன் அழகுடையவன் என்பதை அவனை மாதர்களின் முகத்திற்குப் புலவர்கள் ஒப்புக் கூறுதலால் அறியலாம். சேக்கிழார் பெருமானும் பெருமைமிக்க அறிவுடையவர்.பல்கலைக்குரிசில். இவரது தோற்றத்தால் வம்பர் கூடிய அவைகள் அலறி வாய் அடங்கின. சேக்கிழார் பெருமான் சாந்த வடிவினர்; சேவாகிய ரிஷபத்தை உரிமையாக உடையவர்; உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பின்மையாலும் மற்றையப் பணிகட்குப் பழுதுண்டு ஆதலாலும் இவர் எருதால் ஏராம் கலப்பை வளத்தால் உழுது என்றும் மேன்மை கொண்டவர்; குடியில் சிறந்து விளங்கியவர்; சிவபெருமானுடன் இரண்டறக் கலந்தவர். எனவே சேக்கிழார் சந்திரனுக்கு ஒப்பாவர் என்றும் [16] சந்திரன் தோன்றத் தாமரைகள் குவிந்துவிடும் அத்தகைய ஒளிக் கதிர்களைப் பெற்றவன் சந்திரன்; நட்சத்திரங்களுடன் பொலிபவன்; அத்திரி மாமுனிவர் விழியினின்று வந்தவன்; இறைவன் சடாமுடியில் இருக்கும் கங்கையுடன் சந்திரனும் இருப்பவன்; உலகுக்கு ஒளிதரும் பேறுபெற்றவன்; பொருள்களின் விளைச்சலுக்குப் பால் சுரப்பித்து உலக உயிர்களைக் காப்பவன். சேக்கிழார் பெருமானாரும் அன்பர்களது கைகளாகிய தாமரைகள் குவிய விளங்குபவர்; வீடு முழுவதும் நெல் நிரம்பக்கொண்டு மகிழ்பவர்; சிவனார் கண் போல் பொலிபவர்; வேளாளர்கள் கங்காநதி சம்பந்தமுடையவர்கள். அவர்களைக் கங்கை புத்திரர்கள் என்று கூறுதல் உண்டு வேளாளர்கள் உலக உயிர்களை உழவு வளத்தால் காப்பவர்கள். இக்காப்புத் தொழில் சேக்கிழார்க்கும் உண்டு. இன்னோரன்ன காரணங்களால் சந்திரனும் சேக்கிழாரும் ஒருவரையொருவர் ஒப்பாவர் [17] இவவாறு செவிலித்தாயர் சந்திரனுக்கும் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனுக்கும் ஒப்புமைகூறி அவனோடு விளையாட வருமாறு அம்புலியை அழைக்கின்றனர்.

இவ்விரண்டு பாடல்களும் சிலேடை அணி அமையப் பாடப்பெற்றுள்ளன. அவற்றுள் பின்வரும் பாடல் இங்குச் சான்றாய்வுக்கு மேற்கொள்ளப் பெறுகின்றன.

"பாடுமதி யோன்எனப் படுதலால் வாய்விண்டு
பதினா யிரம்சுரும்பர்
பண்பாட இன்நறவு வீசுகழு நீர்மாலை
பாங்குற உவந்திடுதலால்
நீடுசுடர் படுசம்பு வொடுகூட லால்கலை
நிரம்பத் தழைத்திடுதலால்
நெடியஅம் பரவைஅல றத்தோன்ற லால்என்றும்
நிகழ் சாந்த மேஉடைமையால்
வாடுதலில் சேக்கிழான் ஆதலால் நகும்ஏர்
வளம்தழுவ லால்எம் ஐயன்
மானுதல் தெரிந்துவரு கென்றழைத் தான்மழைபெய்
வானம்கிழித்து மேல்போய்
ஆடுகொடி மாளிகைக் குன்றைநகர் ஆளியுடன்
அம்புலீ ஆடவாவே
அருள்உருத் தேசுபொலி அருள்மொழித் தேவனுடன்
அம்புலீ ஆடவாவே"[18]

| சேக்கிழார் | சந்திரன் |
| --- | --- |
| நூல் பாடும் அறிவுடையவர் | பெருமை பொருந்திய அல்லது தேய்கிற மதி என்னும் பெயர் உடையது |
| வேளாளர் ஆதலால் கழுநீர் மலர்மாலை அணிந்து மகிழ்வர் | கழுநீர் மலர் வரிசை தன்னைக் கண்டு மலர்வதால் மகிழும் |
| அன்பால் தொண்டு புரிந்து சிவபெருமானை அடைந் துள்ளார் | சிவபிரானால் தலையில் சூடப்பெற்று அவனை அடைந்துள்ளது |

| | |
|---|---|
| பலவகைக் கல்வி அறிவு நிரம்பியுள்ளார் | பதினாறு கலைகள் நிரம்பி உள்ளது |
| நீண்ட வீணர் கூட்டம் கதறுமாறு தோன்றுவார் | நீண்ட அழகிய கடல் தன்னைக்கண்டு முழங்கிப் பொங்கி எழும்படித் தோன்றும் |
| சாந்தம் உடையவர் | சாந்தம் உடையது |
| கலப்பையால் உழுது உணவுப் பொருள் சேர்க்கும் வேளாண் குடிப் பிறந்தவர் | ஏர் - கலப்பை, அழகு அழகின் மிகுதி உடையது |

என அம்புலிக்கும் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெற்றுள்ள பாட்டுடைத் தலைவனுக்கும் சிலேடை அணி விளங்க ஒப்புமை கூறப் பெற்றுள்ளது.

அடுத்து, சந்திரனுக்கும் குழந்தையாகப் பாவித்துப் பாடப் பெற்றுள்ள பாட்டுடைத் தலைவனுக்குமுள்ள வேறு பாடுகள் கூறப்பெறுகின்றன. "சந்திரன் இரவில் தோன்று பவன்; யாசிப்பவனும் ஆவான். ஆதலின் இரவோன் எனப் படுபவன், சேக்கிழார் இல்லை என்னாத வேளாளர்தம் பெருங்குலத்தில் உதித்தவர். கள்வன் சந்திரன் வருகையினை உவக்கின்றான்' சேக்கிழார் கள்வர்களை வெறுப்பவர். சேக்கிழார் நல்லவர். சந்திரன் சிற்சில சமயங்களில் நற்பெயர் எடுப்பது இல்லை. சேக்கிழார் தேவர்களில் ஒருவராகக் கோயில் களில் வணங்கப்பெற்று வருபவர். சந்திரன் தேவர்களில் ஒருவனே ஆயினும் ராட்சதன் என்று பொருள்படும் தானவன் என்னும் பெயரும் உடையவன். ஆதலின் சிறுமையுற்றவன் ஆயினன். சேக்கிழாரை எல்லோரும் பரவினர், பரவுகின்றனர். ஆகவே அவர் பரவோன் ஆயினர். ஆனால் சந்திரன் அத் தகையவன் அல்லன். பரவுவோர் இகழவும் செய்வர். ஆகவே பரவுவோன் அல்லாதவன் எனப்பட்டான். [19] இவ்வாறே இன்னும் நான்கு பாடல்கள் சேக்கிழார் பெருமானுக்கும் சந்திரனுக்குமுள்ள பேத உபாயங்கள் கூறுகின்றன.[20]

இங்ஙனமெல்லாம் கூறிஅழைத்தும் அம்புலி குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனோடு விளையாட வரவில்லை; அம்புலி வந்து விளையாடினால் கைகூடும் நன்மைகள் அடுத்து கூறப்பெறுகின்றன. சந்திரனால் விளையும் பயனைச் சேக்கிழார் நன்கு உணர்வர். இவர் சந்திரனைப் போல நன்றி மறந்தவர் இல்லை. சந்திரன் ஒளி படுவதால்தான் பயிர், செடி, கொடி, மரங்கள் எல்லாம் கருக் கொள்கின்றன. பயிர்த் தொழிலைத்தம் குலத்தொழிலாகக் கொண்ட சேக்கிழார் சந்திரனால உண்டாகும் பயனை அறியார் அல்லர் சந்திரனுக்குள்ள கறையை ஒழிக்க வேண்டும் என்ற எண்ணம் இவருக்கு உண்டு. சேக்கிழார் நகத்தக் கூன்மேல் நிரம்ப வெறுப்பு உண்டு. இவர்தம் பெரிய புராணச் செய்யுட்களில் எங்கும் கூன் வைத்தவரில்லை.[21] சேக்கிழார் தொடர்பு சந்திரனுக்குப் பெரும்பயன் நல்கவல்லது சந்திரன் களங்கமும் உடையவன் அஃது அவன் அழகைப் பாழ்படுத்துகின்றது களங்கம் தீர்ப்பதில் சேக்கிழார் கைதேர்ந்தவர். தலைமயிர் பறித்தும் அரையில் பாயுடுத்தும் தழைத்திரள் கைவைத்தும் உழலும் சழக்கர்களாகிய சமணர் நெறிக் களங்கம் இவராலேயே தவிர்ந்தது கலைகள் பலவற்றிலும் தேர்ச்சி படைத்தோர் பலர் இவர் கடைக்கண் நோக்குக்குக் காத்து நிற்கின்றனர். இத்தகைய சிறப்புக்கள் நிரம்பிய சேக்கிழார் சந்திரனைக் சடைக்கணித்தழைப்பது இவர்க்கு இயல்பாக உள்ள இரக்கத்தால் ஆகும்.[22]

இவ்வாறு தான உபாயம் மேற் கொண்டழைத்தும் அம்புலி வரவிலலை. எனவே தண்ட உபாயம் மேற்கொண்டு குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனோடு விளையாட வருமாறு அடுத்து அழைக்கப் பெறுகின்றான். சேக்கிழார் சந்திரனிடத்துக் கடுஞ்சினம் கொண்டிருக்கின்றார் அன்பாகப் பலமுறை விளையாட அழைத்தும் சந்திரன் வாராமையால் அவர் முகம் வெதும்புகிறார் சந்திரன் பால் களங்கம் இருப்பதால் சேக்கிழார் எதிரே வர நாணுகிறான். ஆதலால் சினம கொள்ள வேண்டாம் எனச் செவிலித்தாயர் சேக்கிழாரிடம் வேண்டிக் கொண்டிருக்

கின்றனர். இனியும் சினம் தணிப்பது தம்மால் இயலாது அச்சினம் உள்ளது நொடிப் பொழுதே ஆயினும் அதனைத் தாங்கும் ஆற்றல் சந்திரன் பெற்றிருக்க வில்லை. வேறு போக்கும் சந்திரனுக்கு இல்லை. சந்திரன் பொடிப் பையன் எனச் சொல்லிச் சேக்கிழார் அவன் மேல் ஒரு செய்யுள் திருவாய் மலர்ந்தருள்வரேல் சந்திரன் பிழைப்பு அழிந் தொழியும் சிவபெருமான் திருமுடிமேல் இப்போது அமர்ந்து திகழ்கின்றான். இந்நிலையில் சந்திரன் தனது எதிர்காலத்தை எண்ணிப்பார்க்க வில்லை. சேக்கிழார் செய்யுளைக் கேட்கும் சிவனாரும் சந்திரனைச் 'சீ' என வெறுப்பர். சேக்கிழார் வாய்ச் சொல்லில் சிவபெருமானுக்கு அவ்வளவு மதிப்பு அதனால் சந்திரன் அழிவான். இவ்வழிவைத் தவிர அவனுக்கு வேறு முடிவு எதுவும் இல்லை. இம்முடிவைச் சந்திரன் மனக்கண்முன் கொண்டு வந்து விரைவில் ஓடி வந்தால் அவனுக்குப் பிழைப்பு உண்டு சேக்கிழார் அருளே உருவா னவர். அருண்மொழித் தேவர் என்னும் இயற் பெயரினர். ஆதலின் சந்திரனை மன்னிப்பார் எனச் செவிலித்தாயர் சந்திரனை நோக்கிக் கூறி அவனைக் குழந்தையாகப் பாவித் துப் பாடப் பெறும் பாட்டுடைத் தலைவனோடு விளையாட வருமாறு அழைக்கின்றனர்[23]

இவ்வாறு பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் அம்புலிப் பருவம் திட்ப நுட்பத்துடன் அமைக்கப்பெற்றுள்ளன. இயற்கை வருணனைக்கு மட்டுமே பாடுபொருளாயிருந்த நிலவை முன் வைத்துப் பாட்டுடைத் தலைவனின் சிறப்புக்கள் வெளிப்படுத் தப்பெறுகின்றன. படைப்பாசிரியர்களின் உழைப்பும் ஆற்றலும் வெளிப்பெற இப்பருவமே மிகுதியும் துணைபுரிவதைக் காண முடிகின்றது. இதுவே அவர்களின் திறமைக்கு அறை கூவ லாயும் அளவுகோலாயும் விளங்குகின்றது.

## அடிக்குறிப்புகள்

(1) திருக்கலைசை செங்கழுநீர் விநாயகர்

பிள்ளைத்தமிழ், பா. எண்: 31

(2) மேற்படி : 32

(3) மேற்படி : 33

(3) மேற்படி 33

(4) மேற்படி 34

(5) மேற்படி 35

(6) அம்புலிப் பருவம், பா. எண்: 1

(7) மேற்படி : 2

(8) மேற்படி : 3

(9) மேற்படி : 4

(10) மேற்படி : 5

(11) மேற்படி : 6

(12) மேற்படி : 7

(13) மேற்படி : 8

(14) மேற்படி : 9

(15) மேற்படி : 10

(16) சேக்கிழார் பிள்ளைத்தமிழ், பா. எண்:62

(17) மேற்படி : 63

(18) மேற்படி : 61

(19) மேற்படி : 64

(20) மேற்படி : 65-8.

(21) கூன் என்பது அடி முதலில் செய்யுளின் பொருளைத் தழுவித் தனியே வந்து நிற்பது.

(22) சேக்கிழார பி. த. பா, எண்: 69

(23) மேற்படி : 70-71.

# 7. இதிகாசத் தாக்கம்

இதிகாசம் என்பது "இவ்வாறு முன்னர் நடந்தது" என மக்களால் உண்மையாக நம்பப்படும் ஒரு கதைப்பாடல் ஒரு நாட்டின் முற்கால வரலாறாகவும் அது அமைகின்றது குறிப்பிட்ட வீரன் ஒருவன் அடுத்தடுத்து நிகழும் தனது வீரச் செயல்களினாலே தன்தேச மக்களின் கதியை அல்லது அவர்களை இயக்கிவந்த நோக்கத்தை முற்றுவிப்பதே இதிகாசத்தில் கூறப்படும் பொருளாகும்.[1] இதிகாசங்கள் வாழ்க்கையை ஒத்துச் செல்வதாக அமைந்து பல்வேறு இடங்களிலுமுள்ள பொது மக்களை இன்புறுத்தலோடு அவர்களை மயிர்க்கூச்செறிய செய்து ஊக்கி உயர்ந்த இலட்சியங்கள்மீது அவாக் கொள்ளச் செய்யும்[2] நீதிக்கருத்துக்களையும் கற்பனைகளையும் உலக மக்களுக்கு எடுத்துரைக்கும் பாங்குடையது. இராமாயணமும் மகாபாரதமும் இதிகாசங்களாகத் திகழ்கின்றன. இவற்றின் தாக்கங்கள் சைவ சமயப்பிள்ளைத்தமிழ் நூல்களில் உள்ளனவா என இங்கு ஆராயப்பெறுகின்றது.

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ் தூத்துக்குடி பாகம்பிரியாவம்மைப் பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் ஆகிய மூன்று நூல்களும் இங்கே ஆய்வுக்கு மேற்கொள்ளப் பெறுகின்றன.

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழில் அரும்பாத்தை என்னும் பதியின் சிறப்பைக் கூறும்பொழுது பந்தும் குடமும் தாமரை அரும்பும் யானையின் தந்தமும் எதிரிட்டுப் புறங்கொடுத்தோட அவ்வளவு பருத்து முத்துமாலை அணிந்து சந்தன மணங்கமழும் தனத்தையுடைய பெண்கள் நடனமாடும் மேல்மாடத்தின்மீது சந்திரன் பிரகாசிக்க அவனுடைய கலங்கத்தை அறியாமல் தங்களை வந்து தழுவும் கணவர்களின் பாதம் வணங்கி சந்திரனைப் பார்த்து, "இதோ தேன்கூடு ஒன்றிருக்கின்றது; இதை எடுத்துப் பிழிந்து வடித்துக் கொடுங்கள்" என்று வணங்கவும் கணவன்மார்கள் மகிழ்ச்சி மிகுந்து அங்ஙனம் எடுக்க ஆடுகின்ற அந்திக் காலத்தை யுடைய அரும்பாத்தை பதி எனக் குறிப்பிடுவர்.[3] இங்கு

"... நெய்தலும் நமுதப் பூவு நெகிழ்ந்த செங்கமலப் போதும் கைகளும் முகமும் வாயும் கண்களும் காட்டக் கண்டு கொய்து இவை தருதிர் என்று கொழுநரைத் தொழுகின்றா ரால்" என்னும் கம்பராமாயணப் பாடற்கருத்து ஒத்திருத் தலைக் காணமுடிகின்றது.

குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனாகிய வேதவிநாயகரின் சிறப்பினைக் கூறும் பொழுது, வளப்பம் பொருந்திய ஒற்றைச் சக்கர தேரில் வரும் சூரியன் நிலையை நச்சயிக்க குபேரன் வைத்த தேரில் ஏற நேராய் வரும் இராவணனுடன் போர் செய்கின்ற தேர் அழிய அழகிய தேவர்கட்குத் தலைவனான இந்திரன் அனுப்பின ஆகாயத்தில் எழும்பும் தேரில் ஏறிப் பகையை வென்று மாதரசியான சீதையொடும் புட்பக விமானத்தில் ஏறிப் போகும் போது தடையினால் அவ்விமானம் இறங்கவும் அப்போது அப்பழைய வனத்தினில் விநாயகரை இராமர் பணியும்போது அத்துன்பத்தை நீக்கிச் சீதையும் இலக்கு மணனும் சேனைத் தலைவரும், குரங்குகளும் பருத்த மதில் சூழ்ந்த அயோத்தியில் சேரத் திண்ணிய தேரில் உய்த்த அரும்பாத்தைப் புரி முதல்வா" [5] என இராமாயணக் கருத்து இடம் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது.

மேலும் இலங்கை அழியாதிருக்க சிவபெருமானை நோக்கி இராவணன் தவம் செய்தான். அவர் தரிசனம் தந்து அவன் விருப்பப்படி ஒரு சிவலிங்கத்தைக் கொடுத்து அசுத் தத்துடன் தொடலாகாது, இலங்கை போமளவும் பூமியில் வைக்கக் கூடாதெனச் சொல்லக் கேட்டு அதனைப் பெற்று இலங்கைக்கு வந்து கொண்டிருந்தான். இதனை அறிந்த தேவர் இவன் இலங்கையில் இம் மூர்த்தியைக் கொண்டு போனால் இவன் அரசு அழியா தாகையால் தக்க ஆலோ சனை செய்து விநாயகரிடம் குறை கூறி வருணனை ஏவி வயிற்றில் சிறுநீர் சுரக்கச் செய்தனர். அதனால் இராவண னுக்குச் சிறுநீரின் தொல்லை அதிகமாயிற்று. அச்சமயத்தில்

விநாயகர் ஓர் பிரம்மசாரியாய் எதிர் வரக்கண்டு "நான் கைகால் சுத்தம் செய்து வருமளவும் நீர் இச்சிவலிங்கத்தைப் பிடியும்" என வேண்டினன். சிறுவனாக வந்த விநாயகரோ இராவணனை நோக்கி நான் சிறுவனாதலால் என்னால் தாங்க முடியாது; மூன்றுதரம் கூப்பிடுவதற்குள் வந்துவிட வேண்டும்" என்று கூறிச் சிறிது நேரத்திற்குள் அவனை அழைத்து அவன் வாராமையால் பூமியில் வைத்துவிட்டார் அவன் ஏன் கீழே வைத்தாய்?" என்று கேட்க "இதன் வலிமை என்னால் பொறுக்க முடியவில்லை" என்றார். இராவணன் தன் ஆற்றல் முழுவதையும் சிவலிங்கத்திடம் செலுத்தித் தூக்கியும் சிவலிங்கம் சற்றேனும் பெயராது பசுவின் காது போல் குழைந்தது. பின்பு இராவணன் பிரம்ம சாரியிடம் கோபம் கொண்டு ஓடிப் பிரம்மசாரியைக் குட்ட விநாயக மூர்த்தியாகி இவனைத் தமது துதிக்கையால் செண்டாடினார். இராவணன் வலிமை ஒடுங்கி விநாயகரிடம் வேண்ட, விநாயகரும் கருணை புரிந்தார் என அவரின் கருணையைச் சிறப்பிக்கும் பொழுது இராமாயணச் செய்தி இடம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

தூத்துக்குடி பாகம் பிரியாவம்மைப் பிள்ளைத் தமிழில் செவிலித்தாயர் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியோடு விளையாட வருமாறு அம்புலியை அழைக்கின்றனர். அம்புலி வர மறுக்கவே செவிலித்தாயர் தண்ட உபாயம் கூறி அழைக்கும் பொழுது இராகு என்னும் பாம்பின் வாயினுக்குள் அகப்பட்ட தண்ணீர் தலையில் விடமாக மாறா திருப்பதற்கு மந்திரம் படிக்கும் எண்ணம் சந்திரன் மனதில் ஏற்பட்டால் பாட்டுடைத் தலைவி தங்கியிருப்பது மந்திர நகர் என்னும் இடமாகவே சந்திரன் அறிய வேண்டும். இந்த நகருக்கு அல்லால் மற்றைய நகர்களுக்கு மந்திரநகர் என்னும் பெயர் இல்லை எனக் கூறுகின்றனர்.[6] இங்கு "வல்லரவங் கேட்டு மந்திரங் களிக்கின்றோயை யடுக்த " என்னும் கம்பராமாயண அடி[7] ஒத்துள்ளதை அறிய முடிகின்றது.

அன்றியும்,

> கருமந்தி யுங்கருங் கவியும்வெள் ளைப்பெருங்
> கவியும் கருங்கரடியுங்
> கடல்கொண் டெனவகண்ட படைகொண்டு நடைகொண்ட
> காந்த ராதத்தனா
> ரொருமந்திர மனுமன்றன் முனியம்ப மண்துயவ
> ரொப்பமிடு மொலியொடும்பச்
> சோலையொலி யுந்திரையின் வேலையொலி யும்பெரி
> தொலிப்பயை மறைப்பவந்தனால்
> வருமந்த முகில்செங்கை யமையென் றமைப்பமண்
> மனையோசை பனையோசையு
> மாறிட்ட வன்றைக்கு மின்றைக்கு மாருதியும்
> வாரிதியும் வாய்புதைக்குந்
> திருமந்திர நகர்வைத்த வநமந்த செல்வியே
> செங்கீரை யாடியருளே
> தேசுறு னாகபூ ணாகனார் பாகமே
> செங்கீரை யாடியருளே" [8]

எனவரும் பாடலில் இராமன் வானரப் படைகளோடு இராவணனை வெல்லச் சென்றபோது கடலின் துறைமுற்றத்தில் ஓர் ஆலமரத்தின் கீழ் உட்கார்ந்து இரகசியம் பேச நினைத்தபோது அதன் மேலுள்ள பறவைகள் ஓவென்று இரைச்சலிட அதைக் கண்ட இராமன் செங்கையினால் அடங்குக என்று காட்ட யாவையும் அடங்கியது என்னும் இராமாயணக் கருத்து இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது,

பாரதப் போரின் பதினான்காவது நாளில் அபிமன்னைக் கொன்ற சயத்திரதனை 'அந்திபடு மவ்வளவில் ஆவி கவரே னேல் வெந்தழலில் வீழ்வன்'' என அருச்சுனன் சூளுரை கூறிய தறிந்து அன்றிரவு வரும்வரை மறைந்திருந்த அச்சயத்திரதன் வெளி வருமாறு கண்ணன் ஆழியால் சூரியனை மறைத்தமையை அவன் இல்லாளாகிய தாமரை அறியின் தாமரையில்

இகுப்பவளான அக்கண்ணன் மனைவியான திருவும் அவன் மகனான பிரமனும் அவன் மருகியான கலைமகளும் வெளி வராவாறு தன்னிதழ் சுருக்கிக்கொள்ளும் என்னும் செய்தி அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்க் காப்புப் பருவத்தில் இடம் பெற்றுள்ளது.[9]

பாரதம் ஐந்தாவது வேதமாகப் போற்றப் பெறு கின்றது; தெய்வத் தன்மை பொருந்தியது; வேதவியாசர் பாரதத்தை வட மொழியில் கூற விநாயகர் தன் தந்தம் ஒன்றால் மேரு மலையில் எழுதினார்; கவித்தொகை இலட்சத்து இருபத்தையாயிரம் ஆகும் என்னும் செய்திகளை அரும்பாத் தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழில் காண முடிகின்றது.[10]

இவ்வகையில் இம்மூன்று இலக்கியங்களிலும் இராமா யண பாரதத் தாக்கத்தைக் காண முடிகின்றது. பாட்டுடைத் தலைவனின் சிறப்புக்களை எடுத்துரைக்கும்பொழுதும் அவ னுடைய கருணையாற்றலை விளக்கும்பொழுதும் அவன் எழுந் தருளியிருக்கின்ற பதியின் பெருமை கூறும் பொழுதும் இதி காசத்தாக்கத்தைக் காணமுடிகின்றது. இந்திய ஞான ரதத்தின் இரு அச்சுக்களாக இராமாயணமும் பாரதமும் விளங்குகின்றன. இத்தகு உயர்ந்த படைப்புகளின் கருத்துக்கள் பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றிருப்பதால் அவ்விலக்கியங்களின் மதிப்பு உயர்ந்துள்ளதைக் காண முடிகின்றது

## அடிக்குறிப்புகள்

1. எஸ். வையாபுரிப்பிள்ளை, காப்பியக்காலம், பக் 279
2. டாக்டர் இரா. காசிராசன், உலகக் காப்பியங்கள், பக்.114
3. தாலப்பருவம், பா. எண் 4
4. எழச். படலம் பா. எண். 54
5. சிறுதேர்ப்பருவம், பா.எண்:1
6. அம்மானைப் பருவம், பா. எண்: 10
7. நிந். படலம், பா. எண் : 59
8. செங்கீரைப் பருவம், பா. எண்:1
9. பா. எண்: 1
10. மேற்படி : 34

# 8. புராணத் தாக்கம்

இறைவன் அல்லது இறைவியோ, இறையடியார்களோ, சமயம் சார்ந்த அறிஞர்களோ பாட்டுடைத் தலைவர்களாகப் பிள்ளைத்தமிழ் நூல்களில் இடம் பெறும் பொழுது புராணத் தாக்கத்தைக் காண முடிகின்றது. கவிதையின் கருத்துக் களுக்கு விளக்கமாகவும் கருத்துக்களோடு இயைந்தும், பாட்டுடைத் தலைவர்க்கு அடையாகவும், சொல், உவமை முதலிய நிலைகளின் தொடர்பாகவும் சைவ சமய நூல்களில் புராணக் கருத்துக்களும் கதைகளும் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

விநாயகரை வணங்கும் பொழுது தலையில் குட்டிக் கொண்டு தோப்புக் கரணம் போட்டு வணங்குவது இன்றும் வழக்கத்தில் இருந்து வருகின்றது. இப்புராண வரலாற்றை அரும்பாத்தை வேத விநாயகர் பிள்ளைத்தமிழில் குழந்தை யாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய விநாயகரின் சிறப்புக் கூறும் பொழுது இடம் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது. சீர்காழியில் சூரபதுமனுக்குப் பயந்து இந்திரன் மூங்கிலில் ஒளிந்திருந்து சிவபூசை செய்ய நந்த வனம் வைத்து அது உலர்ந்ததனால் அதைச் செழிப்பிக்க அகத்தியரிடம் காவிரி இருப்பதை நாரதரால் உணர்ந்து விநாயகரை வேண்ட அவர் குடத்திலிருந்து காவிரியைக் காக உருக் கொண்டு கவிழ்த்துப் பின் சிறுவனாகி ஓடினார். அவரைத் துரத்திக் கொண்டு அகத்தியர் ஓடிக் குட்ட விநாயகர் தன்னுடைய சுய உரு காட்டவும் தானே குட்டிக் கொண்டு தோப்புக் கரணம் போட்டார்.[1]

மேலும் திருமால் சக்கரம் பெற்ற கதை இப்பிள்ளைத் தமிழில் பாட்டுடைத்தலைவர் சிறப்புக் கூறும்பொழுது இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது: திருவீழிமிழலையில் திரு மால் தாமரைகொண்டு சிவபெருமானைப் பூசிக்கையில் அம் மலரில் ஒன்று குறையவே தமது கண்ணைப் பிடுங்கி அர்ச்சித் தார். அதனால் களிப்படைந்த சிவபெருமான் திருமாலுக்குத் தாமரைக் கண்ணன் என்னும் பெயரையும் சக்கரத்தையும்

கொடுத்தார். இச்சக்கரத்தைப் பெற்று மீளுகையில் அதனைப் பூமியிலிட்டு வணங்கினர். அதனை விநாயகர் கவ்விக்கொள்ள திருமால் பிரார்த்திக்க, சிவபெருமான் அவரைக் களிப்புறச் செய்து பெற்றுக்கொள்க என்று கூறவே அவர்முன் கோணங்கிக் கூத்தாடி அவர் மகிழும் போது சக்கரத்தைப் பெற்றுக் கொண்டார்.[2]

விநாயகர் மாம்பழம் பெற்ற கதையும் முருகன் பழனி மலைக்குச் சென்ற கதையும் இப் பிள்ளைத் தமிழில் பாட்டுடைத் தலைவன் சிறப்புக்களை விளக்கும் பொழுது இடம் பெற்றுள்ளன. ஒரு சமயம் கயிலாயத்திற்கு நாரதர் தெய்வத் தன்மையுடைய மாம்பழம் ஒன்று கொணர்ந்து சிவனிடம் தந்தார். சிவன் தன் இருபிள்ளைகளையும் பார்த்து, இந்தப் பகல் பொழுதிற்குள் உலகைச் சுற்றி வருவோர்க்குப் பழம் அளிப்பேன் என்று கூறினார். உடனே முருகன் மயில் வாகனம் ஏறிச் செல்ல அவர் வருவதற்குள் விநாயகர் தம் தாய்தந்தையரைச் சுற்றி, சிவனே எல்லா உலகும் எல்லா உயிர்களும் என்று கூறி மாம்பழத்தைப் பெற்றார். பழம் கிடைக்கப் பெறாத முருகன் கோபித்துக் கொண்டு பழனி 'மலைக்குச் சென்று விட்டார். பின் தாய்தந்தையர் சென்று பழம் நீ' என்று கூறி அமைதி படுத்தினர்.[3]

கயாசூரன் விநாயகருக்கு வாகனமானகதை மரகத முனிவர் என்பவருக்கும் 'விநதை' என்னும் அரக்கிக்கும் பிறந்தவன் கயாசூரன் அவர்கள் யானை உருக் கொண்டு புணர்ந்ததால் யானை முகத்துடன் தோன்றினான். பிறகு சிவ மூர்த்தியை எண்ணித் தவம் புரிந்து பல வரங்கள் பெற்று அரசாண்டு தேவரை வருத்தவும், கடைசியில் விநாயகர் தன் தந்தத்தால் போழ்ந்தனர். வரத்தின் பலத்தால் பெருச் சாளியாகி விநாயகருக்கு வாகனமானான்" என இடம் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது.[4]

விநாயகர் தன்னை வழிபட்ட ஔவையாரை, சுந்தரமூர்த்தி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார்

ஆகிய இருவருக்கும் முன்பாகக் கயிலாயத்தில் சேர்ந்த கதை யும் பாட்டுடைத் தலைவர் சிறப்பை விளக்க முகத்தான் இப் பிள்ளைத் தமிழில் இடம் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது. உடல் மெலிந்த ஔவையாருக்குப் பாட்டுடைத் தலைவராகிய விநாயகர் கயிலாயத்தில் மேன்மையான வீட்டினை அளித்தார். அழகுடைய மங்கையருக்குச் சிறுவீடும் இல்லாமல் கலைக்கின் றாயே எனச் சிறுமியர் விநாயகரை வேண்டுவதாக விநாயக ரின் சிறப்பு வெளிப் படுத்தப் பெற்றிருப்பதை உணர முடி கின்றது.

அருள்மிகு கொளஞ்சியப்பர் பிள்ளைத்தமிழில் கொளஞ் சியப்பரின் சிறப்பினைக் கூறும் பொழுது புராணக்கதை இடம் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது. ஏழு பச்சைக் குதிரைகள் பூட்டப் பெற்று ஒரு சக்கரத்தோடு உள்ள சூரியன் தேரானது இரவு பகலை நல்கி தன் முறையில் தவறாமல் ஓடவும், விடப்பாம்பை அணிந்த பரமன் தேரானது, முன்பு ஊர்ந்து சென்ற சமயம், திரிபுராதியரை அழித்தது அப்படி யின்றி உலகுக்கு நலம் தந்து ஓடவும் உமையவள்தேர், திருமால்தேர், கணபதிதேர் இவை மரபு தவறாமல் ஓடவும், முன்பு அசுரர் அழியத் தேர் நடத்திய வெட்சிப் பூமாலை அணிந்த கொளஞ்சியப்பர் தன்னுடைய சிறுதேரினை உருட்டி யருளவேண்டும் எனத்தாயர் வேண்டுமுகமாகக் கொளஞ்சியப் பரின் சிறப்பு புராண வரலாறு மூலமாக வெளிப்படுவதை அறியமுடிகின்றது. [6]

சங்கர நாராயணர் கோவில் கோமதியம்பிகை பிள்ளைத் தமிழில், குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய கோமதியம்பிகையின் சிறப்பினைக் கூறும் பொழுது அவள் இருநாழி நெல்கொண்டு முப்பத்திரண்டு அறங்கள் வளர்த்ததாகக் கூறப் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. [7] சிவபெருமான் கொடுத்தருளிய இருநாழி நெல்லும் விதைமுதலாகும், அது நாளும் உண்ணும் படிமுறை நெல் அன்று. அம்மை அவ்விதை முதலை உழுவித்துண்ணும்

உயர்குடி வேளாண்மாந்தர் கைகொடுத்துப் பெருக விளைவித்து அவர் வாயிலாக முப்பத்திரண்டு அறங்களையும் செய்வித்தாள் என்பதே பொருத்தமானதாகும்.

மேலும் இப்பிள்ளைத்தமிழில் சிவபிரான் முப்புரம் எரித்தபொழுது பொன் மலை வில்லாக வாசுகி என்னும் பாம்பு நாணாக, திருமால் கணையாக நான்கு மறைகளும் குதிரையாக நான்முகன் தேர்ஓட்டுபவனாக, ஞாயிறும் திங்களும் தேரின் உருள்களாக இசையச் சிவபெருமான் பொருதனன் எனக் கூறப் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது [8]

இப்பிள்ளைத்தமிழில் அம்மையும் அப்பனும் ஆடுகின்ற காட்சி, சிவபெருமானின் சிவந்த திருச்சடை எல்லாத்திசை களிலும் சென்று பரந்தாடவும், திருக்கையில் ஏந்திய தணல் கொழுந்து விட்டுச் சினந்தாடவும், மேகத்தினும் மிகுந்த நீல நிறம் பொருந்திய திருக்கண்டம் ஒளி விட்டாடவும், பாம்பணி பெருகிடவும், யானைத்தோலாகிய போர்வை அசைந்தாடவும் ஆடுகின்றனர். தாமரை மலர் என்று கூறும்படியாயுள்ள எடுத்த பொற் பாதத்துடன் அம்மையும் ஆடுகின்றாள் எனக் கூறப்பட்டுள்ளதைக் காண முடிகின்றது.[9]

சிவமலைப் பிள்ளைத்தமிழில் முன்பொரு காலத்தில் சிவனும் உமையும் திருக்கயிலாய மலையின் கண் உள்ள ரேவா என்னும் நதிக்கரையை அடுத்துள்ள சோலையின் நடுவில் விளங்கும் சித்திர மண்டபத்தை அடைந்தனர். அங்குப் பளிங்குக் கல்லில் எழுதப் பெற்றிருந்த பிரணவ வடிவத்தைப் பார்த்து உமை மகிழ்ந்தனள். அப்பொழுதே பிரணவத்தினின்றும் களிறும் பிடியுமாகிய இரண்டு யானை கள் தோன்றிப் புணரவும் பிரணவ வடிவினராகிய மூத்த பிள்ளையார் தோன்றினர் என்னும் புராண வரலாற்றைக் காண முடிகின்றது.[10]

சேக்கிழார் பிள்ளைத்தமிழில் இறைவன் யானைத் தோலைப் போர்த்துக் கொண்ட வரலாறு "தாருகாவனத்து

இருடிகள் இறைவன்மீது சினம் கொண்டனர். அதனால் அபிசார யாகம் செய்தனர். அதிலிருந்து பாம்புகள், பூதங்கள், புலி, யானை, முயல்கள் முதலியனவற்றை எழுப்பி இறைவனை அழிக்க ஏவினர். அவற்றை முறையே ஆபரணங்களாவும் கணங்களாகவும் கொண்டு மானைக் கையில் ஏந்தியும் புலி, யானை இவற்றைக் கொன்று அவற்றின் தோலை உடுத்தியும் முயலினைக் காலில் மிதித்தும் தமது பேராற்றல் வெளிப்படுமாறு செய்தார்" எனக் கூறப் பெற்றுள்ளது.[11]

இப்பிள்ளைத்தமிழில் சந்திரன் அத்திரி முனிவர் வழியில் தோன்றிய வரலாறு அம்புலிப் பருவத்தில் இடம் பெற்றுள்ளது: அத்திரி முனிவர் ஓர் உபப் பிரமர். இவர் இந்திரிய நிக்கிரகம் செய்து மூவாயிரவருடம் தவம் புரிந்தார். அதுபோது அவருடைய கண்களில் இருந்து பேரொளி தோன்றிப் பத்துத் திக்குகளிலும் ஒளி வீசிக் கொண்டு அக்கண்கள் நீரையும் பெருக்கிக் கொண்டிருந்தன. அந்தக் கருப்பத்தைத் திக்குத் தேவியர் பதின்மரும் தாங்கத் தொடங்கினர். ஆனால், அவர்களால்பொறுக்க முடியவில்லை. சந்திர வடிவான அந்தக் கருப்பத்துடன் பூமியில் வீழ்ந்தனர். பிரமன் அந்தச் சந்திரனை வேதமயமான தேரில் ஏற்றிக் கொண்டு செல்ல, ஏழு ரிஷிகள் வேத மொழிகளால் துதித்தனர். அத்துதியின் சிறப்பால் அச்சந்திரன் மிக்க ஒளி பெற்றான். உலகுக்கு ஒளி தரும் பேறும் பெற்றான் [12] மேலும் இப்பிள்ளைத்தமிழில் அகத்தியர் கடலை உண்டது [13] கசமுகா சூரன் வதை[14] விநாயகர் மாங்கனி பெற்ற வரலாறு[15] இறைவன் எலும்பணிந்த கதை[16] பாலாற்றின் வரலாறு[17]பழையனூர் நீலி வரலாறு[18] விநாயகர் விராட சொரூபம் எடுத்தது விநாயகர் பாரதம் எழுதியது[20] வேளாளர்மைத்துனச் சேண்மை பூண்டது[21] என்னும் புராணக் கதைகள் இடம் பெற்றுள்ளன.

சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய அம்பிகை மலயத்துவச பாண்டியன் மகளாகத் தோன்றிய வரலாறு இடம் பெற்றுள்ளது: மலயத்துவச பாண்டியன் மகப்பேறு

வேண்டி அசுவமேதயாகம் பல செய்தான். இந்திரன் தோன்றிப் புத்திர காமேஷ்டியாகம் செய்யக் கட்டளையிட்டான். அவன் அவ்வாறே செய்யும் பொழுது யாகத்தில் பார்வதி தேவியர் மூன்று முலைகளையுடைய குழந்தையாய் அவதரித்தாள். அரசன் குமாரியின் உறுப்பின் மிகுதியைக் கண்டு கவலை அடைந்திருக்கையில், அசரீரி இக்குழந்தைக்குக் கணவன் தோன்றுகையில் ஒருமுலை மறையும் என்று சொல்லக்கேட்டு மகிழ்ச்சி அடைந்தான். தடாதகைப் பிராட்டியார் சகலகலைகளும் கற்றுத் தந்தை முடிபுனைவிக்கப் புனைந்து செங்கோல் செலுத்தி உலகெல்லாம் வென்று பகைவரிடம் திறை கொண்டு கயிலாயத்திற்குச் சென்று நந்தி முதலிய சிவ கணத்தாருடன் போர் செய்து அவர்களைப் புறங்காட்டி ஓடச் செய்தனள். இதனால் சிவன் போருக்கு வர ஒருமுலை மறைந்தது கண்டு நாணிச் சோமசுந்தரராக எழுந்தருளிய சிவனை மணந்து குண்டோதரனுக்கு அன்னமிட்டு உக்கிர குமார பாண்டியனைப் பெற்று இறைவருடன் திருக்கோவிலில் எழுந்தருளினள்.[22]

இப்பிள்ளைத்தமிழில் மேலும்,

> " வையகம் புகழவரு தெய்வ தியர்முக
> மலர்ந்திட விலஞ்சி நிறைய
> மருவுபுக் கொளியூரின் முதலைவாய்ப் பிள்ளையினை
> வருவித்த மகிமையோங்கும்
> சைவர்சுந் தரர்திருப் பாடல் கொண்டருள் செல்வி
> சப்பாணி கொட்டியருளே "[23]

என வரும் பாடலடிகளில் முதலைவாய் உண்ட பாலகனைச் சுந்தரர் உயிர்ப்பித்த வரலாறு இடம் பெற்றுள்ளது.

இப்பிள்ளைத்தமிழின் அம்புலிப் பருவத்தில் பேத உபாயம் கூறப்படும் பொழுது இராகு, கேது சூரியன் மீதும் சந்திரன் மீதும் பகை கொண்ட கதை கூறப் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது[24] அன்றியும் கஜமுகா சூரன்

விநாயகருக்கு வாகனமாகியது;[25] அம்பிகை இருநாழி நெல் கொண்டு முப்பத்திரண்டு அறங்கள் வளர்த்தது[26] ஆகிய புராணக்கதைகளும் இடம் பெற்றுள்ளன.

திருக்கதிர்காமப் பிள்ளைத்தமிழில் நாரதமுனிவர் வேள்வியிலெழுந்து உயிர்களைப் பாய்ந்து கொல்ல வந்த ஓர் ஆட்டின் கொம்பைப் பிடித்தடக்கி ஊர்தியாகக் கொண்டருளினான் முருகன் என்றும், பரசுராமனோடு கூடி முருகக் கடவுள் சிவபெருமானிடம் விற்கல்வி பயின்று கொண்டிருக்குங்காலத்தில் இமயமலைச் சாரலில் முருகக்கடவுள் பரசுராமனோடு உலாவி வருங்கால் அன்றில் பறவைகள் கொடுமுடியின் உயரத்தால் வடபால் செல்ல மாட்டாது வருந்தி முயன்றதைக் கண்டு இரங்கி அம்மலையை அம்பு விட்டெய்து துளைத்து வழியுண்டாக்கி எளிதாகப் பறந்து போய் வருமாறு முருகன் செய்தான் என்றும் கூறும் பொழுது புராணக் கதைகள் இடம் பெற்றுள்ளன.[27] இக்கதைகளால் பாட்டுடைத் தலைவனின் ஆற்றல் விளங்குகின்றது.

திருத்தணிகை முருகன் பிள்ளைத்தமிழில் திருமால் சக்கரம் பெற்றது;[28] முருகப் பெருமான் பொய்யா மொழிப் புலவர் எதிரில் வேடனாகவும் ஔவையார் முன் இடைப் பையனாகவும், குணசீலர்க்காகத் திருச்செங்கோட்டில் பிரதி வாதி பயங்கரனுக்கு எதிரில் மாடு மேய்க்கும் சிறுவனாகவும், மதுரையில் உருத்திரசன்மனாகவும் வந்தருளியது[29] சிவபெருமான் தன்னை முடியில் வில்லால் அருச்சுனனும் முதுகில் பிரம்பால் பாண்டியனும் உடலெல்லாம் கல்லால் சாக்கியரும் அடித்தும் அவர்களுக்கெல்லாம் பேரருள் நல்கியது[30] ஆகிய புராணக் கதைகள் இடம் பெற்றுள்ளன.

திருப்பேரூர் பச்சைநாயகியம்மை பிள்ளைத் தமிழில், அகத்தியர் பெரிய கடலைக் கையிலுள்ள ரேகை அளவாக்கி உண்டதற்கு எதிர்மறையாக அம்மையின் சிறிய அளவு ஞானப் பால் திருஞானசம்பந்தர் மூலம் பெரிய செயல் செய்தது என

அம்மையின் சிறப்பினைக் கூறும்பொழுது புராணக் கதை இடம் பெற்றுள்ளது. 31

பழனிப் பிள்ளைத்தமிழில், திருவெஃகாவில் கோவில் கொண்டுள்ள பெருமாள், "கணிகண்ணன் போகின்றான்" என்னும் திருமழிசை யாழ்வார் பாடலைக் கேட்டுத் தம்முடைய பாம்புப் படுக்கையைச் சுருட்டிக்கொண்டு அவருடன் சென்றனர் என்னும் புராணக் கதை இடம் பெற்றுள்ளது. 22

புதுவை, திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழில் தாரகாசூரன் குமாரராகிய வித்துன்மாலி, தாரகாட்சன், கமலாட்சன் இவர்கள் மூலரும் சிவபூசை பலத்தினால் பொன், வெள்ளி, இரும்பு கோட்டைகளைப் பெற்று, அக்கோட்டைகளுடன் பறந்துசென்று தேவர்களைத் துன்புறுத்தினர், கடைசியாகச் சிவபெருமான் அவர்கள் இறுமாப்பை அழிக்க மேருவை வில்லாகவும், பிரம்மனைச் சாரதியாகவும், விஷ்ணுவைப் பாணமாகவும் கொண்டு எதிர்த்தார். அச்சமயத்தில் சிரிப்பு தோன்றவும் அச்சிரிப்பினால் திரிபுரம் எரிந்தது" எனச் சிவபெருமானின் பெருமையை எடுத்துரைத்து அத்தகைய சிறப்புடைய சிவபெருமானின் கைப் பற்றிய துணைவியார் எனப் பாட்டுடைத் தலைவியின் சிறப்பினைக் கூறும்பொழுது புராணக்கதை இடம் பெற்றுள்ளது.

மேலும், இப்பிள்ளைத்தமிழில் பாட்டுடைத் தலைவியின் சிறப்புக் கூறும்பொழுது தாருகா சூரனால் துன்பமடைந்த தேவர் பெண்கள் உருக்கொண்டு சிவமூர்த்தியை அடைந்து தமது குறைகளைக் கூறினர். பெண்ணாலன்றி வேறு எவராலும் இறவாத தாருகனை வெல்ல சிவபெருமான் சக்திக்குக் கட்டளையிட்டார். அப்போது தேவியின் ஒருகலை சிவமூர்த்தியின் விஷக்கறை படிந்து நெருப்பு பறந்து கண்ணில் பிறந்து வெளிப்பட்டது. அவ்வுரு காளமாகிய விஷக்கறை படிந்து வந்ததால் காளி எனப் பெயர் பெற்றது; அவ்வகையில் பிறந்த காளி தனது கோபாகினியினால் தாருகனைச் சாம்பல் ஆக்கினாள் என்னும் புராணக்கதை இடம் பெற்றுள்ளது. 24

அன்றியும் இப்பிள்ளைத்தமிழில் மார்க்கண்டனுக்காக யமனைக் கீழே விழ உதைத்த கால்கள் மன்மதன் எரியுமாறு கோபித்த நெற்றிக்கண் திரிபுரத்தை எரித்தழித்த புன்சிரிப்பு, பிரமனுடைய தலையைக் கொய்த நகம், இராவணன் கயிலை மலையைத் தூக்கும்போது கோபித்து அவன்கீழே கிடந்து அலறுமாறு அழுத்திய கால்விரல், தாருகாவனத்து இருடிகள் விட்ட யானை, புலி, பாம்பு இவற்றை வென்ற திறமை, நரசிங்கத்தின் வலிமையை அடக்கச் சரப மூர்த்தியானது ஆகிய சிவபெருமானுடைய செயல்களாகிய இவையனைத்தும் இந்தப் பாட்டுடைத் தலைவியின் சிறப்புக் கூறும்பொழுது இடம் பெற்றுள்ளன. 35

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் பிரமன் பிரணவப் பொருள் அறியாது சிறைப்பட்டது;36 தலைச் சங்கத்தினை முருகன் தலைமை ஏற்று நடத்தியது; 37 கண்ணன் ஆயர்பாடியில் வெண்ணெய் திருடிக் கட்டுண்டது; 38 முருகன் வள்ளியம்மையைக் களவொழுக்கத்தாலும் தெய்வ யானையைக் கற்பொழுக்கத்தாலும் மணந்துகொண்டது;39 திருவுத்தரகோசமங்கையில் சிவபெருமான் உமையம்மைக்கு உபதேசம் செய்தருளுங்கால் முருகப்பெருமான் உமையம்மையின் பூங்குழலில் வண்டாய் இருந்து கேட்டது;40 சகரரால் கடல் தோண்டப் பெற்றது;41 பகீரதனால் கங்கை கொண்டு வரப்பட்டது; 42 விசுவாமித்திரர் திரிசங்குக்காக வேறு உலகம் படைத்தது; 43 தக்கன்வேள்வி; 44 இறைவன் உமையொரு பாகனாக வீற்றிருப்பது 45 முதலிய புராணக் கதைகள் இடம் பெற்றுள்ளன. இவையனைத்தும் பாட்டுடைத் தலைவனின் சிறப்புக்களை விளங்குபவனாக அமைந்துள்ளன. இவ்வகையில் சைவ சமயப் பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் புராணந் தாக்கத்தைக் காண முடிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. பா. எண் :13
2. பா. எண் :27 இக்கதை கழக்கண்டவாறும் கூறப்படுகிறது

வீரபத்திரர் தக்கனைத் தலைநீங்கத் தாக்கிய காலத்துத் திருமால் எறிந்த சக்கிராயுதத்தை அவர் அணிந்த சிரமாலையில் ஒன்று கவ்வியது. அதைப் பெறும்படி திருமால் கொங்கணிக் கூத்தாடினர். இதைக்கண்டு நகைத்த சிரத்தின் வாயினின்று சக்கரம் விழக்கண்ட விநாயகர், அதனை எடுத்துக் கொண்டு அக்கூத்தைத் தம் முன்னும் ஆடப்பணித்துக் களிப்படைந்து சக்கரம் தந்தனர், இவ்வகை சக்கரத்தின் பொருட்டு விகடம் செய்ததால் விகடச் சக்கர விநாயகர் எனப் பெயர் பெற்றார் என்பது காஞ்சிப் புராணத்தால் அறியப் பெறுவது.

3. பா. எண்: 2.

4. பா. எண்: 38

5. ஔவையார் சுந்தரமூர்த்தி நாயனாருடன் கயிலாய மலைக்குச் செல்லவிரும்பி விநாயகரை விரைந்து பூசித்தார், சுந்தரமூர்த்தி நாயனார் சிவகணங்கள் எதிர்கொள்ள வெள்ளை யானை மீது ஏறிச் சென்றனர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமானை மனதில் நினைக்க, சேரமான் அறிந்து தன் குதிரையின் காதில் பஞ்சாட்சர மந்திரம் ஓதி ஆகாயத்தில் எழுப்பி சுந்தரமூர்த்தி நாயனாரைப் பிரதட்சணம் செய்து அவரை வணங்கி இருவரும் கயிலை சென்றனர். விநாயகர் இச்செய்தியால் பரபரப்படைந்த ஔவையிடம் அவர்கட்கு முன்பாக அவரைக் கொண்டு சென்று கயிலாயத்தில் சேர்ப்பதாகவும் பொறுமையாக வழிபாடு நிகழ்த்துமாறும் கூற ஔவையாரும் அவ்வாறே 'சீதக்களபம், என்னும் விநாயகரகவல் பாடித் துதிசெய்து முடிக்க விநாயகர் அவரை தும்பிக்கையால் எடுத்து சுந்தரமூர்த்தி நாயனாருக்கு முன்பு விடக் கயிலாயம் அடைந்தார் என்பது புராணவரலாறு.

6. சிறுதேர் ; 10

7. பா. எண்: 33

8. மேற்படி : 37

9. மேற்படி : 40

10. காப்புப் பருவம் : 1

(11) பா. எண். 86

(12) மேற்படி : 63

(13) மேற்படி 5

(14) மேற்படி : 86

(15) மேற்படி : 88

(16) மேற்படி : 96

(17) மேற்படி : 73

(18) மேற்படி : 57

(19) மேற்மடி : 1

(20) மேற்படி : 1

(21) மேற்படி : 77

(22) சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ், ப. 10

(23) பா. எண் : 3

சுந்தரர் சேரமான் பெருமாள் நாயனாரை நினைந்து மலைநாடு செல்லத் திருவுளங் கொண்டு சோழ நாட்டைக் கடந்து கொங்கு நாட்டில் திருப்புக்கொளியூர் அவிநாசியை அடைத்து திருவீதி வழியாகச் சென்று கொண்டிருந்தார் அங்கே ஒரு வீட்டில் மங்கல ஒலியும் அதன் எதிர் வீட்டில் அழுகை ஒலியும் எழுதலைக் கேட்டு அங்குள்ளோரை வினவ, அவர்கள் நிகழ்ந்ததைக் கூறினர்: ஐந்து வயது நிரம்பப் பெற்ற சிறுவர் இருவர் குளத்தில் குளித்த போது ஒருவனை முதலை விழுங்கியது மற்றவன் பிழைத்தான். பிழைத்த சிறுவனுக்கு இவ் வீட்டில் கல்வித் தொடக்க விழா நடக்கிறது. முதலை வாயில் அகப்பட்டிருந்த சிறுவனுடைய பெற்றோருக்குப் புதல்வன் நினைவு வந்தமையால் வருந்துகின்றனர் என்று சொல்லக் கேட்டுச் சுந்தரர் வருத்தமடைந்தார். இழந்த சிறுவனின் பெற்றோர் சுந்தரர் வருகையை அறிந்து அவரை வரவேற்று மகிழ்ந்தனர். சுந்தரர் இவர்கள் புதல்வனை முதலை வாயினின்று அழைத்துத் தந்த பின்னரே அவிநாசிப் பெருமானை வழி பட வேண்டும் என்று உறுதி

கொண்டு அக்குளத்தை அடைந்து இறைவனை வேண்டி "எற்றான் மறக்கேன்" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடினார். முதலை கரைக்கு வந்து தான் விழுங்கிய புதல்வனை உமிழ்ந்தது. புதல்வனைக் கண்ட தாய் தழுவி எடுத்தாள். பெற்றோர் உட்பட எல்லோரும் சுந்தரரை வணங்கினர் சுந்தரர் அவிநாசி திருக்கோவிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டார்.

(24) பாற்கடல் கடைந்து கிடைத்த அமிர்தத்தைத் திருமால் மோகினி உருக் கொண்டு அசுரர்களுக்கு அளிக்காமல் தேவர்களுக்கே அளித்த போது இரு அசுரர்கள் தேவ உருக் கொண்டு தேவர்களுடன் இருந்ததைச் சூரியனும் சந்திரனும் மோகினிக்குத் தெரிவிக்க அவர் பரிமாறிய சட்டுவத்தால் அடித்தார். அவர்கள் இராகு கேதுக்களாகிச் சூரியன் மீதும் சந்திரன் மீதும் பகை கொண்டனர்.

(25) பா. எண் : 3

(26) மேற்படி : 3

(27) பா. எண்கள் : 31 - 32

(28) மேற்படி : 22

(29) மேற்படி : 69

(30) மேற்படி : 73

(31) சப்பாணி : 1

(33) சப்பாணி : 2

(32) காப்புப் பருவம் : 1

(34) முத்தப் பருவம் : 8

(35) அம்புலிப்பருவம் பா. எண்: 10

(36) பா. எண்: 3

(37) மேற்படி ; 4

(38) மேற்படி : 6

(39) மேற்படி : 6

(40) மேற்படி : 21
(41) மேற்படி : 25
(42) மேற்படி : 8
(43) மேற்படி : 49
(44) மேற்படி : 69
(45) மேற்படி : 99

# 9. தலபுராணத் தாக்கம்

இறைவன் கோவில் கொண்டுள்ள இடம் தலம் எனப்படும். தலத்தில் எழுந்தருளிய தெய்வத்தின் பெருமையையும் அதன் வாயிலாகத் தலத்திற்குரிய பெருமையையும் பாடுவது தலபுராணம். தலத்தில் வழிபட்டு அருள்பெற்றார் பலர் என்று கதைகள் அத்தலப் பகுதியில் வழங்கியிருக்கும். இவையல்லாமல் பல நாடோடிக் கதைகளையும் அத்தலத்தைச் சார்த்திச் சொல்வதுண்டு. இவ்வாறு வழங்கிய கதைகளைத்திரட்டி இந்திரன், பிரமன் முதலான தேவர்களும் அகத்தியர் முதலான முனிவர்களும் எறும்பு முதல் வெள்ளை யானை வரை உள்ள விலங்குகளும், பறவைகளும் இங்கு வழிபட்டு நன்மை அடைந்தார்கள் என்று கதைகளும் புனைந்து பாடப்பெற்றதே தலபுராணம். 1 தமிழிலக்கிய வரலாற்றில் 12-ஆம் நூற்றாண்டு முதல் 20-ஆம் நூற்றாண்டு வரை ஐந்நூற்று எண்பத்தொரு தலபுராணங்கள் தோன்றியுள்ளன. 2

12-ஆம் நூற்றாண்டு முதல் தலபுராணங்கள் தோன்றின என்றாலும் 16, 17, 18, 19-ஆம் நூற்றாண்டு ஆகிய நான்கு நூற்றாண்டுகளிலேயே மிகுதியான தலபுராணங்கள் தோன்றியுள்ளன. எவ்வகை இலக்கியமாக இருந்தாலும் சரி அது தோன்றுகின்றபொழுது தன்காலக்கட்டத்தில் செல்வாக்குடன் இருந்துவருகின்ற பிறஇலக்கிய வகைகளை ஏதாகிலும் ஒருவகையில் தன்னுள், அடக்கிக்கொண்டே அது வெளிப்படுகின்றது. பிள்ளைத்தமிழ் நூல்களின் தோற்றம் வளர்ச்சி ஆகியவற்றைக் காணும்பொழுது 16-ஆம் நூற்றாண்டு முதல் 20-ஆம் நூற்றாண்டு வரையில் தோன்றிய நூல்களே மிகுதியாகும். பிள்ளைத்தமிழ் நூல்களில் தம் காலத்துத் தோன்றிய தலபுராணத்தின் தாக்கத்தைக் காணமுடிகின்றது. சிற்றிலக்கிய வகைகளை நோக்கும்பொழுது அவை பின் வரும் முக்கொள்கைகளின் அடிப்படையில் தோன்றியுள்ளதைக் காண முடிகின்றது

1. அரசர் அல்லது மனிதர் பெயரால் எழுந்தவை.
2. இறைவன் அல்லது இறைவி பெயரால் எழுந்தவை.
3. தலப்பெயரால் எழுந்தவை. இம்மூன்றனுள் தலத்தின் பெயரால் எழுந்தவையே அதிகம். எனவே எவ்வகை சிற்றி

லக்கியமாக இருந்தாலும் அதில் தலபுராணத் தாக்கத்தைக் காணமுடிகின்றது. என்றாலும் இக்கட்டுரையில் சைவ சமயப் பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் விளங்கும் தலபுராணத்தாக்கம் ஆராயப் பெறுகின்றது.

சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்கள் அனைத்திலும் தலபுராணத்தாக்கத்தைக் காணமுடிகின்றது, என்றாலும் அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ், சுப்பிரமணியக் கடவுள் க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ், சேக்கிழார் பிள்ளைத்தமிழ் புதுவை திரிபுர சுந்தரி பிள்ளைத்தமிழ், திருநெல்வேலி காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் மருதாசலக் கடவுள் பிள்ளைத்தமிழ் ஆகிய நூல்களே இங்கு ஆய்வுக்கு மேற்கொள்ளப்பெறுகின்றன.

அரும்பாத்தை வேத விநாயகர் பிள்ளைத்தமிழில் அரும் பாத்தை என்னும் தலம் இடம் பெற்றுள்ளது. இது தென்னார்க்காடு மாவட்டத்தில் திருக்கோவிலூர் வட்டத்திலுள்ள ஓர் ஊராகும். இவ்வூர், இவ்வட்டத்திலுள்ள ஊர்ப்புள்ளி விவரப் பட்டியலில் அரும்பாத்து எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவ்வூரில் கோவில் கொண்டுள்ள விநாயகர் அரும்பாத்தி வேத விநாயகர் என்றும் அழைக்கப்பெறுகின்றார். இவற்றை நோக்கின் இவ்வூர் அரும்பாத்தை, அரும்பாத்தி, அரும்பாத்து என வழங்கப்பெற்றதை அறியமுடிகின்றது.

இப்பிள்ளைத்தமிழில் இத்தலம் சைவ சமயக் குரவர்களான நால்வருள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் திருக்கடவூரை மிதிப்பதற்கு அஞ்சி ஒலியுள்ள வேகமிக்க நீருடைய காவிரியாறு சுற்றியுள்ள அவ்வூரை அடையாமல் நின்றபோது சிவபெருமான் அருள்பெற்று வலிமிக்க கரியமலை போன்ற யானையொன்று வந்து அவர்களைக் கோவில் வழியே ஒதுக்கிக் கொண்டுவந்து, அவர்கள் கோவிலின் அருகில் வரவும், யானை கோவிலுள் புகுந்து மறைந்ததைக் கண்டு ஒப்பற்ற வஞ்சகமுடைய யானை என்று போற்றிய தேவாரப் பாடலைப் பெற்றிருக்கும் அரும்பாத்தைப் பரி 3 என்றும்

கயல்மீன் அம்பு, கடலில் தோன்றிய ஆலகாலவிடம் எமனுடைய வேல், கருவிளைமலர், மன்மதனது அம்புகள் ஆகியவற்றை வென்று ஓட்டிய காதுவரை நீண்ட கண்களையுடைய பெண்கள் ஆசை மயக்கத்தில் கணவன் செய்த பிழைக்காக அவர்களிடமிருந்து பிடுங்கி எறிந்த முத்தாபரணங்கள் சிறு பிள்ளைகள் சிறிய தேரைத் தள்ளிச் செல்ல அதனுடைய சக்கரம் செல்லும் வழியைத் தடுக்கவும் மேல்மாடத்தில் மேக வெளிக்கும் அப்பால் கொடிக்கூட்டங்கள் சென்று சூரியனது தேர்ச்சக்கரத்தின் வழியைத் தடுக்கவும் அழகிய வீதிகளில் குடமுழா வென்ற வாத்தியத்தின் ஒலிக்கு, சோலைதோறும் மயில்கள் ஆடவும் உள்ள அரும்பாத்தை 4 என்றும் மாறிமாறி வருகின்ற பிறப்பில் வெறுப்புற்று நிலையாமையை உணர்ந்த சான்றோர்கள் குற்றமற்ற சமயத்தில் மோட்சக் கருத்து என்கின்ற தூய்மையான தூணில் கட்டப்பட்டு அழிவில்லாத வேதமாகிய வீட்டை அடைந்து சுருங்காமல் மிகுந்த அன்பாகிய 'அழகிய உணவுருண்டையை உண்டு அடியார்களின் ஆசை என்னும் பெரிய வண்டுகள் சுழலுமாறு சிறந்த கருணை என்னும் மதவெள்ளம் ஓடி தீவினையாகிய வயலை அடியோடு அழித்து மெய்ஞ்ஞானமாகிய ஆகாயத்தில் உலவித் தெளிகின்ற அருள்மழை பொழியும் செழித்த அரும்பாத்தை நகர் 5 என்றும் அந்தி நேரத்தில் தோன்றும் இளைய வெண்பிறையையும் மலர்ந்த அழகிய கொன்றை மாலையையும் அரிய அழகிய கரங்கள் நான்கும், விளங்கும் பவளம் போன்ற சிவந்த சடையாகிய காடும் பழிப்பில்லாத அங்குச பாசமும் மழுவாயுதமும் நீண்ட பாம்பாகிய ஆபரணமும், உயர்ந்த நிறம் பொருந்திய அழகிய தந்தமும் விளங்கும் மலர்ந்த விழியும் சந்தனம் பூசிய மார்பில் தங்கும் பூணூலும் சிவபெருமானைப் போலப் பெற்றுப் பூமியில் துதிப்பவர்கட்குக் குலதெய்வமாகி மனம் மகிழும் அரும்பாத்தைப் பதிவாழ் விநாயகனே 6 என்றும் ஆகாயத்தை அளாவிய கிளைகளில் ஏறிப் பெண் குரங்குகள் விரித்து, நெகிழ்த்திய பலாப்பழத்திலிருந்து இனிய தேன் வெள்ளமான பெரிய கால்வாயில், பூக்களிலிருந்து வண்டுகளால் வடிக்கப்பெறும் தேனும் சேர்ந்து பாய்ந்து

வளங்கொழிக்கும் வயல்கள் சூழ்ந்த அரும்பாத்தை நகர் 7 என்னும் தலபுராணத் தாக்கம் இடம் பெற்றுள்ளது.

சுப்பிரமணியக் கடவுள் சேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழில் ஒரு நூறு தலங்கள் பற்றிய வரலாற்றைக் காண முடிகின்றது.

சேக்கிழார் பிள்ளைத்தமிழில் இந்திரநீலப்பருவதம், இரத்தினகிரி, கயிலையங்கிரி திருநாகேச்சுரம், திருவீங்கோய் மலை முதலிய தலங்கள் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இத்தலங்களின் சிறப்புகளைக் குன்றத்தூர் பெற்றிருத்தலின் அது இத்தலங்கள் போல் விளங்குகின்றது என நூலாசிரியர் விளக்குவர். இப்பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய சேக்கிழார் சோழநாட்டிலுள்ள திருநாகேசுவரத் தலத்தின்மீது அளவு கடந்து பற்று வைத்திருந்தார். எனவே தம் ஊராகிய குன்றத்தூரில் ஒரு கோவில் அமைத்து அதைச் சுற்றித் திருமடவளாகமும் அமைத்துத் திருநாகேசுவரம் என்று பெயரிட்டு இங்கேயே வழிபட்டு வந்தனர் என்பது வரலாறு.

இந்திர நீலப் பருவதம் என்பது தேவாரம் பெற்ற வடநாட்டுத் தலங்களில் ஒன்று. ஆனால் இத்தலத்தை அடைதற்குரிய வழிவகைகளை அறிவதற்கு இல்லை. எப்போதும் மேகங்கள் கவிழ்ந்து நீல நிறமாகத் தோற்றம் அளித்தலின் இப் பெயர் பெற்றுள்ளது. இது போல நீலநிற மாளிகைகள் குன்றத்தூரில் இருத்தலின் அவ்வூர் இந்திர நீலப் பருவதம் போன்றது(8) எனக் கூறப்பட்டுள்ளது.

இரத்தினகிரி என்பது திருவாட் போக்கி என்னும் பெயருடைய தலமாகும். இது குளித்தலை இரயில் நிலையத்திலிருந்து ஆறரை மைலில் உள்ளது. செம்மணி மாடங்கள் குன்றத்தூரில் நிறைந்திருப்பதால் அவ்வூர் இரத்தினக்கிரி(9) எனக் கூறப்பட்டுள்ளது.

கயிலையங்கிரி என்பது வெள்ளிமலை: அது நொடித்

தான் மலை என்றும் கூறப்பெறும். இங்கு எழுந்தருளியுள்ள இறைவன் பரமசிவன் என்றும் இறைவி பார்வதியம்மை என்றும் பெயர் பெறுவர். இத்தலம் வடநாட்டில் இமய மலையில் இருக்கின்றது. இத்தலப் பெருமையினைக் குன்றத்தூரார் பெற்றிருப்பதால் இத்தலம் இப்பிள்ளைத்தமிழில் குறிப்பிடப் பட்டுள்ளது.

திருநாகேச்சுரம் என்பது திருநாகேச்சுரம் இரயில் நிலையத்திற்குத் தெற்கே முக்கால் கல் தொலைவில் உள்ளது நாகராசனும் ஆதிசேடனும் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது. சூரியன், சந்திரன் ஆகியோரும் வழிபட்டுள்ளனர். இத்தலம் சண்பகாரண்யம் எனவும் வழங்கப் பெறும் இறைவர் சண்பகாரண்யர்; இறைவி குன்றமுலைநாயகி இங்குள்ள தீர்த்தம் சூரிய புஷ்கரணி இத்தலம் இப்பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய சேக்கிழாருக்கு ஆன்மார்த்த தலமாகும். இது குறித்தே குன்றத்தூரில் இப்பெருமகனார் ஒரு தலத்தையும் நிறுவினார்.10

திருவீங்கோய் மலை திருவீங்கநாதமலை என்றும் வழங்கப்பெறும். குளித்தலை இரயில் நிலையத்திலிருந்து வடக்கேயுள்ள அகன்ற காவிரியைக் கடந்து முசிறியை அடைந்து அங்கிருந்து மூன்று மைல் தொலைவு சென்றால் அதனை அடையலாம். கருடப் பச்சை ஒளியுடன் குன்றத்தூர் விளங்கலின், அது மரகதமலை எனக் கூறப் பட்டுள்ளது.11

புதுவை திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழில் இந்திரன் கௌதமர் மனைவியாகிய அகலிகையிடத்து ஆசையுற்றான், நடு இரவில் சேவலாகக் கூவினான். அவர் குளிப்பதற்குச் சென்றார் அப்போது அவரைப்போல் உருவெடுத்துச் சென்று அவர் மனைவியுடன் புணர்ந்து முனிவரிடம் அகப்பட்டு அநேக யோனிகள் தேகத்தில் உண்டாகவும் ஆண்குறி நீங்கவும் சாபம் பெற்றான் அந்த நாணத்தினால் தாமரைத் தண்டில் நெடுநாள் ஒளிந்திருந்தான். இந்திரன் இல்லத்தில் பூசித்ததால் அச்சாபம் நீங்கி வேதமும் பெற்றான். பிரமன் இத்தலத்தில் மௌனமாக அட்டாங்க யோகங்களைப் பயின்று

அந்தரங்கப் பூசை விதிகளைக் கற்றான். முன்பொருநாளில் உருத்திராட்சம் அணிந்து இத்தலத்தை அடைந்து 'மேதாதி' என்பவன் மோட்சம் அடைந்தான். இத்தலத்தை அடைந்த தசரதராமன் சிவனைக் குறித்து வழிபாடியற்றிப் பாசுபத மாகிய அம்பை நட்புத்தன்மையால் பெற்றான் 12 என்னும் செய்திகள் உள்ளன. மேலும் சிவபெருமான் கண்களைத் தேவியார் விநோதமாக மூடினார். அதனால் அவருக்கு அச்சம் உண்டாயிற்று. அவர் தேகத்தில் வேர்வை உண்டாயிற்று அவ்வேர்வையானது இறைவன் நெற்றிக் கண்ணால் சூடுண்டு மூடிய வரையிலேயே ஒரு கர்ப்பம் உண்டாயிற்று. அவ்வளைக் கருவில் அசுர உருவமாக ஒருவன் கோரத்துடன் பிறந்தான். இவன் பிறவிக் குருடனாகத் தோன்றியதால் அந்தகன் எனப் பெயர் பெற் றான். இவன் இரண்யாக் கதனுக்குச் சிவபெருமானால் கொடுக்கப் பட்டுப் பிரம்ம தேவரைக் குறித்துத் தவம் செய்து ஒருவராலும் வெல்ல முடியாத வன்மையும் கண்களும் பெற் றான். பின் தேவியைக் கண்டு மோகித்துச் சிவபெருமான் மீது போருக்கு வர அவரது சூலத்தால் குத்தப் பெற்று அச்சூலத்தின் மேல் பல நாள் உலர்ந்திருந்து சிவபெருமா னைத் துதித்ததால் கருணை பெற்றுச் சிவகணத்தவன் ஆயினதும் இத்தலத்திலேயே என்னும் செய்தியினையும் அறிய முடிகின்றது. 13

திருநெல்வேலி காந்திமதியம்மைப் பிள்ளைத்தமிழில், அத் தலத்தின் வரலாற்றைக் காண முடிகின்றது. திருநெல்வேலி முன் னொருகாலத்தில் மூங்கில் வனமாய் இருந்தது மூங்கில் வனத்துக் குக் கீழ்பால் இருந்த மணலூரில் முழுதுகண்டராம பாண்டியன் அரசு புரிந்திருந்தான். மூங்கில் வனத்துக்கு மேல்பால் இருந்த இடையர்சேரியிலிருந்து பாண்டியனது அரண்மனைக்குக் குடங் களில் பால்சுமந்து கொணரும் கோபாலன் ஒருவன் நாள்தோறும் தன்காலில் இடறிக் குடப்பாலைக் கவிழ்த்துக்கொண்டிருந்த மூங்கில் கட்டையொன்றை வெட்டுவதற்கு எண்ணியும் 'தெய் வீகமோ' என ஐயுற்று வெட்டாமலிருந்தான் அரசன் குடப்பால

நுறைவதற்காகச் சினங்கொள்ளவே ஒருநாள் மூங்கில் கட்டையைக் கோடரியால் வெட்டினான். இரத்தம் கொப்புளிந்துப் பெருகிற்று அதனை உடனே அரசனிடம் தெரிவிக்கவே அரசன் விரைந்துவந்து அவ்விடத்தில் சிவலிங்கம் ஒன்று இருப்பதைக் கண்டான். "எனை ஆள்அத்தனே! வளர்ந்தருள்!" என மன்னவன் வேண்ட இறைவன் அவ்வண்ணமே வளர்ந்தோங்கி நின்று "வேண்ட வளர்த்த பெருமான்" என்னும் திருப்பெயரும் பெறறார் என்பது அந்தலத்தின் வரலாறு இதனை இப்பிள்ளைத்தமிழ் வேணுவனம், வேய்வனம், அமைவனம், தமிழ் கொழிக்கும் கழைவனம் 14 என்றும் 'வேணுவனம் அதனில் வேண்டவளர் என்னுதற் காட்சியார்" 15 என்றும் குறிப்பிடுகின்றது,

தண்பொருநைபாறு திருநெல்வேலியைச் சுற்றி உக்கரவாகினியாய் ஓடுகின்றது. திருக்கோயிலுக்கு நேர்கிழக்கே பொருநையாற்றிலுள்ளது சிந்துபூந்துறைத் தீர்த்தம் இதனை இப்பிள்ளைத்தமிழ், "தேன் மருவுகள் பூவை என்பினில் வருத்தலால் சிந்துபூந்துறை" 15 எனக் குறிப்பிடுகின்றது,

தாம்பிரசபை என்பது இத்தலத்தில் உள்ளது. இது திருமன்றங்கள் ஐந்தில் ஒன்று இதனைத் தாம்பிரத்தால் வீதித்த திருமன்றுள் இறைவர் உடன் ஆடும் மயிலே" 7 என இப்பிள்ளைத்தமிழ் குறிப்பிடுவதினின்றும் அறியமுடிகிறது.

மருதாசலக் கடவுள் பிள்ளைத்தமிழில், மருதாசலம் என்பது கொங்கு நாட்டில் உள்ளதொரு சுப்பிரமணியத்தலம்; மருதமரம் தல விருட்சமாகவுடையது; எண்ணிய எண்ணியாங்கு அன்பர்கட்கு உதவும் சிறப்புடையது; தன்னைப் பாடியவர்களுடைய உடற்பிணிகளைப் போக்கி முடிவில் பிறவிப் பிணியை ஒழிக்கும் தீர்த்தத்தையுடையது; அநேக மூலிகைகளையுடையது; 18 என்னும் செய்திகளைக் காண முடிகின்றது.

இவ்வகையில் எல்லாப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் தல புராணத் தாக்கத்தைக் காண முடிகின்றது.

## அடிக்குறிப்புகள்

(1) மு. அருணாசலம், முகவுரை, தமிழில் தலபுராண இலக்கியம்

(2) காண்க. வே கிருஷ்ணசாமி, தமிழ்த் தலபுராணங்கள் ஒரு தொகுப்பு, தமிழில் தலபுராண இலக்கியம், பக். 130, 202.

(3) பா. எண். ;' 16

(4) பா. எண். 26

(5) பா. எண் : 60

(6) பா. எண் : 61

(7) பா. எண் : 41

(8) பாலூார் கண்ணப்ப முதலியார், சேக்கிழார் பிள்ளைத் தமிழ் மூலமும் விளக்கவுரையியலும் ப. 405.

(9) மேற்படி : 405

(10) மேற்படி : 406

(11) மேற்படி : 406

(12) பா. எண் : 7

(13) மேற்படி : 7

(14) மேற்படி : 50

(15) மேற்படி : 2

(16) பா. எண் : 81

(17) மேற்படி : 51

(18) மேற்படி : 4, 17, 19, 21.

# 10. பன்னிரு திருமுறையின் செல்வாக்கு

தமிழ்மொழியிலுள்ள இலக்கியங்கள் பொருள், வடிவம் முதலியவற்றிற்கு ஏற்பப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, ஐம்பெருங்காப்பியங்கள், பன்னிருதிருமுறை, நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் எனத் தொகுக்கப் பெற்றுள்ளன. இத்தொகுப்புகளில் ஒன்றாகிய பன்னிருதிருமுறையின் செல்வாக்கைச் சைவசமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் பரக்கக் காணமுடிகின்றது.

பன்னிருதிருமுறையில் முதல்மூன்று திருமுறைகளைப் பாடியவர் திருஞானசம்பந்தர் இவரைக் குழந்தையாகப் பாவித்து, பாட்டுடைத் தலைவராகக்கொண்டு சொக்கலிங்க ஐயா செங்கல்வராய பிள்ளை ந.கனகராஜ்ஐயர், இராம.சொ. சொக்கலிங்கம் ஆகிய நால்வரும் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளனர் நான்கு, ஐந்து, ஆறு ஆகிய மூன்று திருமுறைகளைப் பாடியவர் திருநாவுக்கரசர். இவரைக் குழந்தையாகப் பாவித்துப் பாட்டுடைக் தலைவராகக் கொண்டு சொக்கலிங்க ஐயா, மு கோ.இராமன், இராம சொ. சொக்கலிங்கம் ஆகிய மூவரும் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளனர் பன்னிரு திருமுறையில் ஏழாந்திருமுறையைப் பாடியவர் சுந்தரமூர்த்தி நாயனார் இவரைக் குழந்தையாகப் பாவித்துப் பாட்டுடைக் தலைவராகக் கொண்டு சொக்கலிங்க ஐயா, இராம. சொ. சொக்கலிங்கம் ஆகிய இருவரும் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளனர். எட்டாந் திருமுறையாகிய திருவாசகம், திருக்கோவையாரைப் பாடியவர் மாணிக்கவாசகர். இவரைக் குழந்தையாகப் பாவித்துப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு சொக்கலிங்க ஐயா, இராம.சொ. சொக்கலிங்கம் ஆகிய இருவரும் பிள்ளைத்தமிழ் பாடியுள்ளனர். பன்னிரண்டாம் திருமுறையாகிய திருத்தொண்டர்புராணத்தைப் பாடியவர் சேக்கிழார் பெருமான். இவரைக் குழந்தையாகப் பாவித்துப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார். அன்றியும் மங்கையர்க்கரசியார்மீதும் பிள்ளைத் தமிழ் பாடப்பெற்றுள்ளது.

பன்னிரு திருமுறையில் கூறப் பெற்றுள்ள வரலாற்றை

அடிப்படையாகக் கொண்டே திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், மணிவாசகர், சேக்கிழார் மங்கையர்க்கரசியார் ஆகியோர்மீது பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடப்பெற்றுள்ளன சேக்கிழார் பிள்ளைத்தமிழின் காப்புப் பருவத்தில், பெரிய புராணத்தில் இடம் பெற்றுள்ள தனியடியார்கள் தொகையடியார்களின் வரலாறு சிறப்பாகச் சொல்லப் பெற்றுள்ளன.

இவ்வாறு பன்னிருதிருமுறையில் சிறப்பாக இடம் பெற்றுள்ள அடியார்களைப் பற்றிப் பிள்ளைத்தமிழ் நூல்கள் பாடப் பெற்றுள்ளதோடு மற்ற சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் ஆங்காங்கே பன்னிரு திருமுறையின் செல்வாக்கு விளங்குகின்றது.

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழில் திருஞானசம்பந்தர் மதுரையில் சமணரை வென்று " கூன் பொருந்திய பாண்டியன் முன் வைகை நதியில் சைவ சமயம் நிலைபெறுக " என ஓதின ஏட்டை விட்டார். அது நீரின் எதிரோட, நல்லியல்பமைந்த அவ்வேட்டைக் கொள்வேனென்று ஓடிய குலச்சிறை யாருக்கும் அதைப் பெறச் செய்யாது நீரிலே செல்ல விட்டு மதுரைக்கு அருகிலிருக்கும் பூவணம் என்னும் ஊரில் ஒரு பிள்ளையாய் வந்து வெள்ளத்தின் அலையில் பெருமை பொருந்திய அவ்வேட்டை எடுத்தளித்த வேதவிநாயகர் எனவரும் செய்தியில் தேவாரத்தின் சிறப்பு புலப்படுகின்றது.1

திருநாரையூரில் சிவவேதியர் குலத்தில் நம்பியாண்டார் நம்பி பிறந்தவர். இவர் தந்தையார் வேற்றூருக்குச் சென்றிருந்த போது, தாய் பிள்ளையாருக்கு வழிபாடு நிகழ்த்த பழம், பூ, அன்னம் முதலியவற்றைக் கொடுத்தனுப்பினார். அவ்வாறே நம்பி வழிபாடு நிகழ்த்திப் பூசிக்க வேண்ட அவர் புசிக்காதிருந்ததால் தமது தலையைக் கல்மேல் மோத இருக்கையில் பிள்ளையார் தடுத்து அமுது செய்தனர். மேலும்

நம்பி தமக்குக் கல்வி கற்றுத் தருமாறு வேண்ட விநாயகர் உண்பதையும் நிறுத்திப் பல கலைகளையும் கற்றுக் கொடுத்தார். இதைக் கேட்ட இராஜராஜசோழன் நம்பிகளை வணங்கிப் பிள்ளையாருக்கு மிகுந்த பூசை செய்வித்து மூவர் தேவாரத்திருமுறைகள் இருக்குமிடம் அறிய விரும்பி விநாயகரைக் கேட்குமாறு வேண்டினர். நம்பியார் விநாயகரைக் கேட்டுத் தில்லையில் மேற்குக் கோபுரத்தை அடுத்த திருமதிலில் சேமித்திருப்பதாகக் கூறினார் என்னும் செய்தியினை இப் பிள்ளைத்தமிழில் காண முடிகின்றது.2 இதில் இராசராச சோழன் மூவர் தேவாரம் கண்ட வரலாறு விளங்குகின்றது.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுது குன்றடைந்து சிவபெருமானைப் பொன் வேண்டினார். பெருமானும் அவருக்குப் பொன் அளிக்கவே நாயனார் அதில் சிறிது வெட்டி வைத்துக் கொண்டு மணிமுத்தாநதியில் இட்டு அதைத் திருவாரூர் குளத்தில் தரவேண்டுமென்று வேண்டினார். பின்னர் அங்கிருந்து திருவாரூரை அடைந்து பரவையாருடன் குளத்தில் வந்து தேடுகையில் பொன் அகப்படாமல் போகவே பரவையார் ஆற்றில் விட்டு குளத்தில் தேடுகிறீரோ என்று பரிகாசம் செய்தார். உடனே நாயனார் பதிகம் ஓதி அப் பொன்னைப் பெற்றுத் தான் வெட்டிவைத்த பொன்னிற்கும் அதற்கும் மாத்துக்குறைவதைக் கண்டு வருந்த விநாயகர் வணிகனாக வந்து மாத்து உரைத்துக்காட்டி 'நல்லப் பொன்' என்றார் என்னும் செய்தி சுந்தரமூர்த்தி நாயனார் வரலாற்றில் அடங்கியுள்ளது. இதனை, இப்பிள்ளைத்தமிழில் காண முடிகின்றது. 3

சேலம் பேர்லாண்ட்ஸ் (அழகாபுரி) ஞானசுப்பிரமணிய சுவாமி பிள்ளைத்தமிழில், திருமயிலையில் சிவநேசன் செட்டியார் மகள் பூம்பாவையை அரவு தீண்டி இறந்துவிட செட்டியார் பெண்ணின் எலும்புகளைக் குடத்திலிட்டு ஞானசம்பந்தர் வரும் வரைக்கும் பாதுகாத்து வைத்திருந்து திருமயிலைக்குச் சம்பந்தர்வர அவர்முன் எலும்புக்குடத்தை வைத்து அருள் செய்ய வேண்டுமென்று செட்டியார் வேண்டப் பிள்ளையார் கபாலிச்சுரத்து இறைவனை வேண்டித் தேவாரம்பாடி எலும்பைப் பெண்ணாகச் செய்த வரலாற்றைக் காணமுடிகின்றது. 4

சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழில், அவிநாசியில் சுந்தரர் பதிகம் பாடி முதலையுண்ட பாலகனை உயிர்ப்பித்த வரலாற்றைக் காண முடிகின்றது. 5 இப்பிள்ளைத்தமிழில் மேலும், சுந்தரர் சேரவேந்தனுடன் சிலநாட்கள் தங்கியிருந்து திருவாரூர் செல்ல நினைத்துச் சேரரிடம் சொல்ல, சேரமான் தம் திருமாளிகையிலுள்ள பொருட்களைப் பொதிசெய்து உடன் அனுப்பிவைத்தார், சுந்தரர் வழிகள் பலவற்றைக் கடந்து கொங்கு நாட்டுத் திருமுருகன் பூண்டி வழியே செல்லுங்கால் சிவபெருமான் பூதகணங்களை வேடுவராகச் சென்று வழிப்பறி செய்து வருமாறு பணிந்தருள அவ்வண்ணமே பூதகணங்கள் வேடர்களாய்ச் சென்று அச்சுமுத்திப் பொருட்களைப் பறித்துக் கொணர்ந்தன. சுந்தரர் திருமுருகன் பூண்டித் திருக்கோவில் இறைவரை அணுகி "எற்றுக்கு இங்கிருந்தீர்" என்னும் மகுடத்தோடு பதிகம் பாடினார். கொள்ளையிடப் பெற்ற பொருட்களை வேடுவர்கள் மீளக் கொண்டுவந்து குவித்தனர் என்னும் வரலாற்றைக் காணமுடிகின்றது. 6

இருட்டியர் பட்டிக் குருநாதர் பிள்ளைத் தமிழில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகிய மூவர் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. 8

## அடிக்குறிப்புகள்

(1) பாடல் எண் : 55

(2) மேற்படி : 56

(3) மேற்படி : 80

(4) வருகைப் பருவம், பா.எண்: 3

(5) பா. எண் ; 33

(6) மேற்படி : 33

(7) மேற்படி : 24

(8) மேற்படி : 17

## 11 சமய உண்மைகள்

ஐம்புலன்களை வென்ற ஆற்றல் வாய்ந்த அருளாளராகிய செம்புலச் செல்வர்கள் உலக மக்கள் எல்லோருக்கும் நன்மை பயக்கும் நல்வழியாகக் கண்டு அமைந்த ஒழுக்க நெறியே சமயம் எனப்படும்.1 கடவுள் தன்மையை யடைதற்கு திறம் காட்டலே சமயத்தின் பணியாகும்.2 மக்களின் வாழ்வுணர்ச்சியிலிருந்து தோன்றிய சமயம் மக்களின் வாழ்வியல் மேம்பாட்டிற்காகவே விளங்குகின்றது. பக்தி இயக்கக் காலத்திலிருந்து தமிழர்களின் அன்றாட வாழ்க்கையில் சமயம் உயிர்நாடியாய் இருந்தது; இன்னும் இருந்து வருகின்றது.3

இவ்வாறு மக்கள் வாழ்வில் நெருங்கிய தொடர்பு கொண்ட சமயம் அவர் தம் வாழ்விலிருந்து தோன்றுகின்ற இலக்கியங்களிலும் இடம் பெற்று வந்தன. அந்தந்தச் சமயத்தை அடிப்படையாகக் கொண்டும் இலக்கியங்கள் எழுந்துள்ளன. சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் விளங்கும் சமய உண்மைகள் இங்கே ஆராயப் பெறுகிறன.

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழின் முத்தப் பருவத்தில், சிவனும் பார்வதியும் மண்டபம் ஒன்றினை அடைந்து ஆண்டிருந்த வனப்பை நுகர்வழி தேவி அங்குப் பிரணவப் பொருளை நோக்க அதனில் ஆண் பெண் யானைகள் கலவி செய்ய அதனைக் கண்ட இறைவி யாதெனலும்" நின் சம்பந்தமாகி ஒரு மகன் தோன்றுவ" எனக் கூறிச் சிவன் களிற்றினை நோக்கி நிற்றலும் முடிவில் விநாயகர் அதினின்று எழுந்து வந்து வணங்கினர் என்னும் செய்தியினைக் காண முடிகின்றது.4

இப்பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப் பெறும் பாட்டுடைத் தலைவனாகிய விநாயகருக்கு

(1) சுமுகன்

(2) ஏகதந்தன்

(3) கபிலன்

(4) கஜகர்ணன்

(5) இலம்போதரன்
(6) விகடன்
(7) விக்கினராசன்
(8) அதிவிநாயகன்
(9) தூமகேது
(10) பாலசந்திரன்
(11) வக்கிர துண்டன்
(12) பூர்வ சகாயன்
(13) கணாதியக்கன்
(14) எரம்பன்
(15) சூர்ப்பகர்ணர்
(16) ஸ்கந்த பூர்வர்

எனப் பதினாறு திருநாமங்கள் உண்டு என அறிய முடிகின்றது 5

முத்தப் பருவத்தில் விநாயகரே பிரணவப் பொருள் என்னும் செய்தி இடம் பெற்றுள்ளது: எல்லாம் வல்ல பரம் பொருளிடமிருந்து முதலாவது உண்டாகிய படைப்பு 'ஓம்' என்னும் பிரணவ நாதமே ஆகும். அந்த 'ஓம்' என்னும் ஒலியின் வரிவடிவமே விநாயகரின் திருவுருவம். இறைவனிடமிருந்து முதற்கண் தோன்றியது ஓங்காரப் "பிரணவகணபதி" என்றும் 'ஓங்காரரூபன்' என்றும் அழைக்கப் பெறுகின்றார். ஒடிந்த கொம்பு 'ஓ' என்னும் எழுத்தின் 'சுழி' இருக்குமிடம் இவ்வெழுத்து இங்கிருந்து தொடங்கி வலக்கை வழியாகக் கிரீடத்தைச் சுற்றி இடக்கை பாசம் வரையில் வந்து, திரும்பி வளைந்து, நெற்றிப் பொட்டு வரையில் போய்த் துதிக்கை வழியாகக் கீழிடக்கை வந்து கால்வரை இறங்கும். இடக்கையும் மோதகமும் 'ம்' என்பதைக் குறிக்கின்றது. ஆகையால் விநாயகர் திருவுருவம் ஓங்கார சொரூபமாகும்.6

எந்தச் செயலினும் யாவர்தான் றிற்தர் விநாயகரை நினைத்தே செயல் தொடங்குவர். முற்காலத்தில் இந்திய

வியாபாரிகள் கடற் பயணம் செய்யும்போது புயல், கப்பல் கொள்ளையர் தொல்லைகள் முதலியன ஏற்படாமல் இருப்பதற் காகக் கப்பலில் பிள்ளையார் விக்கிரகத்தை எடுத்துச் செல்வது வழக்கம் என்னும் செய்திகள் சிறுபறைப்பருவத்தில் இடம் பெற்றுள்ளன, 7

குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழின் சப்பாணிப் பருவத்தில் இடத்துாய்மை, பொருள் துாய்மை, உயிர்த்துாய்மை, மந்திரத்துாய்மை. இலிங்கத்துாய்மை என்னும் ஐவகைச் சுத்தி களையும் முறையே செய்து தன்னைச் சிவமாகப் பாவித்து கைநிறைய மலர்கொண்டு துவாத சாந்தம்வரை உயர்த்திச் சென்று, அங்கே எங்கும் பரந்துள்ள சிவபரம்பொருளை மலர் களையே ஆசனமாகக் கொண்டு எழுந்தருளச் செய்து அங் கிருந்தும் முறையே கையை இறக்கிச் சிவலிங்கத் திருமேனியில் இருத்தித் தேனுமுத்திரை, பதுமமுத்திரை, சூலமுத்திரை, மகர முத்திரை, சிருக்முத்திரை, நமஸ்காரமுத்திரை, கோசிருங்க முத்திரை, மிருகமுத்திரை முதலிய முத்திரைகளைக் கொடுத்து சிவாகம விதிப்படி செய்யப்பெறுவதே சிவபூசை என்பதை அம்மையின் கை சிவபூசை செய்த கை எனச் சிறப்பிக்கும் போது கூறப் பெற்றுள்ளது.

உலகமே ஊசலாக அவ்வூசலில் உயிர்களை வைத்து ஆட்டி, உயிர்கள் வருந்தாதபடி அவற்றை எடுத்து ஆனந்த அமுதத்தை ஊட்டி வளர்க்கும் மெய்த்தாய் என இப்பிள்ளைத் தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய அமுதாம்பிகை சிறப்பிக்கப் பெறுகின்றாள். உலகத்தோற்றத்தையும் உயிர்கள் உலகில் நுகரும் நுகர்ச்சி வகைகளையும் அவற்றை அமுதாம்பிகை ஆட்கொண்டு பரமுத்தி அளிப்பதையும் இப்பிள்ளைத்தமிழின் ஊசற்பருவப் பாடல் விளக்குகின்றது:

உலகிற்கு மாயைதான் முதற் காரணம. ஆதலின் சுத்த மும் அசுத்தமுமாகிய மாயைகளையோ இருமருங்கும் துாணாக நிறுத்தி, ஆணவ மலமாகிய ஆதாரத்திலே உயிர்கள் உறை

வதால் அதனை மேல்விட்டமாகவும், ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் இவற்றிற்கெல்லாம் மூலமான அநாதியேயுள்ள மூலகன்மம் ஆகிய இந்நான்கையும் நான்கு வடங்களாகவும், மாயையின் காரியமாகிய மாயேயத்தைப் பலகையாகவும், புவன கோடிகளை ஆடும் வெளியாகவும் கொண்டு உயிர்களாகிய குழந்தைகளைப் பிறப்பு இறப்பு என்னும் பிணிகள் மொய்த்துள்ள ஊசலில் வைத்து ஆட்டி, அவ்வுயிர்கள் வாடி அழியாத வண்ணம் பரிபாக நிலைக்குத் தகச் சிறிது ஞானத்தையும் அளித்து, முடிந்தி விட்டையும் உதவி என்றும் மூவாத ஆனந்தமாகிய அமுதத்தையும் உண்ணச் செய்து வளர்ப்பவள் என்று உருவகிக்கப் பெற்றுள்ள உயர்வை அறிய முடிகின்றது. 8

மேலும் ஐவகை மலங்களின் இயல்பும் 9 அவற்றைக் களையும் உபாயமும் 10 பரிபாக நிலைக்கு ஏற்ப அத்திருவருட் பதியில் மந்தம், மந்ததரம், தீவிரம், தீவரதரம் முதலிய வேறுபாடுகள் உண்மையும், பூதபரிணாம தேகத்தோடு வானுலகு எய்த முடியாதாயினும் பாட்டுடைத் தலைவியாகிய அம்மையின் அருளாற்றலும், சிவகருணையும் துணை செய்யுமாயின் அதுவும் கூடும் என்பதும் 11 சிவபெருமானை உண்மை அன்புடன் வணங்குபவர்கள் எய்தும் மேன்மையும் இந்நூலில் கூறப்பெற்றுள்ளன.

முத்தியில் இறை, உயிர், மலம் ஆகிய முப்பொருள்களும் உள்ளன எனக் கூறுவது சைவ சித்தாந்தம். இறைவன் இன்பம் கொடுத்துக் கொண்டே இருப்பான். உயிர்கள் பேரின்பம் அனுபவித்துக் கொண்டே இருக்கும். அதுவது வாய் நின்று அழுத்தி அனுபவிக்கும் ஆன்மாவிற்கு ஏனையவற்றை அறியின் அனுபவப் பயன் குறையுமாதலின் ஏனையவற்றை மலம் செய்து கொண்டிருக்கும். இம்மூன்று பொருட்களையும் முறையே நாவல் நிழல் ஈசனும், நாவற் பழத்தை நிவேதித்து நுகர்ந்து, பின் மர நிழலில் அமர்ந்து இருக்கும் ஈசனைக் காணும் இன்பத்தையே நுகர்கின்ற மெய்யன்பர்

களும், தான் மெய்யன் பினருக்கு விபரீத உணர்வையும் விளைக்காது தனது பழைய வடிவும் சிதையாது கிடக்கும் நாலவ் வித்தும் காட்டும் எனச் சுந்தரமூர்த்தி நாயனார் பிள்ளைத்தமிழ் சித்தாந்த நுண்பொருளை உவமை மூலம் புலப்படுத்துகின்றது;13 மேலும், மெய்த்தவமாகிய சரியை, குருதரிசனம், இவற்றின் பயன்களாகிய பாசநீக்கம், சிவப்பேறு ஆகியவற்றையும் கூறுகின்றது 14

திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனாகிய விநாயகர் சிவனைப் போலப் பிறைசூடிய சடைமுடியார்; பாம்பாகிய அணிகலம் பூண்டவர் 15 ஐந்து கைகளும் குறுகிய கால்களும் கொண்டவர்; 16 இவர் தம்மைப் பிணிப்பாரும் செலுத்துவாரும் இலரென்பதற்கு அறிகுறியாகவும், உலகச் சூழலில் சிக்கித்தம்மை மதியாது திரியும் உயிரினங்களாகிய யானைகளைப் பிணித்தற்கும் குறும்பு தணித்தற்கும் அறிகுறி யாகவும் கயிறும் அங்குசமும் கைகளில் தாங்கியவர். உண்மை, அறிவு, மகிழ்ச்சி, இன்பம் என்னும் இவையே உருவானவர் இறையும் உயிரும் உலகுமாகிய இம்முப் பொருளின் இயல்பு களை யாவருக்கும் மறைப்பின்றி இனிது எடுத்துரைப்பர் 17 என்னும் உண்மைகள் இடம் பெற்றுள்ளன.

வீட்டின்பம் பற்றிப் பலரும் பலவாறு கருதும் கருத்துகள் சேக்கிழார் பிள்ளைத்தமிழில் இடம் பெற்றுள்ளன: சிலர் மாதர் சேர்க்கையே இன்பம் எனவும் சிலர் ஐந்து கந்தக் கேடே இன்பம் எனவும் சிலர் முக்குண முறிவே இன்பம் எனவும் சிலர் இருவினைக் கேடே இன்பம் எனவும் சிலர் மலங் களின் அழிவே இன்பம் எனவும், சிலர் தூய மாயை உடல் அழியாமையே இன்பம் எனவும் சிலர் மெய்யுணர்வே இன்பம் எனவும் சிலர் உயிர் கெடுதலே இன்பம் எனவும் சிலர் பிரகிருதி கெடுதலே இன்பம் எனவும் சிலர் எண்வகைப்பேறு பெறலே இன்பம் எனவும் கருதுவர். 18

அன்றியும் இப்பிள்ளைத்தமிழில் ஆகமம் என்னும்

சொல்லின் பொருள்; 19 இறைவன் ஆடும் ஐந்து சபைகள்; 20 இறைவனது முக்கண்கள் சந்திர சூரியர் அக்கினிக்கு ஒளி தருவன; 21 இறைவன் எங்கும் இருக்கின்றான்; 22 இறைவன் திருமேனி சோதி வடிவானது; 23 இறைவன் திருவடி மாண்புடையது; இறைவன் புரியும் நடனங்களால் நிகழும் நிகழ்ச்சிகள்; 25 இறைவி தழுவ இறைவன் குழைந்தது; 26 ஐந்தெழுத்தின் சிறப்பு; ஐந்தொழில்கள்; 28 சிவனுடைய திருவடிகளினின்று உலகம் தோன்றல் 29 ஆகிய உண்மைகளையும் அறிய இடமுண்டு.

திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் இறைவன், அண்டங்கள் எல்லாம் அணுவாக அணுக்கள் எல்லாம் அண்டங்களாகப் பெரியநாகவும் சிறியதாகவும் விளங்குபவன் எனவும் உயிர்களுக்கு உடனாகவும் வேறாகவும் ஒன்றாகவும் நின்று அருள் சுரப்பவன் எனவும் இப்படியன், இவ் வண்ணத்தன் என எழுதிக்காட்ட வொணாத தன்மை வாய்ந்தவன் எனவும் விளங்குகின்றான் என்னும் செய்திகள் இடம் பெற்றுள்ளன. 30

பாச அறிவு, பசு அறிவுகளால் அறிய முடியாத பெரு நிலையில் இருப்பவன் சிவபெருமான் காட்டும் திருவருளே கண்ணாகக் கொண்டு அவனைக் காண வேண்டும். உயிரறிவு தன் முனைப்பில் அழுத்தி நிற்கும் நிலையில், எவ்வளவு முயன்றாலும் அவனைக் காண முடியாது. இவ்வாறு காண முடியாத பரம்பொருளைப் பதி அறிவாலேயே காணுதல் வேண்டும் என்னும் சைவசித்தாந்த உண்மையைத் திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழில் காண முடிகிறது.31

திருத்தணிகைச் சந்நிதி முறையிலடங்கிய திருத்தணிகைப் பிள்ளைத்தமிழில் சந்திரன் புற விருளை நீக்குவது போல அறுமுகன் நம் நெஞ்ச இருளை நீக்குவான்; பொங்கும் சிற்றின்பங்களைக் கண்டு மகிழ்ந்து மய்யல் படாதவர்களுக்குப் பூரண ஆனந்தத்தைத் தருவான் அறுவகனை வணங்கினால் வீடு பெறலாம், பிறப்பிறப்பு என்னும் கடலைத் தாண்டலாம் என்னும் உண்மைகள் இடம் பெற்றுள்ளன. 32

குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனாகிய தணிகைப் பெருமான் மலைபோன்ற பிறப்பு இறப்பு என்னும் கருவைப் போக்கவல்லவன்; ஜீவர்கள் மயக்கத்தை அகற்றிச் சூழ்மனம் நீங்கி, பழமலம் அறுத்து அசிதங்கள் அகன்று, தவர் மேற்கொண்டு மல பரிபாகம் பெற்றபின் சித்தர்களால் கண்படாமல் வாழ்ந்து சருக்கங்களைச் கழற்றிப் பின்னேக விமோசனத்தில் பரமுத்தர்களாவதற்கு அறுமுகனின் ஐவேலே துணையாகும் என்றும் உண்மையினையும் அறியமுடிகின்றது 33

திருநெல்வேலிக் காந்திமதியம்மை பிள்ளைத் தமிழில்,

“ பரிசுத்த மேனியுடன் ஆலயத்(து)

எய்தினெய்ப் பத்திசெய் தூநரும்

பஞ்ச சுத்தியும் மருவி உட்புறமும்

ஒருமொழிப் படமுயன் றுபசரித்து

விரிசொய்தன் மலர்கொண் டருசித்து

இறைஞ்சுரும் மிக்க மூலாதாரம் ஆர்

வெங்கனல் எழும்பிட இரேசகம்

பூரகம் விளங்கு கும்பகமுடித்துத்

தரிசித்த மவரும் வினை ஒப்புமல

பரிபாக தத்துவம் இயைந்துளாரும்

சாலோகம் ஆகிய பதங்கள் முறை

யிற்பெறத் தனிஅருட் பெருகும் ஆடல்

புரிசச்சி தானந்த சகளநிட்

களவல்லி! பொன்ஊசல் ஆடியருளே” 34

எனச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நால்வகை வழிபாடுகளும், நால்வகை வழிபாட்டினர் பெறும் பதவிகளாகிய சாலோகம், சாமீபம், சாருபம், சாயுச்சியங்களும், குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய காந்திமதியம்மை சச்சிதானந்த சகள நிட்கள வல்லியாய் விளங்குகின்றாள் எனவும் கூறப்பெற்றுள்ளன.

குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகியத் காந்திமதியம்மை அம்மானை ஆடுகின்ற காட்சி ஒன்றில் சமய உண்மை பொதிந்துள்ளது: முத்து அம்மானை, பொன் அம்மானை, மாணிக்க அம்மானை, நீல அம்மானை, மரகத அம்மானை ஆகிய ஐந்துவகை அம்மானைகளை வைத்து ஆடும்பொழுது அம்மானைக் காய்களில் அம்மையின் அழகு வடிவம் தோன்கிறுன்றது. அவை அவள் கையிலிருந்து எழுந்து மேற்சென்று மீளவந்து சேர்கின்றன. கலைமகள். திருமகள், உருத்திரி, மயேச்சுரி, மனோன்மணி யாகிய ஐந்து சத்திகளும் முறையே வெண்ணிறம், பொன்நிறம், செந்நிறம், நீலநிறம், பச்சைநிறம் உடையோர். "ஐம்பெருஞ் சத்திகளும் அருட் பராசத்தியாகிய அம்மையிடம் உதித்து மீள அவளிடமே ஒடுங்கும் நிலையினர்" என்னும் மெய்யறிவை உலகுக்கு உணர்த்துவதற்கு காந்திமதியம்மை இவ்வண்ணம் ஐவண்ண அம்மனை கொண்டு ஆடுகின்றாள் என்பதை இப் பிள்ளைத்தமிழ்ப் பாடல் உணர்த்துகின்றது. அடிமுதல் முடிவரை அழகொழுக அணிபணிகளணிந்த திருக்கோலத்திலே பொன் ஊசலில் அமர்ந்து பாட்டுடைத் தலைவி அளித் தருளும் காட்சியினையும் காண முடிகின்றது.35 மலபரி பாகருக்கு இறைவன் விடைமேல் எழுந்தருளித் தரும் காட் சியும் மெய்ஞ்ஞான நாடகமாகிய ஐந்தொழில் நடனக் காட் சியும் இதில் இடம் பெற்றுள்ளது.36

திருமலை முருகன் பிள்ளைத்தமிழில் இறைவனை,

"நிகர் ஒப்புமை இலாத தற்சுந்தரன்" 37

என்றும்,

"தாயொடு தமரும் இலாத அதீதன்"38 என்றும் போற்றப் பெறும் உண்மையினைக் காண முடிகின்றது. அன்றியும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்று கட்டுக் களும் உயிரைப் பிணிப்பனவாகும் கட்டுண்ட உயிர்மீது, கருணை கொண்ட இறைவன், உயிர் தன் வினைப் பகையைத் துய்த்துக் கழிக்கும் பொருட்டாய் உலகு முதலியவற்றைப்

படைத்தளிக்கின்றான். வினைப் பகையைத் தீர்க்கும் உயிர் விழைவு தரும் 'உலகெலாம் அலகைத் தேராம் என்று அறிந்து அக'ன்று வீண்ணோர்க்கும் வேதியனாம் இறைவன் மீது காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி அவன் திருப்பெயரை ஓதுமாயின் அதனைத் தன் வண்ணமாக்கி இன்புறுத்துகிறான்39 என்னும் உண்மையினையும் அறிய முடிகின்றது.

திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழின் காப்புப் பருவத்தில்,

"ஆட்டும் சமயம் ஆறினுக்கும்
ஆதா ரங்கள் ஆறினுக்கும்
அத்து வாவோ ராறினுக்கும்
அமையும் தானே முதலென்று
திட்டும் படியா வருந்தெளியத்
தெளித்தாங் காறு முகந்திகழச்
செல்வ மலியும் இடைக்கழிவாழ்
சேயைப் பரிந்து காக்கவே"40

எனவரும் அடிகளும், வாரானைப் பருவத்தில்,

பணியா வழுத்தம் பேரன்பர்
பவசா கரத்திற் கொருவடவை
பற்றற் றவரே பற்றகலப்
பற்றும் பிரம முற்றுதுணம்
குணியா வையுமாய் அல்லவுமாங்
கோதில் முதலென் றெடுத்துமறை
குலவ வுனையே நாணாளும்
கூறு மதுவும் குறியாய் போல்"

எனவரும் அடிகளும் அம்புலிப் பருவத்தில்,

"பாராய் தரப்பொலியும் வேதமாக மங்கள்நனி
பகர்குறி குணங்கடந்து
பரநாத பர விந்து வும்கடந் தோங்கொளி
பரப்பியொளிர் பரமயோகி" 42

என வரும் அடிகளும் சமய உண்மைமளை உணர்த்தக் காணலாம்.

திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழில், இறைவன், தனு கரண புவன போகங்களை ஈந்து, தானும் குருவாகி வந்து அருள் புரிந்து, உயிரின் மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பவன்;43 உலக முதலியவற்றைப் படைத்தல், காத்தல் முதலிய செய்கைகளால் இறைவனை இளைப்பு முதலிய எக் குற்றமும் சார்வதில்லை;44 இறைவி அருப்புறு மணிவிலை உறுத்திட அமலனை அணைத்தவள்; உலகமெலாம் அளித்தவள்; உயிர்களை வளர்த்தவள்; நிறையழியாள்45 என்னும் உண்மைகள் இடம் பெற்றுள்ளன.

தில்லை சிவகாமியம்மை பிள்ளைத்தமிழில் இறைவி பிரமனிடத்தில் இராசச குணத்தையும் விஷ்ணுவினிடத்தில் சாத்வீக குணத்தையும் உருத்திரனிடத்தில் தாமச குணத்தையும் தந்து படைக்க, காக்க, அழிக்க ஏவுகின்றாள்;46 அம்மையின் முத்தம் மும்மலங்களையும் போக்கவல்லது; இம்மலம் அறிவற்றதும் சடத்தன்மை வாய்ந்ததும் நெல்லிற்கு உமியும் முளையும் செம்பிற்குக் களிம்பும் போன்று ஆன்மாவை அனாதியே பற்றி நிற்பது 47 என்னும் சமய உண்மைகளைக் காணமுடிகின்றது

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவி சிற்றில் புனைகின்றாள். சிறுவன் சிற்றிலைச் சிதைத்து விடுகின்றான் இவ்வாறு ஓயாமல் புனையும் செயலும் சிதைக்கும் செயலும் நடைபெறுவது அம்பிகை உலகத்தை அடிக்கடி ஆக்குதலையும் அவற்றைச் சிவபெருமான் அழித்தலையும் ஒத்திருக்கின்றது என்னும் உண்மை இடம் பெற்றுள்ளது. 48

அம்மை அழகோடும் ஆர்வத்தோடும் அம்மானை ஆடுகின்றாள். அம்மையின் கண்கள் கருநிறம் கொண்டவை கைகளோ செந்நிறம் படைத்தவை பற்களோ வெண்ணிறம் கொண்டவை நன்முத்தால் அமைந்த அம்மனைகளை அம்மை எடுத்தெறிந்தும் பிடித்தேந்தியும் விளையாடுகின்றாள். செந் தாமரையினை ஒத்த செம்மையான கைகளால் விளையாடுவதால் அம்மனைகள் செந்நிறமும் கடைக்கண் பார்வை படிதலால், கருநிறமும், வெண்மையான பற்களின் ஒளி பாய்வதால், வெண்ணிறமும் பெற்றுப் பொலிகின்றன. இங்ஙனம் அம்மனைக் காய்களில் அம்மையின் எழில் வடிவம் மூன்று வண்ணங்களுடன் மாறிமாறிப் பொலிகின்றது. சத்துவமாகிய வெளுப்பும், இராசதமாகிய சிவப்பும் தாமசமாகிய கறுப்புமாய் அம்மையின் அழகு வெளிப்படுதலால் அவளும் முக்குண வயப்பட்டாள். 49

உயிரனைத்தும் இறைவியின் வடிவம் என்பது மறை மொழி விளம்பும் நிறைமொழியாகும். அம்மை வையை நதியில் நீராடுகையில் அவளைச் சூழ்ந்திருந்த பொருளெல்லாம் அகிள் ஒளியே பெற்றனவாம். குறிப்பாக அவளுடைய திருமேனியின் மரகதஒளி பட்டு வையை ஆற்றிலுள்ள பவளக்கொடி பச்சைக் கொடி ஆயிற்று; முத்துகள் மரகதமாயின; அன்னப் பறவைகள் மயிலின மரயின என்னும் உண்மையும் இடம் பெற்றுள்ளது.50

உலகிலுள்ள சமயங்களில் தொன்மையானதாகவும் தலைமையானதாகவும் விளங்குவது சைவ சமயமே என்னும் கருத்து பரவலாக நிலவி வருகின்றது. அதனாலேயே இச்சம யத்தை 'இராசாங்க சமயம்' என்பர் என்றாலும் உலகில் வேறு பல சமயங்களும் உள்ளன அச்சமயங்கள் இயற்றும் வழிபா டெல்லாம் இறுதியில் சிவன் திருவடி நீழலையே சாரும் என்பதை முகதுக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்,

"வள்ளைக் குழையில் தாவடிபோம்
மடமா னோக்கிற் கடைசியர்கண்
மாலைக் குழல்வண் டோலமிட
மடுவில் வெடிபோம் வரிவாளை

பள்ளத் திருள்தூங் கமுவநீர்ப்
பரப்பென் றகல்வான் மிசைத்தாவப்
பாகீ ரதித்தீம் புனல்கிடைத்த
பரிசு வீட்டின் பயன்துய்க்கும்
உள்ளக் கருத்தாற் பிறிதொன்றை
உண்மைப் பொருளென் றுள்ளவுந்தம்
உணர்வில் தெய்வங் கடைக்கூட்ட
உறுதி கிடைத்த படிபோலும்
அள்ளற் பழனப் புள்ளூருக்
கரசே வருக வருகவே" 51

என்னும் பாடலில் புலப்படுத்துகின்றது.

இறைவனுடைய திருமேனி உருவாகவும் அருவாகவும் அருஉருவாகவும் விளங்கும். இம்முத்திருமேனிகளையும் இறைவன் கொள்வது உயிர்களின் கருமேனியைக் கழிப்பதற்கே என்னும் உண்மையினை, 52

"அருவென்ன உருவென்ன அன்றென்ன நின்றவானொடு" என்னும் அடியால் அறிய முடிகின்றது. முருகப் பெருமான் பரசிவத்தினின்றும் வேறல்லர் என்பதை,

"மறைவிடிவில் நின்று நிறை செல்வன்" 53
"தனிமுத்திக் கொரு வித்தே" 54
"அறிவு ளறிவை யறியு மவரு மறிய வரிய பிரமமே"55

எனப் பரமசிவத்துக்குரிய கொள்கைகள் அனைத்தையும் முருகப் பெருமானுக்குக் கூறியிருப்பதினின்றும் அறிய முடிகின்றது

இத்தகைய சமய உண்மைகளை மேலும், அருணகிரி நாதர் பிள்ளைத்தமிழ் 56 கோயிலூர் திருநெல்மையம்மை பிள்ளைத்தமிழ், 57 திருப்போரூர் முருகர் பிள்ளைத்தமிழ் 58 பழமுதிர் சோலைமலை பிள்ளைத்தமிழ் 59 மயூரகிரிச் சண்முக நாதர் பிள்ளைத்தமிழ், 60 மருதாசலக் கடவுள் பிள்ளைத்தமிழ் 61 முதலிய நூல்களில் காணலாம்

## அடிக்குறிப்புகள்

1. க. வெள்ளை வாரணன், சிலப்பதிகாரத்தில் சைவம் அண்ணாமலைப் பல்கலைக் கழகக் கருத்தரங்கக் கட்டுரை. ப.1.

2. அ.மு. பரமசிவானந்தம், சமயமும் சமூகமும், ப, 2-3

3. எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை, தமிழ் இந்தியா ப, 51. (ஆங்)

4. "குலவா வலிவண்ட லம்புகொன்றைக்
கோதைப் பெருமான் கோதையொடுங்
குரைவெள் ளருவிக் கயிலையின் கீழ்
குளிர்பூம் புனத்தோர் மண்டபத்தி
னிலகோங் காரத் தினிற்பிடியுங்
களிறு மெனவந் தணைந்தளிப்ப
விளஞா யிறுபோ லுமையிடையே
லேற்றங் குகந்தே மாற்றரிய
வுலவாவேதா கமக்கடலி
லூறிக் கிளர்ந்த தேறலென
வொழுகு மமுதக் கனிவாயென்
றொவ்வா தலர்ந்த செவ்வாம்பன்
மலரா லரும்பாத் தைப்பதிவாழ்
மகவே முத்தந் தருகவே"

பா. எண்: 1

(5) பா. எண் : 58

(6) மேற்படி : 69

(7) மேற்படி : 10

(8) குளத்தூர் அ. பி. பா. எண் : 37

(9) சுத்தமும் அசுத்தமும் எனப்படுங் கொடுதாயை
தூணாக இருளாணவம்
தொடுத்தநெடு விட்டமாக கருமப் பெரும்பகுதி
தூக்கிய வடங்களாக

வைத்தமா யேயமே பலகையா மும விலா
வான்புவன கோடிமுற்றும்
மகிழ்ந்தாடு வெளியாக ஆருயிர்க் குழவிகளை
மரணம் பிறப்பென்னுநோய்
மொய்த்தமணி ஊசல்வைத் தாட்டிக் கடைத்தலை
முடங்கா தெடுத்தணைத்து
முதுக்குறை வளித்துமேற் பரமுத்தி வீடுய்த்து
மூவாத ஆனந்தமாம்
புத்தமிழ் தருத்திமெய்த் தாயாய் வளர்ப்பவள்
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகர்
பொன்னூச லாடியருளே"

ஊசற்பருவம், பா. எண் : 8

(10) குளத்தூர் அ. பி. பா. எண் : 58
(11) மேற்படி : 88
(12) மேற்படி : 87
(13) மேற்படி : 70
(14) "முத்தியின் முப்பொருளும் முளவென்று சொன்
மூதுரைநன் றோர்வான்
முதுதிரு நாவலி னிழலம ரீசனு
மூன்றொமு தக்கனிகள்
நத்திநி வேதித் தன்பினு கர்ந்தறு
நறுநிழல் சார்ந்தின்பே
நண்ணுமெய் யன்பின ருந்தொலி யாதி
நவைப்படு கோதின்றித்
துய்த்திடு மாவிளை வித்துத வித்தன
தொல்லுரு வமுமழியாத்
துணையினி னிலவுறு வித்துமி லக்கிடு

துாவளா நாவனகர்ச்

சத்திய வாசக நித்திய தேசிக

தாலோ தாலேலோ

தத்துவ முத்திசெய் சுத்தசு வித்தக

தாலோ தாலேலோ"

தாலப் பருவம்: 9

விளக்கம் : வித்துவான் வே. மாணிக்கவாசகம் பிள்ளை, சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள், ப. 254

(15) சிறுபறை : 2

(16) தாலப்பருவம் ; 4

(17) சிறுதேர்ப் பருவம் : 5

(18) சப்பாணிப் பருவம் : 1, 2, 3.

(19) "நீடும்இன் பரிவையர் புணர்ப்பென்ம ரும்ஐந்து

நிகழ்கந்த மும்கெடுதலே

நிலவும்இன் பென்மரும் குணம்மூன்றும் ஒழிதலே

நிரம்பல் உறும் இன்பென்மரும்

நாடும்இன் பிருவினைக் கேடென்ம ரும்மலம்

நசித்தலே இன்பென் மரும்

நவில்லிக்கி ரகநித்தம் இன்பென்ம ரும்தோன்றும்

ஞானமே இன்பென்மரும்

பாடும்இன் புயிர்கெடுதல் எண்மரும் பகுதிமேல்

கெடுதலே இன்பென்மரும்

படுசித்தி இன்பென் மரும் பிறரும் வாதம்

படர்ந்துவரு திறன் அறவளம்

கூடுசெந் தமிழ் அருமை அறிபெருஞ்சேவையாம்

குலசிகா மணிவருகவே

கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு

குன்றைப் பிரான்வருகவே"

வாரானைப் பருவம் :3

# 12. வரலாற்றுக் குறிப்புகள்

ஒப்பில்லா இலக்கியங்களைப் படைத்த தமிழ்ச் சான்றோர்களின் போக்கு தனித்தன்மை வாய்ந்தது. மேலை நாட்டினரைப் போல் வரலாற்றையும் இலக்கியத்தையும் தனித் தனியே பிரித்தமைக்காமல் இரண்டையும் ஒன்றாகவே சேர்த்துணர்த்தும் பாங்கு அவர்களிடம் இருந்து வருகின்றது. எவ்வகை இலக்கியமாக இருந்தாலும் சரி அவற்றில் வரலாற்றுச் செய்திகள் இடம்பெற்று இலக்கியத்தின் மதிப்பை உயர்த்துகின்றன. சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் விளங்கும் வரலாற்று விளக்கங்கள் இங்கே ஆராயப் பெறுகின்றன.

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழில் திருநள்ளாறு என்னும் ஊரிலுள்ள கணபதியை வழிபட்டு நளன் கலி நீங்கினான் என்றும் அக்கணபதி நளகூபக் கணபதி என்று அழைக்கப் பெறுகின்றார் என்றும் காணமுடிகின்றது.

மேலும் திருவோதாதன் என்கின்ற திவோதாஸன் காசியில் தேவர்கள் இராதபடி பிரமனிடம் வரம் பெற்று அங்ஙனமே ஆட்சி செய்ததால் மந்தரமலைக்கு வரம் கொடுக்கச் சென்ற சிவன் காசி திரும்பும் வண்ணம் முயற்சி செய்தும் முடியவில்லை. இறுதியில் கணபதியை அனுப்ப அவர் சோதிடனாய்ச் சென்று முறை திரும்பச் செய்தார் என்னும் வரலாற்றுச் செய்தி இடம் பெற்றுள்ளது.2

இப்பிள்ளைத்தமிழாசிரியர் வறுமைப்பிணியில் வாடிப் புதுச்செல்வம் பெற்றாரிடத்தெல்லாம் சென்று இரந்தார் என்றும், இவரிடம் விநாயகர் தனது திருப்பாதங்களை மறவாதிருக்குமாறு கூறி ஆட்கொண்டார் என்றும்3 இவ்வாசிரியர்க்கு இருபிள்ளைகள் பிறந்தனர் என்றும் வேதவிநாயகரே குருவாக வந்து தீட்சை புரிந்தார் என்றும் அப்பிள்ளைகட்குச் சுப்பிரமணியன், வேதவிநாயகன் என்னும் பெயர்களை வைத்தனர் என்றும் நெஞ்சில் நினைத்தவைகளையெல்லாம் விநாயகர் அருளினார் என்றும் அறிய முடிகின்றது.4

இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய

குருநாதரின் தாய் ஆவுடைய நங்கை; தந்தை வீரபத்திரப் பிள்ளை; இதனை,

"ஆவுடைய நங்கைஇக் கருவினைத் தாங்கிடமுன்
ஆற்றுபுண் ணியம்என் கொலோ
அருள்வீர் பத்திரப் பிள்ளைஇப் பேறுபெற
ஆற்றுபுண் ணியம்என் கொலோ"5

எனவரும் காப்புப்பருவ அடிகளில் அறியமுடிகின்றது.

மேலும் இப்பிள்ளைத்தமிழில், அதிகாலையில் துயிலெழுதல், தண்ணீரில் மூழ்கல், இறைவனை வணங்கல், எந்நோய் வரினும் மருந்து கொள்ளாமை, குருநாதர்பால் பேரன்புடைமை என மக்கள் இவ்வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்குரிய இயற்கை நெறி முறைகளைக் காண முடிகின்றது 6

காவை முருகன் பிள்ளைத்தமிழில்,

முதியசழக்குஅத் தனையும் மண்
மூடி மறைக்க மொய்த்தபழ
முறையின் குறைகள் முடிந்தொழிய
மூப்பற் றிருக்கும் மோகத்துப்
புதிய முறுவல் பூத்தலரும்
பொற்பில் தமிழைப் புதுக்கி அருள்
புரியும் வடலூர்ப் புண்ணியனார்"7

என இராமலிங்க சுவாமிகளின் சீர்திருத்தக் கொள்கைகள் இடம் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது.

மேலும் இப்பிள்ளைத்தமிழில் இன்றைய நாட்டு மக்களின் அவலநிலை,

"உள்ளத் தெளிவற்று ஓயாமல்
உறுமிச் சமரிட்டு ஓஓஎன்று
ஊளை யிடலே உயிர்வாழ்வின்
உண்மைக் குறிக்கோள் என்னும்இளம்

பிள்ளை அவனைப் பெற்றிடவே
பிறந்த பேதைப்பெண்; வயிற்றுப்
பிழைப்புக்கு எதையும் பிரியமொடு
பிழையென்று உணர்ந்தும் மறுக்காமல்
கள்ள மனத்தி னொடுசெய்து
காலம் கழிக்கும் ஆண் இவர்கள்
கப்பிக் கிடக்கும் காசினியைக்
காணில் கடிந்துஅக் கணம் எடுப்பாய்
துள்ளும் வேல்என்று அஞ்சி உனைத்
துயிற்றுவிக்க விழைகின்றோம்
துணைவா தாலோ "8

என எடுத்துரைக்கப் பெற்றுள்ளது. அன்றியும் இந்த அநியாய முறைகளுக்கு,

"அழியட்டும் மானுடர்க்கு ஆகாத தாய் எழுந்து
அக்கிரம வழியில் நின்றே
ஆளும் அரசாட்சியும் அநியாய் முறைகளும்
அடிவேர் அறுந்து கடிதில் 9"

என நீதியும் வழங்கப்பெற்றுள்ளது.

"ஒன்றுக்கும் உதவாமலே
உயரத்து இருக்கின்ற கற்பாறை தான்என்று
உணர்த்தி விஞ்ஞானம் எங்கள்
கண்ணைத் திறட்திட்ட பின்னரும் ஏய்ப்பதேன் 10

என மதியை விளையாட அழைக்கும் அம்புலிப் பருவத்தில் அதன் சிறுமையை உணர்த்துவதோடு மனிதன் நிலவுக்குச் சென்று வந்த வரலாற்றையும் புலப்படுத்துகின்றது.

சிவமலைப் பிள்ளைத்தமிழில் சிவவாக்கிய சித்தர் வாழ்ந்த குகை, சித்தர்களால் புகழப்பெறும் செங்கொடிவேல, தெய்வ சஞ்சீவி மூலிகை, தீராத கன்ம நோய்களைத் தீர்த்துவைக்கும்

அனுமார்கோவில், அகத்தியர் நெய் வைப்பு முதலியன இடம் பெற்றுள்ளன. அன்றியும் சிவமலை பட்டாலி என்னும் பழமை சான்ற ஊரினைச் சார்ந்தது என்பதை இப்பிள்ளைத் தமிழ்,

"கார்தங்கு மாடமலி காங்கயநன் னாடதிற்
கமலைவளர் பட்டாலியிற்
கலைநிலவு குலவுசிவ மலையிலுயர் நிலைமருவு
கந்தனைக் காக்க வென்றே"

எனவரும் அடிகளில் உணர்த்துகின்றது. மேலும் சிவமலையில் அகத்தியர் தீர்த்தம் முதலாக ஏழு தீர்த்தங்கள் உண்டு. அத் தலத்தில் வழிபாடியற்றிப் பேறு பெற்றோர் அகத்தியர், இந்திரன், அனுமார், பாண்டவர் முதலானோர் ஆவர் என்னும் செய்தியினையும் அறிய முடிகின்றது.

சேயூர் முருகன் பிள்ளைத்தமிழில், தொண்டைமான் பரம்பரையைச் சார்ந்தவரும், சிறந்த சைவராக விளங்கிய வருமாகிய ஒற்றி கொண்டான் என்பவருக்கு மைந்தராகிய கழுக்குன்றன் என்பவர் குழந்தையாகப் பாவித்துப் பாடப் பெறும் பாட்டுடைத் தலைவனாகிய சேயூர் முருகன் திருக் கோவிலைக் குடமுழுக்கு விழா செய்து புதுப்பித்து இத்திருக் கோவிலின் முதல் திருவிழாவை சகம் 1443 - இல்11 நிகழ்த் தினான்12 என்னும் வரலாற்றுச் செய்தியினைக் காணமுடி கின்றது.

திருச்செந்தூர் பிள்ளைத்தமிழில் இறையனார் களவியல் உரை கண்டது;13 மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியவரின் வேண்டுகோளால் திருஞான சம்பந்தர் மதுரைக்கு வந்து சைவ சமயத்தை நிலைநாட்டியது14 என்னும் செய்திகள் இடம் பெற்றுள்ளன.

இப்பிள்ளைத்தமிழை இயற்றியவர் பகழிக் கூத்தர். இவர் ஒருமுறை கொடிய வயிற்றுவலியால் வாடி வருந்திய

போது, திருச்செந்தூர்ப் பெருமான் அருள் வேண்டிப் பிள்ளைத் தமிழ் பாடினர்; இறைவன் இவருக்குத் திருவருள் புரிந்தார் என்னும் செய்திகளை இப்பிள்ளைத்தமிழில்,

"அடியவர் கொடுவினை துகள்பட நடமிடும்
அழகிய சரணம் அளித்த வரத்தினான்"15

"ஆவித் துணையே வழியடிமை அடியேம்"16

"காப்பான் அழிக்கத் தொடங்கில் எங்கள்
கவலை எவரோ டினியுரைப்போம்"17

எனவரும் அடிகளால் அறிய முடிகின்றது.

தில்லை சிவகாமியம்மை பிள்ளைத்தமிழில் முற்காலத்தில் சூரியவம்சத்து அரசன் ஒருவனுக்குச் சிங்க நிறமுள்ள குமரன் பிறக்க அவனுக்குச் சிங்கவருமன் என்னும் பெயர் இட்டனர். இவன் வெண்குட்டம் உடையவன். சிறிது நாளில் அரசு துறந்து வெகுதூரம் வந்து கடைசியில் சிதம்பரத்தை அடைந்தான். அங்குப் பதஞ்சலி வியாக்கிரபாதரைக் கண்டு அவர்கள் அனுக்கிரகத்தால் சிவகங்கையில் மூழ்கி வெண் குட்டம் நீங்கி உடம்பு பொன்னிறம் அடைந்து இரணிய வன்மன் எனப்பெயர் அடைந்து அரசாண்டு தில்லையில் சிவத்திருப்பணி செய்து முத்தி அடைந்தனன். இவனே மூன்றாம் சிம்மவர்மனான ஐயடிகள் காடவர்கோன் என்னும் செய்தியினை உணர்முடிகின்றது.18

மறைமலையடிகள் பிள்ளைத்தமிழில் 19 அவரது வரலாற்றை விரிவாக அறிய முடிகின்றது. நாகப்பட்டினத்திற்கு இருகல் தொலைவிலுள்ள காடம்பாடி என்னும் ஊரில் சோழியச் சைவ வேளாளராக வாழ்ந்த சொக்கநாத பிள்ளை என்பவர் அடிகளின் தந்தையார். சின்னம்மையார் என்னும் திருவினர் அடிகளின் தாயார் இவ்விருவரும் நீண்ட நாட்கள் மகப்பேறு இன்றித் திருக்கழுக்குன்றைச் சார்ந்து, பல நோன்புகள் இயற்றி அங்குக் கோவில் கொண்ட இறைவனருளால் அடிகளாரை ஈன்றனர் என இப்பிள்ளைத்தமிழில்

அடிகளிாரின் பிறப்பு பற்றிய வரலாற்றைக் காண முடிகின்றது. 20 அடிகள் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிந்த பரிதிமாற் கலைஞரின் உதவியால் அக்கல்லூரியில் தமிழாசிரியராய் அமர்த்தப் பெற்றது; அங்குப் பணியாற்றும் காலத்தில் முல்லைப் பாட்டாராய்ச்சி உரை, பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை ஆகிய நூல்களை இயற்றியது;21 திருவள்ளுவர் ஆண்டை அடிகள் உறுதிப்படுத்தித் தமிழக மக்களுக்கு அறிமுகப் படுத்தியது22 ஆகிய வரலாற்றுச் செய்திகளைக் காணமுடிகின்றது.

அடிகள் ஒருநாள் மாலை இராமலிங்க சுவாமிகள் அருளிய,

"பெற்ற தாய்தனை மகமறந்தாலும்
பிள்ளை யைப்பெறுந் தாய் மறந்தாலும்
உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்
உயிரை மேவிய உடல்மறந் தாலும்"

என வரும் திருவருட்பாப் பாடலை அவருடைய மகள் நீலாம்பிகை உடனிருக்கும்போது பாடினர். பின் அடிகள், இப் பாடலில், 'தேகம்' என்னும் சொல்லுக்கு 'யாக்கை' என்று இருப்பின் இனிமையாயிருக்கும் என்று கூற, நீலாம்பிகை பிற மொழிக் கலப்பை நீக்கின் தமிழ் சிறக்கும் என்றார். இயல் பாகத் தனித்தமிழ் ஆர்வம் கொண்ட அடிகள் வேதாசலம் என்னும் தம்பெயரை 'மறைமலை' என மாற்றியதோடு தனித் தமிழ் இயக்கமும் கண்டார் என்பது வரலாறு இவ்வரலாற்றுச் செய்தியை இப்பிள்ளைத்தமிழின் சிற்றிற் பருவப் பாடலில் காண முடிகின்றது. 23

மறைமலையடிகள் சைவ சமய வளர்ச்சிக்காகச் சைவ சித்தாந்தசபை நிறுவியது, திருவொற்றியூர் முருகனிடத்துக் கொண்ட ஈடுபாட்டால் திருவொற்றியூர் முருகர் மும்மணிக் கோவை இயற்றியது; 24 அடிகள் இலங்கைப்பயணம் சென்று வந்தது; 25 தம் அறிவாராய்ச்சியால் அறிந்த ஆய்வு முடிவு

களைத் தாம் நடத்திவந்த அறிவுக்கடல் ஞான சாகரம் என்னும் இதழில் வெளியிட்டு வந்தது; 26 தமிழ்த்துறவு மேற் கொண்டு தொண்டாற்றியது; 27 "எங்கும் தமிழ் எதிலும் தமிழ்" என்னும் கொள்கையுடைய அடிகள் இறைவழி பாடும் திருமணம் முதலிய சடங்குகளும் தமிழ்மொழியிலேயே நடைபெற வேண் டும் என விரும்பியது; 28 வாழ்க்கை இறுதிச் சடங்குகள் தமிழில் நடைபெற வேண்டும் என அடிகள் விரும்பியது; 29 அடிகள் இலங்கையில் கொழும்பு முதலிய இடங்களுக்குச் சென்று சைவ சமயக் கொள்கையைப் பரப்பியது; 30 அடிகள் எழுபத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்தது 31 முதலிய வரலாற்றுச் செய்திகளையும் இப்பிள்ளைத்தமிழில் காண முடிகின்றது.

இவ்வகையில் எல்லாப் பிள்ளைத்தமிழ் இலக்கியங்களி லும் வரலாற்றுச் செய்திகளைக் காண இடமுண்டு. எந்தவொரு பிள்ளைத்தமிழ் நூலையும் வெறுங்கற்பனை என்றோ கலைப் போலி என்றோ ஒதுக்குவதற்கில்லை. இங்கே அரும்பாத்தை வேத விநாயகர் பிள்ளைத்தமிழ், இருடியர் பட்டிக் குருநாதர் பிள்ளைத்தமிழ், சிவமலைப் பிள்ளைத்தமிழ், சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ், தில்லை சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ், மறைமலை அடிகள் பிள்ளைத் தமிழ் ஆகிய நூல்கள் சான்றாய்வுக்கு மேற்கொள்ளப்பெற்று வரலாற்று விளக்கங்கள் கண்டறியப் பெற்றன.

## அடிக்குறிப்புகள்

(1) பா. எண்: 28
(2) மேற்படி : 46
(3) மேற்படி : 19
(4) மேற்படி : 21
(5) மேற்படி : 2
(6) பா. எண்கள் ; 5, 8, 11, 15, 28, 68,
(7) மேற்படி : 10

(8) மேற்படி : 18

(9) மேற்படி : 19

(10) மேற்படி : 62

(11) சகம் 1443 என்பது கி. பி. 1521. சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள், ப. 174

(12) "வைவத் துரந்தாடும் உரககுலேசன் மகன்
மகனாகும் ஒரு தொண்டைமான்
வாரித்திரைநல்கும் மன்னன் பெரும்பேர்
வரம்பெற்ற வெற்றி கொண்டான்
சைவத் தவப்பயனை யொத்தவன் வழிவந்த
தநயன் கழுக்குன்றனாம்
தக்கசெம்பிய வளவன் வந்துனக் காலயம்
சகலமும் தந்ததற் பின்
பௌவத் தலத்தெழு சகாத்த மோராயிரத்
தொருநாலு நூற்றின் மேலும்
பயிலுநாற் பத்துமூ வருடமாம் விடுவருட
மகரம் பகுத்த திருநாள்
தெய்வத் திருத்தேர் உருட்டியது கோலவிச்
சிறுதேர் உருட்டியருளே
செய்கையாய்! சரவணப் பொய்கையாய் தோகையாய்!
சிறுதேர் உருட்டி யருளே"

சிறுதேர்: 6.

"இறைபோன் பொருட்டுப் பொருள்விரித்து
முழுதும் பகர்ந்த கனிவாயான்"

பா. எண் :46

(14) "பார்த்திவன் பாவையும் இயற்குலச் சிறையும்
பணிந்தருள மதுரை புக்கு"

பா. எண் : 33

(15) பா. எண்: 4

(16) மேற்படி : 92

(17) மேற்படி : 93

18) "ஏகாம லேனந் தொடர்ந்துவரு நின்குலத்

தெழிலரசு மேனமுடனே

யேறிவரு புரவியுஞ் சிவகங்கை மூழ்கியே

யினியபொன் னிறமானதும்

போகாத வெண்குட்ட மதுபோக வடிவெலாம்

பொன்வடிவு தானாகவே

பொன்மகுட கெவுடதே சக்குரிசில் பெற்றதும்

புவியினிற் கண்டதிலையோ

மோகா விகாரத்தின் முனிவரன் கோபத்தின்

முன்னிட்ட சாபத்தையு

மூளா தொழிக்கலா மாளா வரம்பெற்று

முற்றுமே வாழலாகும்

ஆகாத நின்கட் கருங்குட்ட முந்திரு

மம்புலீ யாடவாவே

யம்பலவருடன்மருவு சிவகாமி யம்மையும்

அம்புலீ யாடவாவே"

பா.எண்: 7

(19) நூலாசிரியர் : அன்பானந்தம், பாவலர், சி;

(20) "பொங்கியெழுங் கங்கையைச் செஞ்சடையில் கொண்டவன்

புகழ்கழுக் குன்றநாதன்

பொற்பாதம் போற்றியோர் பிள்ளையை வேண்டிடப்,

புண்ணியங் கூடிவரவே
திங்களொளி வீசிடத் தேவனருள் கூடிடத்
திரண்டிந்த வையமுழுதும்
தீந்தமிழ்த் தேன்சுவை தித்திக்கத் தித்திக்கத்
தெள்ளிநித மள்ளி நல்க
தங்கமனச் செம்மலாய்ச் சைவமனக் காளையாய்த்
தகதகப் பொன்மேனியாய்த்
தக்கநற் கல்வியும் தன்னுறுதி மேன்மையும்
தான்கொண்டு நெஞ்சுயர்த்திச்
சிங்கமென வந்தவன் செய்யபுகழ் தந்தவன்
செங்கீரை யாடியருளே
சின்னம்மை சொக்கனார் தாம்பெற்ற செல்வமே
செங்கீரை யாடியருளே''

பா. எண்: 11

(21) '' சென்னை நகரில் செய்ய தமிழ்
சீராய்க் காக்குங் கல்லூரி
சிறந்த ஆசான் எனப் போற்றித்
தருவார் பணியிற் சேர்ப்பிக்க
மன்னும் புலமை மாணறிவால்
மாணாக் கருளுங் கொள்ளையிட்டு
மலர்ந்த முல்லை யாராய்ச்சி
மதிப்பைக் கூட்ட முறையாகப்
பின்னும்பட்டி னப்பாலை
பெருங் கட்டுரையு மாய்ந்தவித்துப்
பிறங்குஞ் சைவ சித்தாந்தப்

பெருமை யுலகிற் கெடுத்தோதித்
தொன்மைக் கினிமை சேர்ந்தபசுந்
துளிரே தாலோ தாலேலோ
தூய்மைத் தமிழ்செய் மறைமலையாந்
துணைவா தாலோ தாலேலோ"

பா. எண் : 26

(22) "முப்பா லாய்ந்துமு ழுப்பயன் தந்த
முகிலே தாலேலோ
முழங்கிய வள்ளுவ ராண்டினைக் கண்ட
முதலே தாலேலோ"

பா.எண் :30

(23) "வடலூர் வள்ள லருட்பாவில்
வழியுஞ் செந்தேன் சுவைத்தொருநாள்
வளமார் "பெற்றதாய்" எனும்பா
வண்ணப் பண்ணிற் பாடுங்கால்
உடனே 'தேகம்' எனுஞ் சொல்லிற்
குகந்த யாக்கை அவ்விடத்தே
உறுமா றமைந்தா லோசையின்பம்
உயர்வா மெனவே தெளிவுற்றுக்
குடமார் சுடரா யிலங்கு மகட்
குரைக்க 'நீலா' ஒப்பிடவே
கொண்ட வேதா சலப்பேரைக்
கொழிக்கும் மறைமலையெனவே
திடமாய்க் கொண்டு நின்ற மகன்

சிறியேம் சிற்றில் சிதையேலே
செப்பத் தமிழைத் தந்திடுவோய்
சிறியேம் சிற்றில் சிதையேலே”

பா. எண் :78

(24) பா. எண் : 45

(25) பா, எண் : 54

(26) மேற்படி : 58

(27) மேற்படி : 58

(28) மேற்படி : 80

(29) மேற்படி : 85

(30) மேற்படி : 97

(31) மேற்படி : 94

## (18) தமிழ்மொழியின் செல்வாக்கு

முருகப் பெருமானைத் தமிழ் மொழியோடு இணைத்துப் பாடியுள்ள பாங்கினையும், தமிழ்க் கவிஞரான சேக்கிழாரை முன்வைத்து முதன்மைப்படுத்தி இலக்கியத் தலைவனாக ஏற்றம் தந்திருப்பதையும் சைவ சமயப் பிள்ளைத் தமிழ் நூல்களில் காண முடிகின்றன. அன்றியும் தமிழ் மொழியைக் குறிப்பிடும் பொழுதெல்லாம் வெறுமனே தமிழ்மொழி என்று குறிப்பிடாமல் அதன் இயல்பு சிறப்பு முதலிய அடைகளோடு தமிழ் மொழியைச் சிறப்பித்திருக்கின்ற தன்மையையும் சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் காண முடிகின்றது.

அரும்பாத்தை வேத விநாயகர் பிள்ளைத் தமிழில்,

" இயல் இசை நாடகமெனும் முத்தமிழ் " 1

" செந்தமிழ் " 2

" தெய்வத்தமிழ் " 3

" வீறுதமிழ் " 4

" மெய்த்தமிழ் " 5

" பைந்தமிழ் " 6

எனத்தமிழ்மொழி அதனுடைய வகையாலும் பண்புகளாலும் சிறப்பிக்கப் பெற்றிருத்தலை அறிய முடிகின்றது.

திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் காலங்காலமாக வந்த தமிழ்ப் புலவர்களுக்கு அவர்கள் மனம்கொள்ளும் வண்ணம் தமிழ் உரைத்தவன் முருகனே என்னும் செய்தி இடம் பெற்றுள்ளது.

" வழுவறு தமிழ்ப் பனுவல் முறைமுறை யுரைத்துவெகு
வரகவிஞர் உட்குழையவே

மகபதியு மிக்கமுனி வரர்கணமும் இச்சையுடன்

வழியடிமை செப்பியிடவே

பொழுதுதொறும் ஒக்கவிதி முறையுனை அருச்சனைசெய்

புனிதசிவ விப்ரருடனே

புகலரிய பத்தசனம் அரகர வெனக்குலவு

புரவலர் விருப்பமுறவே

செழுமறை முழக்கவரு முருககும ரக்கடவுள்

சிறுபறை முழக்கியருளே" 7

எனத் தமிழ்மொழி குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய முருகனொடு தொடர்பு படுத்தப் பெற்று அம்மொழியின் தொன்மையும் சிறப்பும் சிறப்பிக்கப் பெற்றிருத்தலைக் காண முடிகின்றது

மேலும், பாட்டுடைத் தலைவனாகிய முருகன்,

" ஆயும் பெரும் பனுவ லாசுகவி மதுரகவி

அரியசித் திரகவிதைவித்

தாரகவி இடுமுடிப் புக்குள மயங்காமல்

அடியவர்க் கருள் குருபரன் " 8

எனச் சிறப்பிக்கப் பெற்றுள்ளார். இதனால் இவ்வாசிரியர் காலத்தே ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்னும் கவிகளில் வல்ல தமிழ்ப் புலவர்கள் தமிழ் நாட்டினில் நிறைந்திருந்தனர் என்பதை அறிய முடிகின்றது. ஆசுகவியுள் திண்டிமகவி என்னும் ஒருவகையினரையும் இப்பிள்ளைத் தமிழில் அறிய இடமுண்டு. இச் செய்தி குறித்து அறிஞர் ஒருவர் கூறுவது இங்கே குறிப்பிடத் தக்கது: திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் ஆசிரியரும் முருகக் கடவுள் பக்தியில்

சிறந்த முன்னோருள் ஒருவருமாகிய 'பகழிக் கூத்தர்' என்னும் புலவர் தங்காலத்தே அக்கடவுள் அருளால் பெற்ற திண்டிம வாத்தியத்தைத் தம் பெருங்கவிப் புலமைக் குறியாக முழக்கிக் கொண்டு சீரிய கவிஞர் சிலர் திருச்செந்தூர்க் கடவுள் திரு முன்பு மங்கலக்கவி பாடி வந்ததை,

"பண்டரு பெருங்கவிப் புலமைக்கு நீசொன்ன"9

"பாவாணர் மங்கலக் கவிவாழி பாடிப்
பரிந்து திண்டிம முழக்க"10

என்னும் பாடலடிகளால் உணர முடிகின்றது. இவற்றால் திண்டிமவாத்தியம், ஆசுகவி பாடவல்ல புலவரால் தம் புலமைக் குறியாகக் கொள்ளப் பெற்ற தொன்று என்பதும் அதனை அக்கவி பாடா நின்றே ஒலிப்பிப்பது அவர்தம் வழக்கம் என்பதும் அறியப் பெறுகின்றது. பண்தரு பெருங்கவி என்றதனால் ஓசையின்பமும் நீட்சியுமுடைய சந்தக் கவிகளாக அவற்றைக் கொள்ளல் பொருந்தும். அத்தகைய திண்டிம கவியாகப் பகழிக்கூத்தரால் சிறப்பிக்கப் பெற்றோர் அருணகிரி நாதரே எனலாம் 4

அன்றியும் முருகப் பெருமானே திருஞான சம்பந்தராகத் தோன்றினார் என்பதை,

"கன்றும் அமணர் சுழுவேறக்
காழிப் பதியில் வந்துதித்து
கள்ளப் பரச மயக்குறும்பர்
கலகம் ஒழித்துக் கட்டழித்தாய்" 12

என்னும் அடிகளால் அறிய முடிகின்றது.

திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழில், புலவர்கள்

பாடுகின்ற நற்பாடல்களுக்கு இசைந்து அவர்களோடு நட்புரிமைகொள்ளும் நண்பன் முருகன் என்பதை,

" குறவர் பெற்றவொரு மடமயிற் கினிய
கொழுநனைப்புலவர் பாடுபா விற்கினிதாய் மிக்கநட்புறு
குணவனை" 13

" நாமலர் பாமொழி தூமொழி யாரிடை
நண்பா பண்பாளர்" 14

என்னும் அடிகளால் அறிய முடிகின்றது. முருகப் பெருமான் தலைச்சங்கத்தில் தலைமைப் புலவனாய் இருந்து தமிழாராய்ந்தான் என்பதை,

"தண்ணிய குரவமர் புண்ணிய குரவா
தாலோ தாலேலோ
தமிழ்தெரி சங்கத் தலைமைப் புலவா
தாலோ தாலேலோ" 15

என்னும் அடிகளால் அறிய முடிகின்றது,

மருதாசலப் பிள்ளைத்தமிழில்,

" நல்லோர் தொழில் தாய்மொழி பேணல் என்று
மெய்த்தமிழ் நித்தம் வளர்க்குநர் "

எனக் கூறுவதினின்றும் நல்லோர் கடமை நாளும் தமிழ்மொழியை வளர்த்தலே என்பது புலனாகின்றது.

"பாசத்தனமே மிகமலிசொற் பதரேபோலும் புறமொழியின்
பரவை நெடுநாள் மூழ்க வைத்துப் பசியநந் தெய்வத்
தமிழின்
ஆசைவாரி தனில முத்தி யன்றுமலர்ந்த குராக்

கடம்போ
டதிகநறிய வலங்கறொடுத் தடியேன் றுதித்தல்
பன்னிருபு
யாசலத்திற் புனைந்தருள வயில்வேற்படையை
நெடுந்தண்டை
யணிவான் றோளிற் கராம்புயத்தி ல்ணிந்தே
யக்கு நீறிலக
மாசிலிளவெண் ணகையொடுநேர் வருக வருக
வருகவே" 16

என வரும் அடிகளால் இப்பிள்ளைத்தமிழின் ஆசிரியர் ஆங்கில மொழி கற்கப் பன்னாள் கழித்தமையும் அதன்பால் ஒரு நலனுங் காணேன்; தாய்மொழியால் பல நன்மையும் அடைவேன் எனக்கூறியுள்ளதை அறியமுடிகின்றது.

மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழில் காப்புப் பருவத்தில் திருமாலை,

" பணிகொண்ட முடவுப் படப்பாய்ச் சுருட்டுப்
பணைத்தோள் எருத்தலைப்பப்
பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங்கொண்டலே" 17

எனப் போற்றினாலும் அது தமிழ்மொழியின் ஏற்றத்தை எடுத்துரைப்பதாகவே விளங்குகின்றது.

அன்றியும் 'தமிழ்' என்னும் சொல் நூலில் பலவிடங்களில் ஆளப்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது, தமிழைக் குறிப்பிடும்பொழுதெல்லாம் அதன் சிறப்பு வெளிப்படுமாறு.

" தேக்கமழ் மதுரம் ஒழுகியதமிழ் " 18

" மதுரத்து உவட்டெழு முத்தமிழ் " 19

" தெள்ளித் தெளிக்கும் தமிழ்க்கடல் " 20

" பண் உலாம் வடிதமிழ் " 21

" தென்னந்தமிழ் " 22

" முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ் " 23

" மதுரம் ஒழுகும் கொழிதமிழ் " 24

" நறைபழுத்த துறைத் தீந்தமிழ் "

எனப் போற்றப்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில், தமிழ்மறையும் முதற்சங்கப் பாவலர் பாநயமும் கனிந்த பசுந்தமிழ் விளங்க வந்தவர், குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனாகிய முருகப்பெருமான் என்பதை,

"கலைப்பா னிறைந்த முதுக்குறைவிற்
கல்விச் செல்வர் கேள்விநலங்
கனியக்கனிய அமுதூறுங்
கடவுண் மறையு முதற்சங்கத்
தலைப்பா வலர்தீஞ் சுவைக்கனியும்
தண்டே னறையும் வடித்தெடுத்த
சாரங் கனிந்தூற் றிருந்த பசுந்
தமிழும் நாற" 26

என்னும் அடிகளால் அறிய முடிகின்றது. மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழைப் போலவே இப்பிள்ளைத்தமிழிலும் தமிழ் மொழி அதன் இயல்பு, சிறப்பு முதலியன குறித்த பல அடைகளால் போற்றப்பெற்றுள்ளது.

இறைவனையும் இறைவியையும் அடியார்களையும் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு பாடப்பெற்ற பிள்ளைத் தமிழ் என்னும் இலக்கியவகை சேக்கிழார், மறைமலை அடிகள் முதலான தமிழ்க் கவிஞர்களையும் முன்வைத்துப் பாட்டுடைத் தலைவர்கள் என்னும் ஏற்றம் தந்திருப்பதைக் காண முடிகின்றது. இறைவன் அல்லது இறைவிக்கும் அடியார்களுக்கும் கிடைத்த சிறப்பு தமிழ்க்கவிஞர்களுக்கும் கிடைத்திருக்கின்றது.

தொண்டை நன்னாட்டில் புலியூர்க்கோட்டத்திலுள்ள குன்றத்தூர் என்னும் பழம்பெரும் பதியில் சேக்கிழார் அவதரித்தார். இவர்தம் மரபு சேக்கிழார் மரபாகும். சேக்கிழார் என்பது சிவப்பரம் பொருளின திருநாமங்களில் ஒன்று. வேளாண்குடியினருக்கு அப்பெயர் குலவதலாக அமைந்துள்ளது. இக்குடியினர் உருவானும் திருவானும் அறிவானும் செறிவானும் மிக்கு மன்னவரும் மதிக்கும் மாட்சிமை பெற்றுப் பொதுநலம் பேணி வாழ்வாராயினர். சேக்கிழார், சேக்கிழார் குடிவிளங்கக் குல விளக்காக அவதரித்தவர். இயற்பெயர் அருண்மொழித்தேவர் என்றாலும் சிறப்பாகக் குடிப்பெயரே வழங்கலாயிற்று. இளமையிலேயே கல்வி, கேள்வியில் சிறந்து விளங்கியதோடு சைவ செந்நெறி பேணுவதில் தனியார்வம் மிக்கவராய்த் திகழ்ந்தார்.

இவர் சோழப் பேரரசில் அநபாய சோழ மன்னனிடம் அமைச்சராய்ப் பணியாற்றியபோதும் சோழ நாட்டில் திருநாகேச்சரத்தில் உள்ள சிவபிரானை நாளும் வழிபட்டு வந்தார். அக்கோவிலைப் போன்றதொரு கோவிலைத் தம் சொந்த ஊரான குன்றத்தூரில் கட்டி அதற்குத் திருநாகேச்சுரம் என்று பெயரிட்டுப் பூசைக்குரிய நியமங்களும் செய்தார்.

அக்காலத்தில அரசன் சமணப் பெருங்காப்பியமாகிய சீவகசிந்தாமணியைப் படிக்கக் கேட்டு மகிழ்ந்து அதனை

பலபடப் பாராட்டினான். அதுகண்ட சேக்கிழார் சீவகசிந்தாமணி இம்மைக்கும் மறுமைக்கும் ஆகாத பொய்க்கதை; அதனைப் படித்தல் வீணேயாம் என்று அரசனை அறிவுறுத்தினார். திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் இரண்டு நூலையும் அடிப்படையாகக் கொண்டு திருத்தொண்டர் புராணம் இயற்ற விழைந்தார். பின்னர் தில்லை நடராசனைச் சார்ந்துவேண்ட இறைவன் 'உலகெலாம்' என்று அடி எடுத்துக்கொடுக்க உண்மையான தவக்கதை யாகிய பெரிய புராணத்தை இயற்றியருளினர். இக்காப்பியத் தின் சிறப்புணர்ந்த மன்னன் சேக்கிழாருக்கு ஞானமுடி சூட்டித் "தொண்டர்சீர் பரவுவார்" என்னும் பெயரும் வழங்கிச் சிறப் பித்தான். பின்னர் சேக்கிழார் திருத்தில்லையில் சிவத்தி யானத்தில் அமர்ந்தும் திருத்தொண்டர் சரிதங்களை உணர்ந்தும் சிவனடியார்களுடன் இருந்து தவம் புரிந்தும்' இறைவனடி சேர்ந்தார்.

திருத்தொண்டர் புராணம் பிறமொழிச் சார்பு எதுவும் இல்லாமல் தமிழிலேயே முதன்முதல் தோன்றிய செந்தமிழ்க் காப்பியமாகும் தமிழகத்தில் வாழ்ந்த மெய்யான திருத் தொண்டர்களின் திருத்தொண்டுகளையும் அவர்களின் வாழ்க்கை நெறிகளையும் மன்னர்களின் மாண்புகளையும் எடுத்தியம்புகின்றது. சைவ சமயத்தின் மேன்மைகளையும் அச்சமயத்து நூல்களாகிய திருமுறைகள், ஆகமங்கள் அவற்றின் பொருளை விளக்கும் புராணங்கள், திருமுறைகளின் சிறப்புகள் முதலியவற்றை இக்காப்பியம் எடுத்துரைக்கும் பெற்றியது. 27

சேக்கிழாரின் தெய்வத்தமிழ்த் தொண்டு உலகம் உள்ளளவும் நின்று நிலைக்கக் கூடியது. செந்தமிழின்

இனிமையும் பக்தியின் மேன்மையும் பின்னிப் பிணைந்த பெருங் காப்பியமாகப் பெரிய புராணம் திகழ்கின்றது. இத்தகு உயர்ந்த வரலாற்றின் அடிப்படையில் அமைந்த காப்பியத்தைப் படைத்தளித்த சேக்கிழார் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டுப் பிள்ளைத்தமிழ் பாடி ஏற்றம் தந்திருப்பது தமிழ் மொழிக்கும் பிள்ளைத்தமிழ் என்னும் இலக்கிய வகைக்கும் இடையே இருக்கும் இணைபிரியா தொடர்பை வெளிப்படுத்துவதேயாகும்.

## அடிக்குறிப்புகள்

(1) பா. எண் : 5

(2) மேற்படி : 9

(3) மேற்படி ; 16

(4) மேற்படி : 55

(5) மேற்படி : 65

(6) மேற்படி : 86

(7) மேற்படி , 81

(8) மேற்படி : 8

(9) சப்பாணி : 2

(10) சிறுபறை : 4

(11) இராகவையங்கார், மு. சாசனத்தமிழ்கவி சரிதம், பக். 29-130. மேற்கோள் சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் ப. 112.

(12) பா. எண் . 90

(13) மேற்படி : 2

(14) மேற்படி : 10

(15) தாலப்பருவம்

(16) வாரானை : 1

(17) காப்பு : 1

(18) பா. எண் : 3

(19) மேற்படி : 4

(20) மேற்படி : 9

(21) மேற்படி : 14

(22) மேற்படி : 23

(23) மேற்படி : 31

(24) மேற்படி ; 54

(25) மேற்படி : 61

(26) மேற்படி : 44

(27) வெள்ளை வாரணர், க. வித்துவான், பன்னிரு திருமுறை வரலாறு, இரண்டாம் பகுதி, ப. 556.

## (14) அகப்பொருள் புறப்பொருள் நலன்கள்

உலகில் பிறமொழிகளில் எழுத்து, சொல் ஆகிய இரண்டிற்கு மட்டுமே இலக்கணம் வரையறுக்கப் பெற்றுள்ளன என்னும் கருத்து பரவலாக நிலவி வருகின்றது. தமிழ்மொழியில் மட்டும் எழுத்துக்கும் சொல்லுக்கும் இலக்கணம் வரையறுத்திருப்பதோடு வாழ்க்கையாகிய பொருளுக்கும் இலக்கணம் வரையறுக்கப் பெற்றுள்ளது. தமிழ்மொழியிலுள்ள பழம் பெரும் இலக்கண நூலாகிய தொல்காப்பியம் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் பொருளதிகாரம் என்னும் மும்பெரும் பிரிவுகளையுடையதாய் விளங்குவது மேலே காட்டிய கருத்துக்குச் சான்றாய் திகழ்கின்றது. தமிழரின் வாழ்க்கை அகம், புறம் என்னும் இருபிரிவுகளையுடையது. வாழ்விலிருந்து மலர்கின்ற இலக்கியத்திலும் இத்துறைகளைக் காண இடமுண்டு. சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் விளங்கும் அக, புற நலன்கள் இங்கே ஆராயப் பெறுகின்றன.

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழில் அரும்பாத்தை என்னும் ஊரின்வளம் மிக்க அழகுடைய பெண்களது கூந்தலில் பாடிய ஆண் வண்டோடு பிணங்கிப் பறந்த பெண் வண்டு மலரையுடைய அவ்வனத்தில் மறைந்துகொள்ளும். அங்கு வந்து விளையாடுகின்ற பெண்கள் ஓங்கியடித்ததால் மகரந்தங்கள் தாக்க மணமுடைய தேனை வெளிவிட்டு மணம் வீசும் அக்கொம்பு அசைவதால் மயங்கி வெருண்டு அந்தப் பெண்வண்டுகள் முன்பிருந்த ஆண் வண்டுகளைச் சேர்ந்து சுகமளிக்கும் அரும்பாத்தை பதி எனக் கூறப் பெற்றுள்ளது. இங்கு முன்னர் ஊடிச்சென்ற வண்டுகள் அச்சத்தால் பின்னர் வந்து கூடுதலைக் காண முடிகின்றது. 'புணர்தல்' என்னும் உரிப்பொருள் இங்கே இடம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது. திருக்குறளில் காமத்துப் பாலில் வரும்,

"ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்" 1

என்னும் குறள் இங்கே இணைத்துக் காணத்தக்கது.

சேக்கிழார் பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவர் சேக்கிழார். இவர் திருத் தொண்டர் புராணம் என்னும் காப்பியத்தை இயற்றியவர். இக்காப்பியத்தில் அமைந்துள்ள நலன்களையெல்லாம் விளக்கும்பொழுது முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றும் சிறக்க இயற்றப் பெற்றுள்ளன எனப் பாட்டுடைத் தலைவரின் சிறப்புக்களைக் கூறும்பொழுது அகப்பொருள் நலத்தினை அறிய முடிகின்றது. 2

முதற்பொருளில் முல்லை குறிஞ்சி, மருதம், நெய்தல் பாலை என்னும் நிலங்களும் பெரும்பொழுது சிறுபொழுதுகள் ஆகிய அனைத்தும் அடங்கும். 3 இவற்றைச் சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் காணமுடிகின்றன. சான்றாகச் சேயூர் முருகன் பிள்ளைத்தமிழில் சரவணப் பொய்கை பற்றிக் கூறும்பொழுது, சரவணப் பொய்கை ஆறு குழவி உருவாய்க் கிடந்த முருகப்பிரானை நீராட்டியது; காலைப்போதில் நீராட்டிப் பகல் வந்தவுடன் கார்த்திகை முதலிய விண்மீன்மாதர் பாலூட்டி மாலை வந்தவுடன் தன் அலை என்னும் கையால் அம்புலியும் காட்டி வைகறையில் சுரும்புகளை ஓட்டி வளர்த்தது எனக் கூறப் பெற்றுள்ளது. இங்கே வைகறை, காலை, பகல், மாலை எனச் சிறுபொழுதுகள் நான்குமே இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது. 4

கருப்பொருளில் தெய்வம், மக்கள், விலங்குகள் முதலியன வரையறுக்கப் பெற்றுள்ளன. 5 தில்லை சிவகாமியம்மைப்

பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய சிவகாமியம்மை குறிஞ்சிவரு கிழவ னாகிய முருகனைப் பெற்றிருக்கின்ற சிறப்பை உடையவள் எனச் சிறப்பிக்கப் பெற்றுள்ளது. குறிஞ்சிவரு கிழவன் என்பது குறிஞ்சி நிலத்தின் வள்ளிக்காக வந்த வேடனான முருகன் எனப்பொருளாகின்றது. மேகம் தங்கும் உயர்ந்த சிகரங்களை யுடைய மலைச்சாரலை அடையும் யானைக் கூட்டங்கள் சிகரங்களினின்று பனிக்கட்டிகள் சிந்த அதனால் பயந்து தந்தங்களை அசைத்துக்கொண்டு ஓடவும் காட்டிலுள்ள யானை களைக் கண்ட சிங்கங்கள் தனது மனதில் கோபமிகுந்து மிக்க வலியால் மகிழ்ந்து பிடரிமயிரைச் சிலிர்த்து நெருப்புச் சிந்தும் காட்டுத் தீயைக் கண்டு கடந்து வாலை முறுக்கி உடல்மீது அடித்துக்கொண்டு குகைபோன்ற வாயைத் திறந்து கர்ச்சித்துச் சென்று கல்நிலத்தை அடைந்து நிற்க இவற்றின் இரு கூட்டத் தையும் அழிக்கும் குறிஞ்சி நிலத்தில் வருவேடன் எனப்பொருள் உரைக்க முடிகின்றது. 6 குறிஞ்சிநிலம் என்பது மலையும் மலைசார்ந்த இடமும் ஆகும். இங்கே குறிஞ்சி நிலம் அந் நிலத்திற்குரிய தெய்வமான முருகன், அதற்குரிய மக்களாகிய முருகனானவேடன், அதற்குரிய விலங்குகளாகிய சிங்கம், யானை ஆகியன இடம் பெற்றிருக்கின்றன.

மறைமலையடிகள் பிள்ளைத்தமிழில், 7

"முல்லைக்குத் தானமர் தங்கத்தே ருறைதந்த
முடியுடைப் பாரிதனிலும்
முல்லைக்குத் தேனமர் செந்தமிழ்த் தேருரை
முழுதீந்த புகழுமெய்தி
இல்லைக்குச் சான்றெனும் பாலைக்குங் குறிஞ்சியின்

இறையருட் தமிழை யீந்தே
இயல்பசுஞ் சோலையாய் இழையூடு பாவுற
எடுத்தநூல் நெய்தலாக்கி

எல்லைக்குச் சார்புறாக் கருணைமரு தம்வீச
இந்திரன் வருணனுடனே
இளையவன் துர்க்கைதிரு மாலுமவர் தேரேறி
இனிதே விரைந்தருள

தில்லைக்குள் ளுள்ளவனின் உள்ளத்தேர் நிற்பவன்
சிறுதே ருருட்டியருளே
திருக்கழுக் குன்றத்துச் சிவனருள் பெற்றவன்
சிறுதே ருருட்டியருளே" 8

என அன்பின் ஐந்திணைகளையும் மறைமலையடிகளுடன் பொருத்திப் பாராட்டியிருப்பதைக் காணமுடிகின்றது. இப் பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய மறைமலையடிகள், தனக்குரிய தேரை முல்லைக்கொடிக்கு வழங்கிய பாரி வள்ளலைவிட முல்லைப்பாட்டு என்னும் நூலுக்கு அரிய உரை வரைந்துள் ளார். நிலம் பகுக்கப்படாத பாலை என்னும் பெயரையுடைய பட்டினப்பாலை என்னும் நூலுக்கு அரியஉரை வரைந்துள்ளார். குறிஞ்சிநிலக் கடவுளாகிய முருகனுக்கு மும்மணிக்கோவை என்னும் நூலைப் படைத்துள்ளார். இவ்வாறாக முல்லைப் பாட்டு, பட்டினப்பாலை என்னும் நூல்களுக்குப் பசுஞ்சோலை போன்ற தண்ணிய அழகிய உரையும் (இழை) முருகர் மும் மணிக்கோவை என்னும் நூலும் (பா) தமிழ்மொழியில் நெய்து (நெய்தலாக்கி) இப்படியாகப் பாட்டுடைத் தலைவரின் எல்லை யிட முடியாத தமிழ்மொழிமீது கொண்ட கருணையாகிய

மருதம் (காற்று) எங்கும் வீசிடச் செய்ததால் இவ் ஐவகை நிலங்களுக்குரிய செயல்களை ஒருவரே செய்யும் நிலையை எண்ணி மருதத்திற்குரிய இந்திரன், நெய்தலுக்குரிய வருணன், குறிஞ்சிக்குரிய முருகன் (இளையவன்) பாலைக்குரிய கொற்றவை (துர்க்கை) முல்லைக்குரிய திருமால் ஆகிய ஐம்பெருங் கடவுளர் களும் குழந்தையாகிய பாட்டுடைத் தலைவர்க்கு அருள்செய்ய வேண்டித்தேரேறி வருக என வர்ணித்திருப்பதில் அகப்பொருள் நலன்களைக் காணமுடிகின்றது.

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் கலைமகளைச் சிறப் பிக்குமிடத்தில் அன்பின் ஐந்திணையாகிய இறையனார் கள வியல் உரையைச் சுவைத்துணர்கின்றாள் எனப் போற்றப் பெற்றுள்ளது. 9 மேலும் இயற்கைப் புணர்ச்சியில் தலைவனும் தலைவியும் தாமே எதிர்ப்பட்டு மாறிப்புக்கு இதயம் எய்வது உள்ளப்புணர்ச்சி ஆகும். இறைவனுக்கும் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டைத் தலைவியாகிய மீனாட்சி யம்மைக்கும் இந்நிகழ்ச்சி கயிலாயத்தில் நிகழ்கின்றது. இருவரும் எதிர்ப்பட்டபொழுது அம்மையின் மார்பில் விளங்கிய பொர்மல் நகில்களில் மூன்றிலொன்று நாணத்தால் மறைந்தது என அகப்பொருட் சுவை ததும்பக் கூறப் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது.

குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வம் முருகன் என்பதை,

"சேயோன்மேய மைவரை உலகமும்" 10

என்னும் நூற்பா வடியால் அறியமுடிகின்றது. முருகப்பெருமான் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில்,

"திண்ணென் தடக்கைவெஞ்சிலைவேடர் குடிகொண்ட
சீறூரும் ஊரூர்தோறும்
செந்தினைப் புனமூடு தண்சாரல் பிறவுமாம்
சீதனக் காணிபெற்றத்

தண்ணென் குறிஞ்சித் தலந்தலை யளிப்பவன் 11

எனப்போற்றப் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. மேலும் இப்பிள்ளைத்தமிழில் வள்ளியம்மை குறிஞ்சி நிலத்தில் திணைப் புனத்தில் வீழும்கிளி கடிந்தும் குருவி ஓட்டியும் கிள்ளைமொழி பேசுகின்றாள். நேரம் மாலைநேரம். குமரன் முதிர்கிழக் கோலமாய் வள்ளியம்மையின் காமர் நலத்தைத் தன் பன்னி ரண்டு கண்களாலும் பருகிநின்றான்'அழகொழுகும் செவ்வேளே என்னை ஏறியிருந்து நடாத்துக என்று வள்ளியின் அழகு நடம் ஆணையிட உள்ளக்குறிப்பெல்லாம் தெள்ளிதின் தெளிவு பெற இருவரும் எதிர்ப்பட்டு இன்பந்துய்க்கின்ற ஒப்பற்ற காட்சி யினைக் காண முடிகின்றது. 12

இவ்வாறு சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகிய மூன்றும் வந்து அகப்பொருள் நலம் பயத்தலைக் காணமுடிகின்றது.

புறப்பொருள் நலத்தைப் பெரும்பாலும் எல்லாச் சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் காண்பதற்கு இடமுண்டு. இங்கே சான்றாய்வுக்கு மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக் குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ஆகிய இரண்டும் எடுத்துக்கொள்ளப் பெறுகின்றது. இப்பிள்ளைத் தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய மீனாட்சியம்மையின் தனியாட்சிக்குரிய நிலப் பரப்பின் எல்லைக் கற்களாகக் குலமலைகள் எட்டும் திகழ் கின்றன. உலகில் பகை ஒழித்து உலகை ஒரு குடைக்கீழ் கொணரவிரும்பும் பாட்டுடைத்தலைவி தென் குமரித்துறைக்கு ஒப்ப வடகடல் துறையிலும் மண்ணுமங்கலம் என்னும் வெற்றி நீராட்டு கொண்டாடுகின்றாள் என்பதை,

''இதயத் தொடும்வளர் குலவெற்பு எட்டையும்

எல்லைக் கல்லின் நிறீஇ

எண்திசை யும்தனி கொண்டு புரந்து

வடாது கடல்துறை தென்

குமரித் துறைஎன ஆடும் மடப்பிடி" 13

என்னும் அடிகளால் அறிய முடிகின்றது. பாட்டுடைத் தலைவியின் போர் வலிமைக்கு அஞ்சிக் கலியாகிய பகைவன் தொலைந்தான் என்பதை,

"அதிரப் பொருது கலிப்பகைஞன் தமிழ்

நீர்நாடு ஆளாமே" 14

என்னும் அடியால் அறிய முடிகின்றது. இவ்வடியல் அதிரப் போர் செய்தலாகிய தும்பைத்திணையினைக் காணமுடிகின்றது.

போர் செய்யும்பொழுது வீரர் தும்பைப் பூவைச் சூடிப் போர் புரிவர். இக் கருத்து,

"தும்பைத் தலைச்செம் மயிர்ச்சிகை" 15

என முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் இடம் பெற்றுள்ளது. போர்க்களத்தில் தோல்வியுற்று ஓடுபவர்களையும் மயிர் குலைந்தோர்க்ளையும் கொள்ளுதல் அறமன்று. இவ்வற நெறியினை,

"தாரோ டவிழ்ந்திட்ட குஞ்சிக் கிமைத்திட்ட

தழல்விழிக் கெதிர்செலாத

தாளுக்கு வாள்சோர் தடக்கைக்கு நாமநும்

தாலிக்கு வேலி ... " 16

எனவரும் அடிகளால் அறிய முடிகின்றது.

இவ்வாறு சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் அக, புற நலங்கள் அமைந்திலங்குவதைக் காணமுடிகின்றது.

இங்கே அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ், சேக்கிழார் பிள்ளைத்தமிழ், சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், தில்லை சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ், மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ் ஆகிய நூல்கள் சான்றாய்வுக்கு மேற்கொள்ளப் பெற்று அக, புறநலன்கள் கண்டறியப் பெற்றன.

## அடிக்குறிப்புகள்

1. திருக்குறள் எண் : 1330
2. ''மேய முதற்பொருள் ஆகிய மூன்றும்
   வேண்டும்இ டத்தெய்த" பா. எண். 30
3. ''முதல் எனப்படுவது நிலம்பொழு திரண்டின்
   இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே"
   இளம். தொல். அகம் 4
4. '' ஆலைக்கே கரும்பொழியப் பொழிசாறு வழிதோ(று)
   ஆறதிரும் வயற்செய்கை ஆறுமுகத் தரசைப்
   பாலைக்கே அடைகொடுத்து மொழிந்தபொய்யா
   மொழியைப்
   பழிக்குமொரு தமிழ்க்குதலைப் பசுங்குருந்தைப்
   புரக்க
   காலைக்கே மலர்க்கமலத் திடைக்கமல மாட்டிக்
   கடும்பகற்கே பசித்ததெனக் கார்த்திகைப் பாலுட்டி
   மாலைக்கே திரைக்கரத்தால் அம்புலியும் காட்டி

வைகறைக்கே சுரும்போட்டி வளர்த்த சரவணமே"

காப்புப்பருவம் : 6

5. "தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப"

இளம். தொல். அகம். 20

6, மறிதிரைப் புணரியைப் புணருவாய்ப் புனலுண்டு
மாலிருஞ் சூல்கொண்டுமின்
மழைகிடந் துருமிடுஞ்சுடர்மணிக் குடுமிநெடு
மால்வரைச் சாரல்சேருங்
குறுவிழிப் புகர்முகக் களிநல்லியா னைக்குளங்
குவடுகுலு றப்பிளிறிவெண்
கோடலைத் தோடமுட் காடகத் தடைகின்ற
கோளரிக் குருளைமுட்காந்
தெறும்வலிக் களிநிமிர்த் துளைசிலிர்த் தழல்சிந்த
வெரிகண் டிறந்துநெடுவா
லெடுத்துடன் முருக்கிப் புடைத்துமுழை வாய்பிளந்
திவர்கற் பதுக்கைநெறியத்
தெறிவுறு குறிஞ்சிவரு வேடனைப் பெறுகுழலி
செங்கீரை யாடியருளே
சிவசிதம் பரமருவு சிவகாமி யம்மையே
செங்கீரை யாடியருளே"

செங்கீரை : 5.

7. நூலாசிரியர் : பாவலர் சி. அன்பானந்தம்

8. பா. எண். : 98

9. "தெள்ளித் தெளிக்கும் தமிழ்க்கடலின் அன்பின்ஐந்
திணையென எடுத்த இறைநூல்
தெள்ளமுது கூட்டுணும் ஓர்வெள்ளோதிமம்"
காப்பு : 9

10. இளம். தொல். அகம் : 5

11. சப்பாணி : 5.

12. "புயலுண் டிருண்ட கொந்தளமும்
பொன்னங் குழையும் இன்னகையும்
புளகம் பொதிந்த இளமுலையும்
புருவச் சிலையும் போர்த்தடங்கண்
கயலும் கலப மயிலியலும்
கன்னிப் புனத்தோர் பெண்ணமுதின்
காமர் நலனும் பன்னிரண்டு
கண்ணான் முகந்துண் டினைமுதின்
இயலுஞ் சுவைநம் அவியொடு நீத்
தேக்கற் றிருந்தத் தாக்கணங்கின்
இழுமென் குதலை கனிந்தூறும்
இதழ்த்தேன் சுவைகண் டேமாப்பான்
முயலுங் குமுதக் கனிவாயால்
முத்தத் தருக முத்தமே
மும்மைத் தமிழ்கதர் கந்தபுரி
முருகா முத்தம் தருகவே"
பா. எண் : 5

13. பா. எண் : 39

14. மேற்படி : 31

(15) மேற்படி : 93

(16) மேற்படி : 92

## (15) திருக்குறளின் செல்வாக்கு

திருக்குறள் வாழ்க்கை நூல்; உலகப் பொதுமறை; உலகிலுள்ள எல்லா மதத்தினரும் எல்லா நாட்டினரும் வேறுபாடுஇன்றி ஏற்றுக்கொள்ளக்கூடிய பொதுப்படையான கருத்துகளை இந்நூல் கொண்டுள்ளது. எனவே இந்நூலின் கருத்துகளை எல்லா இலக்கியங்களும் எடுத்தாண்டு சிறப்படைந்துள்ளன சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் இடம் பெற்றுள்ள திருக்குறள் கருத்துகள் இங்கு ஆராயப் பெறுகின்றன.

சிவகாமி அம்மைப் பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியை அம்மானை ஆடுமாறு வேண்டிப் பாடும்போது,

"மைந்தர்தன் சொற்கேட்கில் இன்பம் செவிக்கெனும்
வாய்மையும் பொய்ம்மை யாமோ
குழலினிது யாழினிது மன்றுநின் மழலைவாய்க்
குதலைமொழி யாடியருளே
குழகன்மகிழ் சிவகாம சுந்தரிநின் மழலைவாய்க்
குதலைமொழி யாடியருளே"1

எனப் பாடப்பெற்றுள்ளன. இவ்வடிகளில் முறையே,

"மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு"2

என்னும் குறள் கருத்தும்,

"குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச் சொல் கேளா தவர்"3

என்னும் குறள் கருத்தும் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியை நீராடியருள வேண்டு முகத்தான் தாமரை மலராகிய முகம் மலர்ந்து இளைய நிலவின் கிரணம் கண்டு மகிழும் கருங்குவளைப் பூக்களாகிய கரிய கண்களால் முழுதும் அன்பு கனியப் பார்த்து நீந்துவதற்கு அரிதான ஆழமுள்ள நீரில் உலவும் பல பறவைகள் தங்கள் நீண்ட சப்தமாகிய இன் சொல்லி னால் "அழியாத புதுமையான பரதேவியே வருக" என்று அன்புடன் வரவேற்று, வெண்மையான முத்துக்களையுடைய சங்கங்கள் சப்தித்து எழுந்து வீசும் அலைகளாகிய அழகிய பொன், முத்து ஆகிய வற்றால் செய்த வளையலணிந்த காந்தள் பூப்போன்ற கையினால் அழைத்து உறவு புரியும் அழகுமிக்க பூக்கள் நிறைந்த நீர்த்துறையோடு கூடிய வராக மாநதியில் நீராடுவாயாக என வேண்டப் பெறுகின்றாள். இக் கருத்துகள் அமைந்த பாடல் வருமாறு:

"ஏந்திதழ் முறுக்கவிழ்ந் தூறுதேன் பில்குவா
ரிசமென்னு மாமுகமலர்ந்
திளநிலாக் கதிர்கண் டுவந்திடு கருங்குவளை
யெனுமைக்க ணாரநோக்கி

நீந்துதற் கரியபுன லிடையுலவு பல்பறவை
நீளோதை யாமின்சொலால்
நித்தியகல் லியாணபர தேவியே வருகவென
நேயமுட னேயுபசரித்

"தாந்துதிகள் செய்துவெண் ணித்திலச் சங்கங்க
ளார்ந்தெழுந் தெறிதிரையெனு
மம்பொன் மணித்தொடிக் காந்தட் கரங்கொண்
டழைத்துறவு புரியுமெழிலார்

பூந்துறை குலாவிய வராகமா நதிமேவு
புதியநீ ராடியருளே
புகழ்மிகுங் கௌரிதிரி புரசவுந் திரிநிமலி
புதியநீ ராடியருளே" (4)

இப்பாடலில் விருந்தோம்பும் குணம் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது, தாமரை மலர்ந்திருப்பது தூரத்தே கண்ட விருந்தினரை மலர்ந்த முகத்தோடு பார்த்தல் போன்றும் குவளை மலர்கள் அதனால் நண்ணியவழி அன்புகனியப் பார்த்தல் போன்றும் பறவைகள் ஒலி வீட்டில் அடைந்த விருந்தினரைக் கண்டு இன்சொல் பேசுவது போன்றும் இருப்பதாக உரைக்கப் பெற்றுள்ளன. இங்கு,

"முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்" (5)

என்னும் குறளும்,

"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து" (6)

என்னும் குறளும் ஒத்து காணத் தக்கவை.

பாகம் பிரியா வம்மைப் பிள்ளைத்தமிழின் தாலப் பருவத்தில் குழததையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியினுடைய மழலையின் சிறப்பைக் கூறும்பொழுது,

"காதுக் கினிதுன் மழலையஞ்சொல்" 7

எனக் கூறப்பெற்றுள்ளது. இங்கு,

"குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்

மழலைச்சொல் கேளா தவர்"8

என்னும் குறள் ஒப்புநோக்கத் தக்கது.

திருக்குறளையும் குறட்கருத்துக்களையும் பிள்ளைத்தமிழ் நூலாசிரியர்கள் எடுத்தாண்டுள்ளதோடு திருக்குறளின் சொற்களையும் திருக்குறளுக்கு உரையாசிரியர்கள் வரைந்துள்ள ஏற்புடைப் பொருளையும் எடுத்தாண்டு இன்புற்றுள்ளனர்.

"காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்

பேதைமை யெல்லாம் தரும்"9

என்று வரும் குறளிலுள்ள காதன்மை என்னும் அரிய சொல்லுக்குப் பரிதியார், 'வெகுளி' என்றும் பரிமேலழகர் 'அன்புடைமை' என்றும் உரை வரைந்துள்ளார். முத்துக்குமார சாமி பிள்ளைத்தமிழாசிரியர் 'காதன்மை' என்னும் சொல்லைக் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனைச் சிறுதேர் உருட்டி விளையாட வேண்டும் போது,

"மெய்வைத்த காதன்மை யரமகளிர் பேராய

வெள்ளந் திளைத்தாடி"10

என்று பாடியுள்ளார். "கற்பகக் காட்டில் தோன்றிப் பிரியாத உண்மையாகிய அன்பினையுடைய தெய்வப்பெண்களது பெரிதாகிய ஆய வெள்ளம் படிந்து ஆடி" என்பதே அவ்வடியின் பொருளாகும். இங்கே காதன்மை என்னும் சொல் அன்புடைமை என்னும் பொருளில் அமைந்துள்ளது.

திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழின் வருகைப்

பருவத்தில்,

"பெருகா விழியும் உடையேனைப்
பிறவிக் கடலில் விழாமற்
பேணியெடுத்திங் கெனதுள்ளம்
பிரியா விரிஞ்சைப் பதிவாழு
முருகா வருக ......"11

என்று பாடப்பெற்றுள்ளது. மேலும் சிறுபறைப் பருவத்தில்,

"இளைத்திடு பவவினை குளித்திடும் அடியரை
யெடுத்திடும் ஒருபுணையாய்"12

என்று பாடப் பெற்றுள்ளது. இவ்வடிகளில்,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்"13

என்னும் குறளின் கருத்து பொதிந்துள்ளது புலனாகின்றது.

அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில் பாலி ஆற்றின் வெள்ளப்பெருக்கு,

"அருநிலனிடத் தொருவர் தினையளவை யாற்றிடினும்
அருள் நிலைபெறு வாழ்க்கையோ(டு)
அழியாத திருவுமெய்தி ராங்கவர்க் குதவுநின்
னடியவரை ஒத்து"14

என்று உரைக்கப் பெற்றுள்ளது. இவ்வடிகளில்,

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன் தெரிவார்"15

என்னும் குறட்கருத்து எடுத்தாளப் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது.

இராமலிங்க சுவாமிகள் கருங்குழிக்கு வந்து தமது

இளைய சோதரர் பரசுராம பிள்ளைக்கு நீர்க்கடனையாற்றிய அந்நாளில் தண்ணீரால் விளக்கு எரித்துக் காட்டினர். பின் சென்னையிலுள்ள நண்பருள் சிலர் தாமிருக்கும் இடம் வருமாறு வேண்ட, "மெய் விளக்கே விளக்கல்லால் வேறு விளக்கு இல்லை என்றார் மேலோர்" என்னும் பாடலை வரைந்து விடுத்து அகமுக வழியே தாம் பெற்ற அருள் நிலையுடைமையை வெளிப்படுத்தினர். இக்கருத்துகளை இராமலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழ்,

பணிவுடைய மெய்விளக் கேவிளக் கென்பதது
பார்க்கில் தண்ணீர் விளக்காய்ப்
பாங்காக வேற்கு மருளாட்சிபெற் றிமதனைப்
பாடுமக னைக் காக்கவே"

என்று உணர்த்துகின்றது. இங்கே,

"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு" 16

என்னும் குறட்கருத்து இடம் பெற்றுள்ளது.

சேக்கிழார் பிள்ளைத்தமிழின் காப்புப் பருவத்தில்

" . . . . . . . . அளவாம
கத்துவம் அடைந்திருந்தும்
அலைமலி கணங்கன்ஒப் பேன்என் றுரைத்தருளி
யாம்பெருக் கத்துவேண்டும்
ஆன்றபணி வெறும்மொழிப் பொருள்தேற்று குன்றை
நகர்
ஆவியைக் காக்க என்றே"17

எனக் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனைக் காக்குமாறு வேண்டிப் பாடப்பெற்றுள்ள பாடலடிகளில்,

"பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு" 18

என்னும் குறட்கருத்து இடம் பெற்றுள்ளது.

இப்பிள்ளைத்தமிழின் தாலப்பருவத்தில் குன்றத்தூர் வளம்,

"களமர் மரான முட்டையினைக்
கதிர்நித் திலமென் றுளக் குவித்தோம்
கடையேம் மயங்கி எனநாணும்"

என்னும் அடிகளில் கூறப்பெற்றுள்ளது. வெய்யில் காயச் சென்ற அன்னங்கள் முத்துக்குவியலில் வீற்றிருப்பதைக் கண்ட உழவர்கள் அன்னத்தின் முட்டைகளை முத்துகள் என்று மயங்கி வாரிக்குவித்தனர் என்று தன் அறியாமையைப் பற்றி நொந்துகொண்டனர். இங்ஙனம் இரண்டுக்கும் உரிய வேறுபாட்டை,

புலியின்யா மறிவதிலை யறிவறி மகப்பேற்றி
னல்லபிற வாய்ப்போற்றியே" 23

என வரும் அடிகள்,

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற" 24

என்னும் குறட்கருத்துடன் ஒத்துக்காணத்தக்கவை,

சிவபிரான் குழந்தையின் மழலைச்சொல் கேளாதவர். ஆகையால் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் யாழினையும், ஆனாய நாயனார் குழலினையும் இனிதென மகிழ்ந்து வழங்கினார். அம்மையாரோ அவ்வாறன்றி மக்கள் மழலை உவந்து யாழ்பழித்தமொழி என்று பேர் பெற்றவர். மேலும் தாமே குழவியாக வந்து வலைச்சேரி, மலைச்சேரிகளிலே

மழலைபேசி மகிழ்வூட்டினார் என்னும் கருத்து முத்தப்பருவத்தில் அமைந்துள்ளது. 25 இங்கு,

> "குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
> மழலைச்சொல் கேளாதவர்" 26

என்னும் குறள்கருத்து குறிப்பிடத் தக்கது.

நீராடற் பருவத்தில் கடலினின்று மேகமாகி மலையி னின்று மணி, சந்தனம், தழை, அரிசி, பொன் இவற்றைக் கொண்டு உலகிற்குப் போகம் கொடுக்க இந்நீத்தமாகிப் புறப்படுகின்றது, உலகு புகுமுன் பாட்டுடைத் தலைவராய் பணிந்து நின்றது. இது எல்லா உயிர்க்கும் பயனைப் பாராது உதவுதலால் இதன் நன்மை கடலினும் பெரியதாகும். ஆதலின் இதிலே நீராடி அருள்க எனப் பாட்டுடைத் தலைவியை வேண்டுகின்றாள். 27 இங்கு, உணராமைக்குக் காரணம் அக் களமரது கட்குடியே ஆகும் என்பதையும் உடன்கூட்டிக் கள் குடியினால் அறிவு மயங்கும் என்பதையும் இங்கு உணர முடிகின்றது.

> "உட்கப் படாஅர் ஒளிஇழப்பர் எஞ்ஞான்றும்
> கள்காதல் கொண்டொழுகு வார்"19

என்னும் திருக்குறள் ஈண்டு ஒத்துக்காணத் தக்கது.

சப்பாணிப் பருவத்தில் குன்றத்தூரின் மழைவளம் கூறும்பொழுது,

> "..... தவி முன்பலவும்
> வண்பூசை யொடுசிறப்பு
> மாறாது பொலியமழை வளனும்"20

என்று கூறப் பெற்றுள்ளது. வேளாளர்தம் வேளாண்மை

செய்வதற்கு மழை இன்றியமையாதது. அம்மழை இன்றேல் வேளாளர் தம்முடைய கடமைகளைச் செய்ய வியலாது. தேவாலயங்களில் நித்திய நைமித்திக பூசையும் நடைபெறாது. ஈண்டு,

"சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"21

என்னும் திருக்குறள் கருத்து ஒத்துக்காணத் தக்கது. சேக்கிழார் பிள்ளைத்தமிழில் இவ்வாறே இன்னும் பல பாடல் களில் திருக்குறள் கருத்துகள் இடம் பெற்றுள்ளன.22

திருப்புக்கொளியூர் அவிநாசிப் பெருங்கருணையம்மைப் பிள்ளைத்தமிழின் சப்பாணிப் பருவத்தில்,

"குவிகின்ற வஞ்சப் புலன்கொன்றை செம்மனப்
பெருநிலைக் குறியாளர்தம்
கொற்றுமுறு மறிவினிற் றிகழறிவு நீயெனுங்
கொள்கையாற் பெறுமவற்றிற்

"பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது" 28

என்னும் குறள்கருத்து இணைத்துக் காணத்தக்கது.

சிவஞான பாலைய தேசிகர் பிள்ளைத்தமிழின் தாலப் பருவத்தில்,

ஆற்றற் பெரியோர் ஆற்றுவார்க்கு
ஆற்றல் பசியை யாற்றுதலென்
றறைந்த மொழியைக் கடந்துசிவ
னடியா ரெனுநல் விருந்தழைத்து"

என்னும் அடிகளில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும்

பாட்டுடைத் தலைவரிடம் பிறர்பசியைப் போக்கும் திறனும். உள்ளது; தாமும் பசியாதிருந்து பிறர்பசியையும் தீர்ப்பார். இல்லறத்தாரே அன்றித் துறவறத்தாரிலும் உண்டு எனப் பாட்டுடைத் தலைவரது தவத்தன்மையும் கொடைப் பண்பும் எடுத்துரைக்கப் பெறுகின்றன. இங்கே,

"ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்" 29

என்னும் குறட்கருத்து ஒப்பிடத்தக்கது.

அன்றியும் முத்தப் பருவத்தில் பாட்டுடைத் தலைவனின் கொடைச் சிறப்பு,

இணையில் திருவள் ளுவப்பெயர்கொள்
எம்மான் கரப்பார் இரவன்மின்
என்ன இரந்தும் இரத்தக்கார்க்
காணின் இரக்க என்றுரைத்தும்

உணர்வு தெருள்வித் தமைகொண்டே
யொருவர் தமையும் இவ்வளவும்
ஒன்றும் இரந்தாம் அல்லமியாம்
உன்னை யின்றிங் கிரன்கின்றாம்

அணையும் அவர்தம் முகக்குறிப்பான்
அறிந்தங் கவர்தம் அகம் விழைந்த
அனைத்தும் அமுதம் உறழீரம்
அளைந்த இன்சொ லுடனளிக்கு

முணையில் கொடைச்சிந் தாமணியே
முகிலே முத்தந் தருகவே
முருகன் மயிலைச் சிவஞான
முனிவா! முத்தந் தருகவே!

என எடுத்துரைக்கப் பெற்றுள்ளது. இப்பாடலடிகளின் கருத்து களோடு,

"இரப்பன் இரப்பாரை யெல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று" 30
"இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று" 31
"அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்து
"இன்சொல னாகப் பெறின்" 32

என்னும் குறட்பாக்களின் கருத்துகள் இணைத்துக் காணத் தக்கவை.

மயூரகிரிச் சண்முகநாதர் பிள்ளைத்தமிழின் சிற்றிற் பருவத்தில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவரின் திருப்பாதங்களின் சிறப்பைக் கூறுமுகத்தான்,

"மோப்பக் குழையு மனிச்சமலர்
முனிவர்மனத்தி லூறநினைத்து
முயங்கக் குழையு முனதுபத
முளரிக்கிணையென் பாரறியார்" 33

என்னும் அடிகள் இடம்பெற்றுள்ளன. இங்கே,

"மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து 34

என்னும் குறள்கருத்து ஒத்துக்காணக் தக்கது.

காவைமுருகன் பிள்ளைத்தமிழின் தாலப்பருவத்தில்
"அழியட்டும் மானுடர்க்கு ஆகாத தாய் எழுந்து
அக்கிரம வழியில் நின்றே
ஆளும் அரசாட்சியும் அநியாய் முறைகளும்

அடிவேர் அறுந்து கடிதில்'' 35

என்று பாட்டுடைத் தலைவனிடம் வேண்டப்பெறுகிறது. இங்கு,

"அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.'' 36

என்னும் குறட்கருது நினைவுக்கு வருகின்றது.

மறைமலையடிகள் பிள்ளைத்தமிழில்,

"வருவா யெனுஞ்சீர் மனையாள்வாய்
வடிவாய் மெதுவா யிதழ்சேர்த்து
வரிவாய்ச் சுடர்பல் லிடை யூறும்
வளவாய்ச் சுவைநீர் பருகியவாய்" 37

என்று வரும் முத்தப்பருவப் பாடலடியோடு,

"பாலொடு தேன்கலந்தற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர்" 38

என்னும் குறள் ஒப்புநோக்கத் தக்கது.

தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள் பிள்ளைத் தமிழில்,

பூர்த்தியிசையுஞ் சாவாத புதுமை மருந்தா யினும்விருந்து
புறத்ததாத்தா னகத்தினுக்குட் புசித்தல் வேண்டற்
பாற்றன்றென்று
ஆர்த்திபொலிவள் ளுவப்பெருமான் அறையும் மறையின்
நிறைமொழிபோல்
அன்பற்றவனா யினுங்கருணை யமைசந்நிதிசார்ந்துன்
வடிவை
நேர்த்திபெறக்கண்டு இச்சைகொடு நின்றேன் சிவப்பி
ரகாசனென
நிலவுதிருநா மம்பொருந்தும் நிறைவார் ஞானா

னந்தகுரு
மூர்த்தியிடம்பெற் றிடுங்கனிவாய் முத்தந்தருக முத்தமே"39

எனவரும் முத்தப் பருவப் பாடலில்,

"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று"40

என்னும் குறளை விளக்கிக் குழந்தையாகப் பாவித்துப் பாடப் பெறும் பாட்டுடைத் தலைவரது திருவருட் செல்வத்தை அந் நூலாசிரியர் அழகாக இரந்து நிற்கும் திறம் போற்றுதற் குரியது.

இப்பிள்ளைத்தமிழின் செங்கீரைப் பருவத்தில்,

"எழுபிறப் புந்திய வானவவை தீண்டிடா
தென்தமிழ் வேதவுரையால்
இசையுமப் போதுமிப் போதுமிப் போதுமொப்
பேதுமற் றுப்பழியிலா

முழுமைதோ யறிவறிந் திட்டமாக வாமுன்னை
முன்னைமா தவப்பலத்தான்
முதிர்பூர ணச்சசிக் கதிர்போன்மெ னப்பெற்று
முளரியங் கைத்தலத்தில்

தழுவிமார் போடணைத் துச்சிமோந் திருகண்கள்
தம்மிலொற் றிடுநாளினுஞ்
சான்றோ னெனக்கேட் டுளங்களிரு நற்றாய்
தனப்பால ருந்தியதிலார்
செழுமைசால் சாரமிடு செய்கையிற் பேரையிலொர்
செங்கீரை யாடியருளே"41

என்னும் பாடலில்,

"எழுபிறப்பும் தீயவை தீண்டா பழி பிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்"42
ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோனெனக் கேட்ட தாய்"43

என்னும் குறட்கருத்துகளும்,

தந்தைமக னுக்காற்று நன்றியவை யத்தின்முன்
தானுறச் செயலென்னவே
சாற்றரும றைக்குமிக மேற்றமைத் தேற்றமார்
சத்வித்தி யாசன் மார்க்க
விந்தைபெறு சங்கத்தி னிசைநாய கத்தருள
மிசைநாய கத்தலைமையாய்
மெய்க்கிசைத் திடுபெயருண் மைக்கிசைத் திசைலிங்க
மேனியுடன் மாநிலமுளார்
முந்தைமா தவப்பலத் தாற்பரவு கோயிலார்
மூர்த்தியாஞ் சீர்த்தி வாய்ந்து
முன்னேற்ற மார்தந்தை யென்னோற்ற னன்கொலெனு
முறையென்று மென்றிலவிரச்
சிந்தையப் பாலிசைத் திடவருமொர் செல்வனே"44

எனவரும் பாடலடிகளில்,

"தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி இருப்பச் செயல்"45
"மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல்"46

எனவரும் குறட்கருத்துகள் இடம் பெற்றுள்ளன. இக்கருத்து களுக்குச் சான்றாய்ப் பாட்டுடைத் தலைவர் திகழ்கின்றார்.

இவ்வாறு திருக்குறளும் அதனுடைய கருத்துகளும் பிள்ளைத்தமிழ் நூல்களில் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது. இதனால் பிள்ளைத்தமிழ் நூல்களின் இலக்கிய மதிப்பு உயர்ந்திலங்குவதைக் காணமுடிகின்றது. குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவன் அல்லது தலைவியிடம் சப்பாணி கொட்டுக, செங்கீரை ஆடுக எனத் தாயர் அவர்கள் தம் செயல் புரியுமாறு வேண்டும் பொழுதும் பாட்டுடைத் தலைவர்களின் ஆற்றல், கொடைச் சிறப்பு, திருப்பாதங்களின் மகிமை, மழலைமொழியின் இனிமை முதலியவற்றை எடுத்துரைக்கும் பொழுதும் திருக்குறள் கருத்துகள் இடம்பெற்று அவற்றிற்கு வலுவூட்டுவதை அறிய முடிகின்றது. மேலும் பாட்டுடைத் தலைவரைக் காக்குமாறு கடவுளிடம் வேண்டும் பொழுதும் பாட்டுடைத் தலைவரின் தாயரும் பிறரும் அருள் வேண்டி இரந்து நிற்கும் பொழுதும் பாட்டுடைத் தலைவர்களின் அற்புதச் செயல்களை விளக்கும் பொழுதும் திருக்குறள் கருத்துகள் இடம்பெற்று அவற்றிற்கு வலுவும் பொலிவும் ஊட்டுவதைக் காணமுடிகின்றது. இவ்வகையில் பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் திருக்குறளின் கருத்துகளைத் தன்னகத்தே கொண்டு இலக்கிய மதிப்புடன் விளங்குகின்றன.

## அடிக்குறிப்புகள்

(1) பா. எண் : 1
(2) திருக்குறள் : 65
(3) மேற்படி : 66
(4) நீராடற்பருவம் : 4
(5) திருக்குறள் : 93
(6) மேற்படி : 90
(7) தாலப்பருவம் : 8
(8) திருக்குறள் : 66

(9) மேற்படி : 507
(10) சிறுதேர்ப் பருவம் : 5
(11) பா. எண் : 2
(12) மேற்படி : 9
(13) குறள் : 10
(14) பா. எண். : 86
(15) குறள் : 104
(16) மேற்படி : 299
(17) பா. எண் : 2
(18) திருக்குறள் : 963
(19) மேற்படி : 921
(20) பா. எண் : 2
(21) திருக்குறள் : 18
(22) பா. எண்கள் : சப்பாணி : 5, 8 முத்த : 1, 2, 4, 6,
வாரானை : 3, 5, 8, அம்புலி : 1, 7, 10,
சிற்றில் : 4, 9சிறுபறை : 2 சிறுதேர் : 3, 4, 5
(23) பா. எண் : 5
(24) திருக்குறள் : 61
(25) பா. எண் : 8
(26) திருக்குறள் : 68
(27) பா. எண் : 7
(28) திருக்குறள் : 103
(29) மேற்படி : 225
(30) மேற்படி : 1067
(31) மேற்படி : 1051
(32) மேற்படி : 92
(33) பா. எண் : 9
(34) திருக்குறள் : 90

(35) பா. எண் : 16

(36) திருக்குறள் : 555

(37) பா. எண் : 3

(38) திருக்குறள் : 1121

(39) பா. எண்: 4

(40) திருக்குறள் : 82

(41) பா. எண் : 1

(42) திருக்குறள் : 62

(43) மேற்படி : 69

(44) பா. எண் : 2

(45) திருக்குறள் : 67

(46) மேற்படி : 70

# (16) வடிவம்

கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றுப்பெற்ற உணர்வு அனுபவத்தோடு இயைந்து கற்பனையோடு கலந்து பிறரும் உணரத்தக்க மொழி வடிவம் பெறும்போது இலக்கியமாகின்றது. அவ்விலக்கியம் செய்யுள் நடையாலும் அமையலாம்; உரை நடையாலும் அமையலாம். இவ்விரண்டினுள் பிள்ளைத்தமிழ் நூல்கள் செய்யுள் ந டை யா ல் அமைந்திலங்குகின்றன. பாவகையில் அமைந்திலங்கும் இலக்கியங்கள் சுவையுணர்வு களின் வேறுபாட்டிற்கேற்ப ஒலிநயம் பெற்றுத்திகழும்; தொடை நலம் பெற்றுச் சிறக்கும். இவையெல்லாம் இங்கு வடிவம் என்னும் தலைப்பில் ஆராயப் பெறுகின்றன.

'பா' என்பதற்குப் பேராசிரியர் "ஒருவன் சேட் புலத் திருந்த காலத்தும் எழுத்தும் சொல்லும் தெரியாமல் பாடம் ஓதுங்கால் அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுள் என்று உணர்வதற்கு ஏதுவாகிப் பரந்து பட்டுச் செல்வதோர் ஓசை" 1 என்று விளக்கம் தந்துள்ளார். எனவே பாட்டிற்கு ஓசைநயம் மிகமிக இன்றியமையாததாகும். "வெறுஞ் சொற்களால் கருத்துகளை மட்டுமே விளக்கிக் காட்டமுடியும். புலவரின் உணர்ச்சியனுபவத்தை விளக்கும் ஆற்றல் அந்தச் சொற்களுக்கு இல்லை. அத்தகைய சொற் களின் வாயிலாக உணர்ச்சி புலப்படும்பொழுது ஒலிநயம் வந்து உதவுகிறது. ஒலிநயம் இல்லாமல் புலவரின் உணர்ச்சியனுபவம் பாட்டின் சொற்களில் வாழ வழி இல்லை." 2

"தசைந்திடு கொங்கை இரண்டல் எனவுரை
தருதிரு மார்பாடத்
தாய்வரு கென்பவர் பேதைமை கண்டு
ததும்புபு னகையாட 3

"அமரர்க் கதிபதி வெளிறக் களிறெதிர்

பிளிறக் குளிறியிடா
அண்ட மிசைப்பொலி கொண்டல் உகைத்திடும்
அமரிற் றமரினொடும்" 4

"குருமணி வெயில்விட மரகத நிழல்விரி
குன்றே நின்றூதும்" 5

எனவரும் பாடலடிகளில் இனிய சந்தம் முறையே பின்வருமாறு அமைந்திருக்கின்றது :

"தனந்தன தன்ன தனந்தன தனதன
தனதன தானான
தானன தன்னை தானன தன்ன
தனன்னன தனனான"

"தன்ன தனதன தன்ன தனதன
தனன தனதனனா
தன்ன தனந்தன தன்ன தனந்தன
தனன தனதனன"

"தனதன தனந்தன தனதன தனந்தன
தன்னா தன் னான"

"ஒருபு றத்துமர கதமி மைப்பவொளிர்
மாமேரு மற்றொரு மேருவைச் சாய்த்தென"6

"குழைய டர்ந்துவடி கணைது ரந்துசெறி
குமிழ்ம றிந்தவிழி நவ்வியைக் கோட்டொடு"7

"கடாமுகிழ் கைக்கதக் கிம்ம ரிக் கோட்டொரு
கராசல மிட்டமெய்க் கஞ்சுகிக்கேற்ப வொர்8

எனவரும் பாடலடிகள் முறையே,

"தனன தந்ததன தனன தத்ததன
தானான தத்தன தானை தாத்தன"
"தனன தந்ததன தனன தந்ததன
தனன தந்ததன தய்யனத் தாத்தன"
"தனாதன தத்தனத் தந்தனத் தாத்தன"
எனப் பலசந்தக் குழிப்புகளைப் பெற்று வந்துள்ளன. 9

"இந்திர னுஞ்சசி யும்பர வும்படி
யிங்கே வந்தார் காண்
இந்திரை யுங்கர சங்கமு குந்தனும்
இந்தா வந்தார் பார்" 10

"கலைதெரி புகலி வளமுற மருவு
கவுணிய வருக வருகவே
கருணையின் உரிமை அடியவர் கொடிய
கலிகெட வருக வருகவே" 11

"கூராடும் வேல்விழிகள் குழையில் ஆடக்குழைகள்
கொண்டாடு தோளில்ஆடக்
குறுவியர்வு திருநுதற் சிலையில் ஆடச்சுட்டி
கூடத்து வண்டாடவே" 12

என வரும் பாடலடிகளில் முறையே,

"தந்தன தந்தன தந்தன தந்தன
தன்னா தன்னானா
தந்தன தந்தன தந்தன தந்தன
தன்னா தன்னா னா"

"தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதனா
தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதனா"

"தானான தன்னனன்ன தனன தானதனன
தன்னான தானதான
தனதனன்ன தனதன தனன தானதன்ன
தானன்ன தன் னாதனா

என்னும் சந்தங்கள் அமைந்து இயற்கையான இனிய ஒலி நயத்தைக் கற்போருக்கு வழங்குகின்றன.

ஆசிரியர்க்கு ஆசிரியர் ஒலிநயத்தில் வேறுபடுகின்றனர். ஒரே பருவமாக இருந்தாலும் ஒலிநயத்தில் வேறுபாடு காணமுடிகின்றது. சிவஞான சுவாமிகள் பாடிய திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழிலுள்ள அம்புலிப் பருவப் பாடலடியையும், குமரகுருபரர் இயற்றிய முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழிலுள்ள அம்புலிப்பருவப் பாடலடியையும் பகழிக்கூத்தர் அருளிய திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழிலுள்ள அம்புலிப் பருவப்பாடலடியையும் முறையே எடுத்துக்கொண்டு இங்கு ஒலிநயம் ஆராய்ப் பெறுகின்றது.

"தெருளாத தக்கனார் வேள்வியை அழித்தும்பர்
சென்னியை உருட்டிநினையுந்
தேய்த்தசய வீரனும் இவன்றம்பி யென்பதுந்
திருமார்பன் அவமதிப்ப"13

"தனதான தந்தான தாந்தன தனந்தன்ன

தன்னா தனந்தனதன
தத்தனன தானன தனந்தன தந்தன
தனதான தனதனன்ன''

''பாயிருட் போதத் திருட்டன்றி அகவிருட்
படலங் கிழிப்பதுணராய்
பனிவிசும் பிற்பொலிவ தொன்றலாற் புவனப்
பரப்பெலாம் பொலிவ தோராய்'' 14

தானன தான தனந்தன்ன தனதன
தனன தனந்தனதனா
தனதன தந்தனன தன்தன தனன
தனந்தனா தனதனனா''

''வெறியார் இலைத்தொடைத் தக்கனழல் வேள்வியை
வெகுண்டு பகல் பல்லுகுத்து
வெள்ளிவிழி யைக்கெடுத்தயிரா வதப்பாகன்
வேறுருக் கொடுபறக்க'' 15

''தனனா தனந்தன தத்தன தானன
தனந்தனன தன்னனன்ன
தந்தனன தாந்தன தனனா தனந்தான
தானன தனதனன்ன''

இம்மூன்று பாடலடிகளும் பன்னிருசீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அமைந்திருந்தாலும் ஒலி நயத்தில் வேறுபடுதல் காணலாம்.

அம்புலிப் பருவப் பாடல்கள் சாம பேத தான தண்டம் என்னும் நான்கு உபாயங்களால் பாடப்பெற்றுள்ளன. இந் நான்கு வகை உபாயங்களும் வேறுபட்ட உணர்வுகளால்

பாடப்பெறுபவை. அவ்வாறு பாடும்பொழுது ஒலிநயம் வேறு படுகின்றதா என்பது அடுத்து ஆராயப் பெறுகின்றது.

"மண்டலம் போற்றுருவம் அமுதமய மாய்முழு
மதிக்கடவு ளென வருதலால்
வானாறு தலைமடுக் கப்பொங்கும் ஆனந்த
மாக்கடல் இடைத்தோன்றலால்"16

"தன்னன தன்ன னன தனதனன தானன
தனந்தன தனதனதன
தானான தனதன தந்தன்ன தானன்ன
தாந்தன தனந்தன் னன"

"கங்கைமுடி யடிகட்கொர் கண்ணா யிருத்தியக்
கண்ணினுள் மணியிவன்காண்
கலைகள்சில நிறைதிபின் குறைதியிவ னென்று
மொண்
கலைமுழுதும் நிறைய நின்றான்" 17

"தந்தனன தனதன்ன தன்னா தனந்தன
தன்னன தனதனன்னா
தனதன்னன தனதன தனதனன தன்னன
தனதனன தனதனன்னா"

"தருமன்னு பொன்னுலகும் மண்ணுலகு மொக்கத்
தலைத்தலை மயங்கத்தொகும்
சந்நிதி யடைந்வதர்கள் பையுள்நோய் முற்றும்
தவிர்ந்தக மகிழ்ந்துதவிரா"18

தனதன்ன தந்தனன தந்தனன தன்ன
தனந்தன தனன் னந்தன
தன்ன தனந்தனன்ன தனன்ன தன்ன
தனந்தன தனந்தன தனா"

"நெட்டுடற் பைங்கட் கரும்பேய்கள் செம்மயிர்
நிரைத்தூணம் வீக்கி ஆர்த்து
நிற்குங் குறட்பூத மொன்றினை விடுத்துடலின்
நெடியபழு என்பு நெரிய"

"தத்தன தன்ன தனந்தன்ன தன்ன
தனத்தான தத்த னாத்த
தத்த தனத்தான தன்னன தனத்தனன
தனதனன தந்தனதன"19

எனவரும் பாடலடிகள் முறையே சாம பேத தான தண்டம் என்னும் நான்குவகை உபாயங்களால் அமைந்தவை. சாமத்தில் குறில் முடிவுகளும் பேதத்தில் நெடில் முடிவுகளும் தண்டத்தில் வல்லொற்றுகளும் மிக்கு வந்து உணர்வு வேறு பாட்டை ஓசை வேறுபாட்டால் உணர்த்துதலை அறிய முடிகின்றது.

இயற்கையான இந்த ஒலிநயத்தை வளர்த்து வாய்பாடுகளாக்கி ஒருவகைச் செயற்கை அமைப்பைத் தந்து அதற்கு யாப்பு எனப் பெயரிட்டனர் முன்னோர். யாப்பில் விளங்கும் எதுகை, மோனை முதலிய தொடைகளால் ஒலிநயம் சிறந்து விளங்கும். இவ்வகை ஒலிநயத்தை நாற்சீர் கொண்ட அளவடிகளிலேயே நன்கு காணமுடியும் என்பர் யாப்பருங்கலக்காரிகை உரையாசிரியர். என்றாலும் ஆசிரிய விருத்தத்தால் அமைந்த

பிள்ளைத்தமிழ்ப் பாடல்களில் இவ்வகை ஒலிநயம் அமைந்துள்ளது.

இங்கே சான்றுக்கு மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ் மட்டும் எடுத்துக் கொள்ளப் பெற்றுள்ளது.

"பேரா தரிக்கும் அடியவர்தம்
பிறப்பை ஒழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமா னென்னும் பேராளா

சேரா நிருதர் குலகாலா
சேவற் கொடியாய் திருச்செந்தூர்த்
தேவா தேவர் சிறைமீட்ட
செல்வா என்றுன் திருமுகத்தைப்

பாரா முகிழ்ந்து முலைத்தாயர்
பரவிப் புகழ்ந்து விருப்புடனப்
பாவா வாவென் றுனைப் போற்றப்
பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்

வாரா திருக்க வழக்குண்டோ
வடிவேல் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே"20

என்னும் பாடலில் பேரா, சேரா, பாரா, வாரா என ஒவ்வோரடியிலும் இரண்டாம் எழுத்து ஒன்றி வந்து எதுகை அமைந்து சிறந்த ஒலிநயம் பயப்பக் காணலாம்.

அன்றியும் இப்பிள்ளைத்தமிழில்,

"கரைக்கும் கடாமிரு கவுட்குட முடைந்தூற்று"

எனக் கூழை மோனையும்,

"இரைத்துத் திரைத்து நுரைத்தொரு"

"மூதண்ட வேதண்ட கோதண்டமொடு"

எனக் கூழை எதுகையும்,

"செங்கயல் கிடக்கும் கருங்கட் பசுந்தோகை'

என்று கூழை முரணும்,

"மூலத் தலத்து முளைந்த முழு முதலே முத்தம் தருகவே"21

என்று முற்று மோனையும்,

"வாளிகள் கூளிகள் காளிகம் ஞாளியிலாளியின"

என்று முற்று எதுகையும்,

"செஞ்சூட்டு வெள்ளோதிமம்"

"வெண்டியலும் கரும்புயலும்"

என இணை முரனும்

"கடகளி றுதவுக பாய்மிசைப் போர்த்தவள்
கவிகுவி துறுகலின் வாரியைத் தூர்த்தவள்
கடல்வயி றெரிய வொள் வேலினைப் பார்த்தவள்
கடிகமழ் தருமலர் தார்முடிச் சேர்த்தவள்
இடியுக அடலரி ஏறுகைத் தார்த்தவள்"22

என அடி இயைபுத் தொடையும் வந்து ஒலிநயம் சிறக்கக் காணலாம்.

# அடிக்குறிப்புகள்

(1) தொல். செய். பேரா. உரை, நூற்பா : 1

(2) வரதராசனார், டாக்டர் மு, இலக்கியத்திறன், ப. 189

(3) மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், பா. எண் : 19

(4) மேலது : 30

(5) மேலது : 20

(6) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், பா. எண் : 3

(7) மேலது : 4

(8) மேலது : 8

(9) டாக்டர் உ. வே. சாமிநாதையர், குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு, ஆராய்ச்சி முன்னுரை

(10) திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ், பா. எண் :17

(11) மேலது : 61

(12) திருமலை பிள்ளைத்தமிழ், பா. எண் : 12

(13) பா. எண் : 4

(14) மேலது : 4

(15) மேலது : 4

(16) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், அம்புலிப் பருவம் : 1

(17) மேலது : 3

(18) மேலது : 5

(19) மேலது : 7

(20) திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ், பா. எண் 60

(21) பா. எண் : 43

(22) பா. எண் : 11

# (17) கற்பனை

கலைகளில் முதன்மையானது. கவிதை உண்மையைப் பேருணர்ச்சியுடன் இதயத்திற்கு உயிர்த்துடிப்புக் குன்றா வகையில் எடுத்துச் சொல்வதாகவும் அறிவின் முதலும் முடிவுமாக இருப்பதாகவும் அறிவு உலகத்தின் மூச்சாகவும் நயமிகு உயிர்த்துடிப்பாகவும் விளங்குவதே கவிதையாகும் 1 இக் கவிதைக்கு உணர்ச்சி,கருத்து,கற்பனை,வடிவம் ஆகிய நான்கும் அடிப்படைக் கூறுகளாகும். இவற்றுள் கவிதைக்குரிய அடிப்படை உணர்வுக்கும் அழகிய மொழி வடிவுக்கும் இடையே அமைந்ததாய் இன்றியமையாதஉறுப்பாய் உள்ளது கற்பனையே ஆகும். அதனால்தான் கற்பனையின் வெளிப்பாடே கவிதை என்பர்.2 உணர்ச்சியின் வடிவமாக விளங்கும் கவிஞன் தான் உணர்ந்தவற்றையும், கண்டவற்றையும் கருதியவற்றையும் கற்பார் உள்ளம் ஏற்கும் வண்ணம் மாற்றியும் திருத்தியும் புனைந்துரைக்கின்றான். இப்புனைந்துரைத்தலே இலக்கிய உலகில் கற்பனை ஆகும்.

கற்பனை காலத்தையும் இடத்தையும் கடந்தது; மனிதனுடைய அகக் கண்ணிற்கும் அகச்செவிக்கும் விருந்து அளிப்பது உள்பொருளும் இல்பொருளும் பருப்பொருளும், நுண்பொருளும், கற்பனைக்கு நிலைக்களன்களாக அமைகின்றன. இவ்வாறாகக் கற்பனை கவிதைக்கு எழிலையும் ஏற்றத்தையும் பொலிவையும் வலுவையும் அளிக்கின்றது. 3 இதைக் கருத்தில் கொண்டே "உயர்ந்த உணர்ச்சிகள் ஊற்றெடுப்பதற்குரிய சிறந்த நிலைக்களன்களைக் கற்பனை மூலம் அமைத்துத் தருவதே கவிதை" என்பர் அறிஞர். 4

கால்ரிட்ஜ் என்பவர் சிறப்பாகக் கற்பனையை முதன்மைக் கற்பனை, சார்புக் கற்பனை என இரண்டாகவும்5 வேர்ட்ஸ்வெர்த் என்பவர் ஆக்கக் கற்பனை, நினைவுக் கற்பனை என இரண்டாகவும்,6 கான்ட் என்னும் செர்மானிய

மெய்ப் பொருளறிஞர் ஆக்கக் கற்பனை, முருகியல் கற்பனை, கனைவுக் கற்பனை என மூன்றாகவும்[7] இரசுவின் என்பவர் சிந்தனை திறன்மிகு கறபனை, நுணுகி உள்நோக்கும் கற்பனை, இயைபுக் கற்பனை என மூன்றாகவும்[3] எலியட் என்பவர் காட்சிக் கற்பனை, செவிப் புலக் கற்பனை, என இரண்டாகவும்[9] சி. டி. வின்செஸ்டர் என்பவர் படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என மூன்றாகவும்[10] வகைப்படுத்துவர்.

இவ்வாறு திறனாய்வாளர்கள் பலரும் கற்பனைக் கூறுகள் குறித்துப் பல்வேறு வகையாகக் கூறியிருந்தாலும் வின்செஸ்டர் கூறுகின்ற மூவகைக் கற்பனைக் கூறுகளே திறனாய்வாளர்களால் பெரிதும் பின்பற்றப் பெறுகின்றன. தற்காலத்தார் கூறும் இந்த இலக்கிய உறுப்பாகிய கற்பனை நம் முன்னோர் கண்ட பொருளணிகளின் வடிவமே ஆகும். தொல்காப்பியர் வகுத்துள்ள உவமையியல், இடைக்காலத்தில் தோன்றியுள்ள தண்டியலங்காரம் பொருளணியியல் ஆகிய வற்றுள் நிலவுகின்ற அணி நலன்களையும் அவற்றோடு தற் காலத்தார் காணும் கற்பனை வகைகளையும் சைவசமயப் பிள்ளைத்தமிழ் நூல்களிவ் கண்டின்புற முடிகின்றது.

மங்கையர்க்கு அணிகலன்கள் அழகூட்டுவனபோல் கவிதைக்கு அழகூட்டுவன அணிகளாகும். உலகில் நாம் பேசும் பேச்சு மிகவும் இயல்பான முறையில் இருக்கின்றது. காப்பியத்திலோ அதே சொல்லும் பொருளும் தனித்த சிறந்த அழகுடன் காணப்படுகின்றன. ஆகையால் அணி என்பது உலக இயற்கையைத் தாண்டி, கவிகளால் மொழியில் அழகு பட ஏற்றப்படுவது எனலாம்.[11]

ஐ.ஏ. ரிச்சர்ட்ஸ் என்னும் அறிஞர் உவமை உருவகம் முதலியவற்றால் பொருள்களை உறவாக்கிக் காணுதலைக் கற்பனையின் இரண்டாம் பொருண்மையாகக் கூறுவர். 12 வேறுபட்ட இருபொருட்களை - நிலைகளை இணைத்துக் காண்பதால் அடிப்படையாக அமையும் கற்பனை ஆற்றல் இவ்வுவமை உருவகங்களின் வெளியீட்டு நிலையில் பொருந்துகின்றது. கற்பனையின் ஆழத்தை உயரத்தை உணர்ந்து படைக்கும்பொழுது அணி நயங்கள் உருவாகின்றன. 13 சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் உவமை, உருவகம் முதலிய அணிநலன்கள் அமைந்து கற்போர்க்கு இன்பம் தருகின்றன.

அணிகளில் தலைமையான அணி உவமை யணியே ஆகும். பாரதியார், அவ்வணியின் இயல்பையும் சிறப்பையும் "எல்லாவித அலங்காரங்களும் உவமையணியின் விஸ்தாரங்களைத் தவிர வேறொன்று மில்லை; உபமாலங்காரமே அலங்கார சாஸ்திரத்தின் பிராணன் என்று பழைய இலக்கணக் காரர்கள் கூறுகிறார்கள்" என்பர்.14 அப்பைய தீட்சிதர் என்னும் வடமொழி அறிஞரும்,

> "உவமை என்னும் தவலருங் கூத்தி
> பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
> காப்பிய அரங்கில் சவினுறத் தோன்றி
> யாப்பறி புலவர் இதயம்
> நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடிக்கும்மே"

என்று உவமையின் சிறப்பைக் கூறுவதாகப் பரிதிமாற்கலைஞர் கூறுவர். 15 இத்தகைய சிறப்புவாய்ந்த உவமைஅணி சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் ஆங்காங்கு இடம் பெற்றுள்ளன.

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழில் அரும் பாத்தை என்னும் ஊரின் வளத்தினை விளக்கும்பொழுது, வயலுக்கு நீர் செல்லும் அகன்ற நீர்க்கரையின்மீது பாக்கு மரத்தின் தலையிலிருந்து வீழ்ந்த காயைத் தாமரைபோன்ற கையில் அடைந்த கழற்காயைப் போல பூமாதேவியை தாங்க, சேல் மீன்கள் ஏதோ இரை விழுந்ததென்று வேகத்தோடு எழும்பிப் பாய, அத்தகைய வளமிகுந்த அரும்பாத்தை ஊர் என உவமை இடம் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது. பூமியை மகளாக உருவகப்படுத்திப் பூமியில் விழுந்த பாக்குக் காயை அவளது தாமரை போன்ற கையிலுற்ற கழங்கென உவமிக்கப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது. 16 மேலும் அரும்பாத்தை ஊரின் நீர்வளம் கூறும்பொழுது, மன்மதன் கையிலுள்ள அம்பைக் கழுவிப் புதுமை செய்து நீட்டியதுபோல தாமரையாகிய உலைக்களத்தின் மத்தியில் நீலநிறமான அரும்பு தோன்றியது. அப்போதுள்ள நிலை கருமான் தாமரையாகிய உலைக்களத்தில் நீல முகையாகிய அம்பைச் செய்வது போன்று விளங்கியது. அத்தகைய அலைநீர் சூழ்ந்து வளம்பெறும் அரும்பாத்தைப் பதி என்று உவமை இடம் பெற்றுள்ளது. இங்கே அலைநீர் கருமானுக்கும் புண்டரிகம் உலைக்களத்திற்கும் நீலமுகை அவன் செய்த அம்புக்கும் உருவகித்தலை உணரமுடிகின்றது. 17

திருக்கதிர்காமப் பிள்ளைத்தமிழில் நாணமாகிய நல்லொழுக்கம், நூற்கலை, வேதம், ஞானம் ஆகியவை ஒன்றோடொன்று தொடர்புடையவை என்பதை விளக்கும்பொழுது வட்டுடைக்கும், கச்சுக்கும், வாளுறைக்கும் வாளுக்கும் தொடர்பு காணப்படுதல் போலவே நாணமாகிய நல்லொழுக்கத்திற்கும் நூற்கலைக்கும் வேதத்திற்கும் ஞானத்திற்கும் தொடர்புண்டு என்று உவமை மூலம் விளக்கப்பெற்றுள்ளது. 18

சிவமலைப் பிள்ளைத்தமிழில்,

"கொண்டல்வெண் டிங்கள்கிளி கோகிலந் தோகைமயில்
குலவலான் முல்லைமலரும்
கோங்கின தரும்புங் குரும்பையும் வஞ்சியங்
கொம்பும்வல் லிக்கொடியுநேர்

மண்டிவளர் கந்தியுங் கேழ்கிளர் முருக்கலரு
மாதுளம் போதுமுதிரா
மாவின்மிளிர் தளிருமொளிர் வடிவுமுடன் மருவலான்
மருமலர்க் குழலுமுகமும்

பண்டிகழு மொழியுமவிர் சாயலும் முறுவலும்
பணைமுலையு மொசியுமிடையும்
பகர்களமு மதரமும் பாணியும் விழியும்
படைத்தவோர் பாவைநிகராந்

தண்டலை நெருங்கிவளர் பட்டாலி நகரதிப
சப்பாணி கொட்டியருளே
தலைவகலை பயில்புலவ நிலவுசிவ மலைமுருக
சப்பாணி கொட்டியருளே"19

எனவரும் பாடலில் பட்டாலியூர்ச் சோலை ஓர் இளம் பெண்ணிற்கு உவமை கூறப்பெற்றுள்ளது. சோலையிலுள்ள கொண்டல் முதலிய பதினைந்து பொருள் பெண்ணின் உறுப்புக்களாகிய குழல் முதலிய பதினொன்றற்கு நிரல் நிறையாய் உவமை கூறப்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது. மொழி, தனம், இடை, அதரம் ஆகிய நான்கனுக்கும் இரண்டிரண்டு உவமமும் ஏனையவற்றிற்கு ஒவ்வொருவமமும் கூறப்பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

சேக்கிழார் பிள்ளைத்தமிழில் பாலாற்றின் சிறப்பினைக் கூறும்பொழுது பாலூட்டிக் குழந்தையை வளர்க்கும் தாய் போலப் பாலாறு நீர் ஊட்டித் தொண்டை நாட்டூர்களை வளர்க்கின்றது என்றும் இத்தகைய பாலாறு தொண்டை நாட்டில் பாய்வதால் வாழைத் தோட்டங்களும் கரும்புத் தோட்டங்களும் எங்கும் காட்சி அளிக்கின்றது. வாழைக் குருத்து நீர் வளத்தால் நீண்டு சென்று முழுமதியின் நடு விடத்தை முட்டிக் கொண்டிருக்கின்றது. இத்தோற்றம் காமவேளின் கொற்றக் குடைக்கு ஒரு காம்பு போல விளங்கு கின்றது என்றும் உவமை கூறப்பெற்றுள்ளன.20

மேலும் இப்பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய சேக்கிழார் கழுத்தில் விளங்கும் உருத்திராக்க மாலையின் பொலிவு, குவளை மலர் மாலையைக் கண்ட வண்டுகள் அம்மலரின் தேனைப் பருக வந்தடைந்தன போல, உருத்திராக்க மாலை சேக்கிழார் கழுத்தில் பொலிந்தன என உவமை வாயிலாக விளக்கப் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது.21

திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் அந்நூலாசிரியரால் அது பெண் மக்கள் நிலையில் நின்று இயற்றப் பெற்றுள்ளது. அதற்கான காரணம் கூறப்பெறும் பொழுது ஓர் அழகிய உவமை இடம் பெற்றுள்ளது. பெண்ணாக நின்று பிள்ளைமேல் அன்பு காட்டினால் இயல்பாக மெய்யன்பு பிறக்கும். ஆணாகவுள்ள நூலாசிரியர் பெண் ணைப் போல் எண்ணிக் கொண்டு அன்பு காட்டுகின்றார். பேரன்புதான் காட்டுகின்றார். இஃது ஓரிடத்தில் நடக்கும் ஒரு கூத்தில் ஒருவன் வேறொருவன் உருவம் தாங்கி

நடிக்கும் பொழுது அவ்வுருவத்துக்குரியவனைக் காட்டிலும் அவ்வுருவம் தாங்கி வந்தவனுக்கு மக்கள் யாவரும் பெரு மதிப்பு அளிப்பர். அதுபோலவே இப்பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலை வராகிய பிள்ளையாரும் மெய்யாகவே துதித்துத் தொண்டு புரிகின்ற பெண்களுக்கு வழங்கும் அருளைக் காட்டிலும் பெண்ணாக எண்ணி அன்புகாட்டி நடித்துத் தொண்டு புரிகின்ற தனக்கு நிறைய அருள் வழங்குவார் என நூலாசிரியர் எண்ணியே ஆகும். 22

திருச்செங்கோடு செங்கோட்டு வேலவர் பிள்ளைத் தமிழில் திருச்செங்கோட்டின் வளம் கூறியுள்ளபோது, வாழையின் நீண்ட இலைசசுருள் பச்சை மூங்கிலால் செய்த நச்சுக்குழலையும் அதன்மேல் பழுந்துள்ள சிவந்த கமுகங்காய் அதில் வைத்தடிக்கும் மண்ணுருண்டையையும் போன்றுள்ளது என்றும் கூவமை கூறப்பெற்றுள்ளது. 23

திருப்போரூர் பச்சை நாயகியம்மை பிள்ளைத்தமிழில் திருப்போரூரில் வானளாவ உயர்ந்தோங்கியிருக்கும் கோபுரத்தின் அழகை வருணிக்கும்போது அது மேக மண்டலத்தைக் கடந்துள்ளது என்றும் யானைத் தோலை உரித்துப் போர்த்தமை போன்றுள்ளது என்றும் சிவபெருமான் போலவும், மேகவானத்தில் இந்திரன் போலவும் விளங்குகின்றது எனக் கூறப் பெற்றுள்ளது. 24 மேலும் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும பாட்டுடைத் தலைவி யாகிய அம்மை தவழ்ந்து தலையை மேலும் கீழும் அசைத்து செங்கீரை ஆடுதல் புவி, விண், பாதலம் ஆகிய மூவுலகத் தினரையும் அழைத்துக் கதி வழியை எளிதாகக் காட்ட அழைப்பதுபோல் உள்ளது என்றும் கூறப்பெற்றுள்ளது. 25

திருப்பரங்குன்றம் பிள்ளைத்தமிழில் தத்தமக்கு ஏற்ற வண்ணம் இனிய மலர்தலைப் போல எங்கும் தன்மயமாக நிலைபெற்றிருக்கும் செழுமையான பவளமலை போன்ற சிவத்தின் இடத்தில் தன் திருவடிகளின் அடையாளம் தங்கும் படியாக அச்சிவன் கண்டு மகிழும் வண்ணம் விளையாடு கின்றவனும் ஞான சொருபனும் அறுமுகனுமான முருகா செங்கீரை ஆடி அருள்க எனக் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனின் சிறப்புக் கூறும்போது உவமை கூறப் பெற்றுள்ளது.26

திருமலை முருகன் பிள்ளைத்தமிழில் அம்மலையின் வளம் கூறும்பொழுது நன்னடை கொண்ட அன்னங்களும் தோற்று ஓடுமாறு உள்ளம் ஒத்த உழத்தியர் வயலிலே களை பறித்து வருகின்றனர். அசையாத அவர்கள் மார்பிலே நீல வடம் அசைய அசைய அவர்களும் அசைந்து அசைந்து வரு கின்றனர். உழத்தியர்தம் உத்தம மார்பினுக்கு அளக்க லாகா அளவும் துளக்கலாகா நிலையும் தோற்றமும் வறப் பினும் வளம்தரும் வண்மையும் உடைய மலையினையும் ஒளி காலும் நீலவடத்துக்கு மின்னொளிகாலும் கருமுகிலும் உவமை யாகக் கூறப்பெற்றுள்ளன.27

தூத்துக்குடி பாகம் பரியாவம்மை பிள்ளைத்தமிழின் அம்புலிப் பருவத்தில் செவிலித்தாயர் உலகத்தின் முதலும் முடிவும் சுற்றிய கடலின் வெள்ளத்தை உண்டெழுந்த மேகம் போன்று பரந்த நீர் ததும்பும் இளைய பசிய இலையும் வெண்மேகம் செம்மேகம் போன்று விரிந்துள்ள நுரையும் சேர்ந்து எழுந்தவைகளின் மத்தியில் தடைப்பட்ட மீன்களின் கூட்டமெல்லாம் நட்சத்திரங்களின் கூட்டம் போன்றும்

அங்கங்கு இடம் கொண்டுள்ள நீரும் ஒளிவிடும் ஆகாயமே சுவராக உள்ள கரைகளும் அழகுவாய்ந்த மேகம் என்னும் வண்டுகள் ஊத மகரந்தப் பொடிகளால் சுற்றிய பரிவேட மிட்டு மணமும் ஒளியும் வீச, தேனாகிய அமுதகலை ஒழுக பொருந்தி அலர்ந்த ஆகாயமாகிய குளத்தில் தாமரை மலர் போன்று உள்ளவனே என்று அழைத்த குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய அம்மை யோடு விளையாட வருமாறு அழைக்கின்றனர். இங்கே ஆகாயமே குளமாகவும் நட்சத்திரங்கள் அதிலுள்ள மீன் களாகவும் ஆகாயச் சுவர் கரைகளாகவும் நீருள்ள மேகம் நீர்ததும்பும் பசிய இலையாகவும் வெண்மேகமும் செம்மேகமும் நுரைகளாகவும் மேகம் வண்டுகளாகவும் பரிவேடம் மகரந்தப் பொடியாகவும் அமுதம் அளிக்கும் சந்திர கலைகள் தேனா கவும் சந்திரன் தாமரை மலராகவும் உருவகிக்கப் பெற் றுள்ளன.[28] அன்றியும் கடலில் புயல்காற்றினால் கரைததும்ப கப்பல்களை நடுவில் நிறுத்தி நங்கூரம் பாய்ச்ச தாழையி லுள்ள சிவந்த கால்களையுடைய அன்னத்திரள்கள் வெற்றிக் கம்பம் போன்று சேரும் பாய்மரத் தொகுதியின் உச்சியில் சேர்ந்து கம்பம் காற்றினால் அசையும் போதெல்லாம் சிறகுகள் விரித்தசைப்பது பெரிய கம்பம் போன்று கயிற் றால் இதத்தொடு சுற்றிக் கட்டிய மூங்கில் மேல் நல்ல நிறச் சட்டை போர்த்துக் கழைக் கூத்தாடிகள் தங்கள் வித்தைகள் செய்வதை ஒத்திருக்கும் என்னும் உவமை இடம் பெற் றுள்ளது .[29]

மறைமலையடிகள் பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய மறை மலையடிகள் நாடுசெழிக்க வந்த மும்மாரியைப்போலத் தமிழ்ப்

பயிர் செழிக்க வாழ்ந்த பெருமகனார் என அவரை மாதம் மும்முறை பொழியும் மழைக்கு ஒப்பிடப்பெற்றுள்ளது.[30] மேலும் செவ்வியறிந்து காலத்தை வீணாக்காமல் உழுது பயிர் செய்யும் ஓரேருழவரைப்போலப் பாட்டுடைத் தலைவர் தமிழ்க்கழனியில் சொல்லேரைக் கொண்டு உழுது தமிழ்ப்பயிர் வளர்க்க வாழ்நாள் முழுவதையும் வீணாக்காமல் வாழ்ந்தார் என்றும்[31] பாட்டுடைத் தலைவர் நெற்றியில் திருவெண்ணீறும் பொட்டும் அணிந்துள்ள காட்சி சொல்லும் பொருளும் போன்று உள்ளது என்றும் கூறப்பெற்றுள்ளன.[32]

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் அம்மானைப் பருவத்தில் குழந்தையாகப் பாவித்துப் பாடப் பெறும் பாட்டு டைத் தலைவியாகிய அம்மை முத்தாலாகிய அம்மனைகளை எடுத்து எடுத்து வானிலே எறிந்து விளையாடுகின்றாள். இக்காட்சி மணப் பந்தரிலே அம்மையார் சிவபெருமான்மேல் வெள்ளிய அமுதத் திரளையை எறிவது போலத் தோன்று கின்றது என்றும் அம்மானைக் காய்களோடு அம்மையின் கண்களும் செல்லும் காட்சி திரளையில் சுரும்பினங்கள் மொய்ப்பது போலவும் மதிமிசைத் தாவிடும் மான் போலவும் அம்மனைகள் தோன்றின என்றும் உவமையும் பொருளும் சிறக்க வந்துள்ளன.[33]

அம்மனைகள் நன் முத்தினால் செய்யப் பெற்றதால் அவை இருக்கும் பொருளுக்கேற்ப அதன் வண்ணமும் மாறும் அம்மனைகளைச் செங்கையில் எடுத்த போது சிவப்பு நிற மாகவும் வெண்மையான பற்களால் நகைத்த போது வெண்ணி றமாகவும் தோன்றும் காட்சி, மக்கள் உயிர்க்குரிய இயற்கைக் குணத்தை இராசதம், தாமதம், சாத்துவிகம் எனனும் முக் குணங்களும் பற்றுவது போல என்றும் கூறப்பெற்றுள்ளது.

மேலும் முத்துகளால் செய்யப் பெற்ற அம்மனைகள் முன் செல்ல மாணிக்கத்தால் செய்யப் பெற்ற அம்மனைகள் பின் செல்வது தாமரைப் பூவாகிய தன் மனையாட்டியைத் தோய்ந்து சந்திரன் செல்ல அவனைப் பின் தொடர்ந்து செல்லும் சூரியன் போலத் தோன்றுகின்றது என்னும் உவமை யும் இடம் பெற்றுள்ளது. செம்பவளக்கால் நட்டு, வயிர விட்டம் சேர்த்து, நிலவொளி வீசும் முத்து வடங்கள் தொங்க விட்டு, மாணிக்கப் பலகை பூட்டிய பொன்னூஞ்சலில் சொக்கரும் சொக்கும் பாட்டுடைத் தலைவியாகிய சுந்தரவல்லி அமர்ந்தாடும் காட்சி, செங்கதிர் மண்டலத்தின் நடுவே சிவ சூரியனாகிய பரம்பொருள் எழுந்தருளிய காட்சியைப் போன்று உள்ளது என்னும் உவமையும் இடம் பெற்றுள்ளது. 34

## உருவகம் :

அணிகளில் உவமைக்குப் பின்னர் நிற்பது உருவகம் ஆகும். கவிஞனது உருவகப் பயன்பாடே கவிதைத் திறத் திற்குக் கட்டளைக்கல். அரும்பெரும் கவிஞர்களே இதனைச் சிறப்புடன் பயன்படுத்தி வெற்றி அடைய முடியும். 35 உருவகம் அழகு சேர்ப்பதற்காக மட்டும் ஆளப்படும் அணி அல்ல. அது கவிஞர்தம் மதிப்பீடுகள் பற்றிய நேரிடையான வெளிப்பாடாகும். கவிஞனுடைய ஆழமான உணர்ச்சிகளை ஆற்றலோடு புலப்படுத்தும் போது உருவகங்கள் கவிஞனால் பயன்படுத்தப் பெறுகின்றன.36 தாமரைமுகம், பவளம் வாய் என்று விட்டிசைத்து இரு சொற்களாகக் கூறியதை முகத் தாமரை, பவளவாய் என விட்டிசைக்காமல் ஒரே சொல்லாகக் கூறும் போது அவை உருவகங்கள் ஆகின்றன.

பாதமலர்,[37] விழிக்காவி,[38] கருத்தென்னும் துய்யதறி, மறைக் கூடம், அன்பாம் அந்தண் கவளம், ஆர்வமென்னும் பேரளி, கருணைமத வெள்ளம், வினைப்புனம், மெய்ஞ்ஞான வெளி என உருவகங்கள் அமைந்துள்ளன.[39]

கைப்பிடி என்பது வாளின்பிடி. அதாவது வாளில் கைப் பற்றும் இடம். சாந்தமே ஞான வாளுக்குக் கைப்பிடி ஆதலால் செந்நிலையாகிய கைப்பிடி என்னும் உருவகத் தொகை நிலையினைத் திருக்கதிர் காமப் பிள்ளைத்தமிழில் காணமுடிகின்றது.[40]

திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழில்[41] குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய திருஞானசம்பந்தரை நோய் தீர்க்கும் மருந்தாகவும் செழுந் தமிழ் வல்லி தழைக்க இருத்திய வேராகவும் எலும்பு உடலாகச் செய்த வேதகனாகவும் உண்மையை விளை வித்த வித்தாக வும், கற்பகமாகவும். சர்க்கரையாகவும், வழிப்பகையாகவும், கலிகோபனாகவும் உருவகம் செய்யப் பெற்றுள்ளது.[42]

‘வீடு’ பெறும் நெறியினை விரும்பி மனைதுறந்து வழியிலுள்ள குழிகளுக்குத் தப்பி மலையிலும் காட்டிலும் சுற்றித்திரிபவர் பலர். அந்த மலைக்காட்டு வழியிலுள்ள குழிகளில் விழாமல் செல்வது எளிதன்று; வீழின்வரும் தீங்கோ கொடியது. தவ இருக்கைநாடி மலையினும் காட்டினும் அலையுங்காலத்துத் தறுகண் விலங்கினால் முதலுக்கே தீங்கு நேரலாம் நாட்டிலும் இக்கொடுமையினைக் காணமுடிகின்றது. இங்கும் பரசமயங்களாகிய குழிகள் பரந்துள்ளன. இன்பம் நாடி மடவார் கொங்கை மலையினும் கூந்தல் காட்டினும்

சுற்றுகின்ற காலத்துக் காம விலங்கினால் வாழ்வுக்கே தீங்கு நேரலாம். இக்கருத்துகள் பொதிந்த உருவகத்தை,

"கூண்ட மாயப் பரசமயக்
குழியின் விழ்ந்துஅங்கு அழியாமல்
கொங்கை மலையினும் மடவார்
குழற்காட் டினும் போய்ச் சுழலாமல்"43

என்னும் அடியால் அறியலாம்.

"துப்புர வாய்மன மெய்மொழி யாக்கியே
தூமனப் பூவிருத்தி
சொற்சுவைத் தேன்மணம் சூழ்கவி தந்திடுந்
தும்பியை யஞ்சலிப்பாம்"44

எனவரும் மறைமலையடிகள் பிள்ளைத்தமிழின் பாடல் அடியில் உருவகம் இடம் பெற்றுள்ளது கவிதைத் தேனைத் தந்திடும் தும்பிக்கையனாகிய தும்பியைத் தூய்மையான மனமாகிய பூவில் வைத்துப் போற்றுவோம் என்பது பொருள். ஈண்டு மனம் என்பது பூ. மனதில் வந்து தங்கும் தும்பிக்கையனாகிய விநாயகன் வண்டின் இனமாகிய தும்பி. சொற்களாலான கவிதை என்பது தேன். பூவில் தேன் இருப்பது இயல்பு. அத்தேனை வண்டு உண்ண வருவதும் மரபு. ஆனால் ஈண்டுத தும்பி தேனை உண்ணவாராமல் கொடுக்க வருகின்றது என்று கூறப் பெற்றுள்ளது. "சொற்சுவைத் தேன் மணம் சூழ்கவி தந்திடும் தும்பி" என்னும் அடிக்கு "மனமாகிய பூவில் சொல்லாகிய தேன் சூழ்ந்த கவியைத் தந்திடும் தும்பி" என்பது பொருள். சொற்களாலானது கவி. சொல் தேன் என்றால் சொற்களாலான கவிதையும் தேன் ஆகும். எனவே சொற்சுவைத் தேன் மணம் சூழ்கவி என்பது கவித்தேன்

எனப்பொருள் பெறும். 'கவி தந்திடும் தும்பி' என்றதால் மனமாகிய பூவில் இயல்பாகத் தேன் ஊறாமல் தும்பி" கொணரும் தேனையே மனப்பூப் பெற்றுக் கொண்டது என்பது பொருள். ஆக தெய்வீகத் தன்மை பொருந்திய விநாயகனாகிய வண்டு தேனை எடுக்க வாராமல் கொடுக்க வந்தது என்னும் கற்பனை பொருத்த முடையதாகவே உள்ளது. அவன் அருளாலே அவன்தாள் வணங்கி என்றாற் போலத் தும்பி மனமாகிய பூவில் கவிதைத் தேனை அருள அவ்வருளா லேயே நூலாசிரியர் யானை முகனாகிய தும்பியைத் தம் மனப்பூ இருத்தி அஞ்சலிக்க விரும்புகிறார் என உணர முடி கின்றது. இவ்வாறாக அவனின்றிக் கவிதை எழுத இயலாத ஆசிரியர் தம் விநாயக வழி பாட்டு முறையை உருவகப் படுத்திக் காட்டுகின்றார்.

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில் கரடக்கரை, கடா முடைகடல்,45 பவக்கடல்,46 திருவருளமுது,47 அகந்தைக் கிழங்கு உளக்கோயில்,48 கமலக்கோயில், மணப்பந்தர்49 என்னும் உருவகங்கள் இடம் பெற்றுள்ளன.

தெளிவான உருவகமாக அமைவதால் உருவம் ஆற்றல் பெறுவதில்லை; தெளிவைவிட உணர்வோடு விந்தையாக இணைக்கப் பெற்ற ஓர் உள நிகழ்வாக அமையும் பண்பிலேயே அதன் ஆற்றல் அமைகின்றது. உணர்வின் எச்சமாகவும் வெளிக்காட்டாகவும் அமைவதிலேயே அதன் பயன் நிறைவு பெறுகின்றது. 50 என்னும் திறனாய்வாளர் கூற்றிற்கு ஏற்பச் சைவசமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் உருவகங்கள் அமைந் துள்ளன.

## தற்குறிப்பேற்றம் :

பெயர் பொருள், அல்பொருள் என்னும் இரு பொருட்கண்ணும் இயல்பாக நிகழும் தன்மையொழியக் கவி தான் கருதிய வேறு ஒன்றினை அவற்றின்கண் ஏற்றிச் சொல்வது தற்குறிப் பேற்றமாகும்.51

அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில் பாலி நதியில் வெள்ளம் கரை கடந்து வானுற ஓங்கிப் பெருகுகிறது. அது சோமேசர் திருமுடிமீது ஆடும் உரிமை தமக்கும் கங்கைக்கும் தான் உண்டு. ஆதலால் கங்கையோடு சென்று உறவாடுவோம் எனப்பெருகி ஓங்கி வருவதாகத் தற்குறிப்பேற்றம் கூறப்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. 52

திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழில்,

"மும்மல மாமத முற்றுப் போத
முழுத்தறி யறவிசி
முகிழ்த்தல ரன்பின் சங்கிலி யுதறி
முதிர்ந்த வருட்கூடத்

திம்மென நீங்கி வெளிக்கொடுபுவன
மெனுங்கடு வனமோடி
யொப்பா கர்க்த மடங்கல வாகி
யியங்கு முயிர்க்கரிக

டம்மைவி டாது தொடர்ந்து பிணிப்பத்
தகுமங் குச பாசந்

தாங்குதல் கண்டுந்தம்போ லெண்ணிச்
சார்பவை தமை நகையாக்

கெபம்மைம லர்க்கைகள் கொட்டுவ தேய்ப்பக்
கொட்டுக சப்பாணி
குலைகெழு தடநிறை கலைசை நகர்க்கிறை
கொட்டுக சப்பாணி " 53

எனவரும் பாடலில் உருவகமும் தற்குறிப் பேற்றமும் இடம் பெற்றுள்ளன. குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய பிள்ளையார் கயிறும் அங்குசமும் கைகளில் தாங்கியிருத்தற்கு விளக்கம் தரப்பெற்றுள்ளது. உயிர்களின் இயல்பும் இறைவரின் பேரருள் திறமும் ஒருங்கே உணர்த்தப் பெறுகின்றன. உலகில் யானைகள் மும்மதமும் வழிந்ததும் தம்அறிவை இழக்கும்; கட்டுத்தறியைச் சிதைக்கும் சங்கிலியை வீசி எறியும்; கூடத்திலிருந்து வெளியேறும்; காடு செல்லும்; பாகர்களை மதியாது திரியும்; அவை அந்நிலை அடையப் பாகர்கள் வாளா இரார்; கயிறும் அங்குசமும் கொண்டு தேடியலைவர். இங்ஙனமே உயிர்கள் முக்குற்றமும் கொண்டு மெய்யுணர்வை இழக்கும்; அன்பு கை விடும்; அருளின் நீங்கும்; உலகியலில் ஈடுபடும். ஆசான் வழி நில்லாது எனப்பொருத்தம் தோன்றக் கூறப்பெற்றுள்ளது.

மலமுதிர்ச்சியால் அறிவும் அன்பும் அருளும் இழந்து ஆசான் வழி நில்லாது உலகியலில் ஈடுபட்டு இறைவனை மறக்கும் இயல்பு உயிரினங்கட்கு உண்டு. அதனால் அவற்றை மதமுதிர்ச்சியால் தறியை வீசிச் சங்கிலியைச் சிதைத்துக் கூடத்தின் நீங்கிப் பாகரை மீறிக் கானகம்

போகிப் பாழ்படுத்தும் யானைகளாக உருவகிக்கப் பெற்றுள்ளன. மும்மலங்களே அழிவுகள் எல்லாவற்றுக்கும் அடிப்படையாக இருத்தலால் அவற்றை யானைகளை நிலை பிறழச் செய்து அவற்றின் அழிவுகளுக்கு அடிப்படையாக உள்ள மும்மதங்களாகவும் மெய்யுணர்வும் அன்புடைமையும் முறையே இறையியல்பை அறிதற்கும் அவ்விறைவனை வழிபடுவதற்கும் உதவி, உயிர்களை நல்வழிப் படுத்துவனவாக இருத்தலான் அவற்றை அணைத்துக் கட்டுவதற்கும் வெளிச் செல்ல வொட்டாது பிணித்தற்கும உதவி யானைகளை அழிவினின்றும் காப்பனவாகிய கட்டுத்தறி சங்கிலிகளாகவும் இன்ப அருள் மூட்டித்துன்ப உணர்ச்சிகளையெல்லாம் தடுத்து உயிர்களுக்கு உதவி வருமாதலால் அதனை இரை கிடைத்தற்கு இடனாகி மழை, வெயில் போன்றவற்றைத் தடுத்து யானைக்கு உதவும் கூடமாகவும் பரப்புடைய தாய் உயிர்களைக் கவர்தற்குரிய பலபொருளும் கொண்டிருத்தலால் உலகத்தைப் பரப்பும் பல்வேறு மரம், செடி, கொடி வகைகளும் கொண்டு யானையின் மனத்தைப் பிணிக்கும் காடாகவும் பழிபாவங்களில் தடுத்துப் புகழ் புண்ணியங்களில் செலுத்தி, மனமாசறுத்து இறையுணர்ச்சியையூட்டி உயிர்களைக் காக்கும் ஆசான்களை இடித்தல் சிதைத்தல்களில் தடுத்துப் பயனுடைய பணிகளில் ஈடுபடுத்தி உடலழுக்கு நீக்கித் தீனி முதலியன தந்து பேணும் பாகர்களாகவும் உருவகிக்கப் பெற்றுள்ளனர். இங்கு ஆசான்மார் அறிவுரைகள் கூறி இறையுணர்வு கொளுத்த முயன்றார்கள். ஆயினும் அன்பும் அருளும் நீங்கி உலகப் பொருள்களுக்கு அடிமைப்படல் உயிர்ப் பொருள்களுக்கு இயல்பு என்று கூறி அவ்வுயிர்களாகிய யானைகளை விடாது தொடர்ந்து பிணித்துப் அடக்குதற்கே பாட்டுடைத் தலைவராகிய பிள்ளையார் கைகளில் கயிறும் அங்குசமும்

தாங்கியுள்ளார் எனத் தற்குறிப்பேற்றத்தைக் காண முடி கின்றது.54

சேக்கிழார் பிள்ளைத்தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவராகிய சேக்கிழார் நிரம்பத் திருநீறு அணிந்து, குவளைமலர் மாலை புனைந்து, உருத்தி ராக்கம் அணிந்து, பொலிந்தார் என்பதைக் கூறும்பொழுது குவளை மலர்மாலையைக் கண்ட வண்டுகள் அம்மலரின் தேனைப் பருக வந்தடைந்தன போல உருத்திராக்க மாலை சேக்கிழார் கழுத்தில் விளங்கின எனக் கூறும்பொழுது தற் குறிப்பேற்றத்தைக் காணமுடிகின்றது. 55 மேலும் பாட்டுடைத் தலைவராகிய சேக்கிழார் கைக் கொட்டுதற்குரிய காரணங் களைக் கூறும்பொழுது,

" ஈனசம யத்தொடக் கெல்லாம் ஒழித்தனம்
எனக்கைதட் டுதலும் "

என்று நூலாசிரியர் பாடுவர். இங்கே தற்குறிப்பேற்றம் அமைந்துள்ளது.

மேலும் வரால் மீன்கள் பெருவெள்ளத்தையும் எதிர்த்து அவ்வாற்றில் உருண்டு வரும் யானைமீது மோதுகின்றன. அதனால் சினமடைந்த அவ்வரால் மீன்கள் ஆகாயம் அளவு தாவி ஆகாயத்தையும் துளைத்துச் சென்று அங்குள்ள காம தேனுவின் மடித்தலத்தையும் முட்டின. அதனால் அதன் மடித் தலம் குழைந்தது. வரால்மீன்கள் முட்டியதால் முலைக்காம்பு கள் துவாரம் கொண்டு அவற்றின்மூலம் பால் பெருக லாயிற்று. அந்தப்பால் ஆற்றில் பெருகியதால் பாலாறு என்னும் அதன் பெயர் அழியாதவாறு நிலைத்து நிற்கின்றது

என வரால் மீன்களின் வளம் கூறும்பொழுது தற்குறிப்பேற்ற அணி அமைந்துள்ளது. 57

திருமலை முருகன் பிள்ளைத்தமிழில் அன்னம் இயற்கையிலேயே வெண்ணிறமுடையது; ஆனால் கலைமகளும் திருமகளும் அரம்பைமாரும் தன் நடையின் குறை உணர்ந்தே அன்னமானது வெண்ணிறம் கொண்டது எனக்கூறும்பொழுது தற்குறிப்பேற்றம் இடம் பெற்றுளளது. 58

சேக்கிழார் பிள்ளைத்தமிழில்,

" சோறு மணக்கும் மடங்கள் எலாம்
தூய்மை மணக்கும் சிந்தைஎலாம்
சுவணம் மணக்கும் ஆடைஎலாம்
தொங்கல் மணக்கும் தோள்கள்எலாம்

சேறு மணக்கும் கழனிஎலாம்
செல்வம் மணக்கும் மாடமெலாம்
தென்றல் மணக்கும் மேடைஎலாம்
தெய்வம் மணக்கும் செய்யுள்எலாம்

நீறு மணக்கும் நெற்றியெலாம்
நெய்யே மணக்கும் கறிகள்எலாம்
நெருப்பு மணக்கும் குண்டமெலாம்
நேயம் மணக்கும் வீதிலெலாம்

சாறு மணக்கும் குன்றத்தூர்
தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டித தெய்வச
சைவா தாலே தாலேலோ 59

என்று வரும் பாடலில் மணக்கும் என்னும் சொல் விளங்கும் பொருந்தியிருக்கும் நிறைந்திருக்கும் கலந்திருக்கும் எனப் பல பொருள்களில் ஆளப்பட்டிருத்தலின் சொற்பொருட் பின்வரு நிலையணி இடம் பெற்றுள்ளது. 60

திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழில்,

" சுழிக்கும் பெருஞ்சா றலையெறிய
நூறா யிரம்பேர் சூழ்கரும்பு
கழிக்கும் பழனக் கழனிசூழ்
காழிக் கரசே வேதத்தைப்

பழிக்கும் பொல்லாப் பரசமயப்
பகட்டைப் பால்வாய்ப் பசுந்தமிழால்
அழிக்கும் புகலிப் பெருமானே
அடியேஞ் சிற்றி லழியேலே" 61

எனவரும் பாடலடிகளில், பரசமயங்களைப் பகடாக உருவகம் செய்து புகலிப் பெருமானைக் கோளரியாக உருவகம் செய்யாமையால் இவ்வடிகளில் ஏகதேச உருவகத்தைக் காணமுடிகின்றது.

இனி வின்செஸ்டர் வரையறுத்துள்ள - எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப் பெற்றிருக்கின்ற படைப்புக் கற்பனை, இயைபுக்கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை ஆகிய மூன்றும் சைவ சமயப்பிள்ளைத்தமிழ் நூல்களில் விளங்கும் விதம் ஆராயப் பெறுகின்றன.

### படைப்புக்கற்பனை :

கவிஞன்தன் அனுபவத்தில் கண்டவற்றை எவ்விதக்

கட்டுப்பாடுமின்றித் தானாகவே தேர்ந்தெடுத்து அவற்றினைத் தொகுத்துப் புதிய தொரு வடிவினைப் படைப்பது படைப்புக் கற்பனை ஆகும். 62

குளத்துார் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழில் குளத்துாரைச் சுற்றிலும் பொழில்கள் உள்ளன. அவற்றுள் வாழையும் தென்னையும் கமுகும் செழித்து வளர்ந்துள்ளன. இவற்றின் புறம்பே வயலில் செங்கரும்புகள் செழித்து வளர்ந்திருக்கின்றன. குரங்குகள் வண்டு துளைத்த வழியே சாறொழுகும் கரும்பைக் கடித்துச் சுவைத்து வாழைக் குலைகளை அழித்து தென்னம் பழங்களைச் சிதறிக் கமுகில் ஏறின. கமுகோ விண்ணுலகை அளாவியிருக்கின்றன. விண்ணுலகிலுள்ள கற்பகத் தருவில் படர்ந்துள்ள காமரு கொடிகள் கமுக வரையில் தொங்கு கின்றன. கமுகிலேறிய குரங்குகள், காமரு கொடியைப் பற்றி ஏறிக் கற்பக மரக்கொம்பை அடைந்து குதித்துக் கூத்தாடுகின்றன. இச்செயல் கழைக் கூத்தாடிகளின் செய் கையை ஒத்திருந்தது என்றும் 63 குளத்துாரில் நீர்வளமிக்க வயல்கள் நிறைந்திருக்கின்றன. அவ்வயல்களில் விளைந் திருக்கின்ற முற்றிய நெற்கதிர்கள் சூரிய மண்டலம் வரை சென்று அவனுக்குச் சாமரை வீசுகின்றன. இத்தகைய நெற் பயிர்கள் தாமரையிலிருந்து பெருகி வந்த தேனாகிய தண்ணீரால் செழித்து வளர்ந்தவை; தாமரையின் மகரந்தங் களே அவற்றிற்கு எருவாக விளங்கின என்றும் குளத்துாரின் வளம் கூறும் பொழுது படைப்புக் கற்பனையினைக் கண்டின் புற முடிகின்றது 64

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழில் அரும் பாத்தை என்னும் ஊரின் சிறப்புக் கூறும் பொழுது கயல்மீன், அம்பு, கடலில் தோன்றிய ஆலகால விஷம் எமனுடையவேல்,

கருவிளைமலர், மன்மதனது அம்புகள் ஆகியவற்றை வென்று ஓட்டிய காதுவரை நீண்ட கண்களையுடைய பெண்கள் ஆசை மயக்கத்தில் கணவன் செய்த பிழைக்காக அவர்களிடமிருந்து பிடுங்கி எறிந்த முத்தாபரணங்கள் சிறு பிள்ளைகள் சிறிய தேரைத் தள்ளிச் செல்ல அதனுடைய சக்கரம் செல்லும் வழியைத் தடுக்கவும் மேல் மாடத்தில் மேகவெளிக்கும் அப்பால் கொடிக் கூட்டங்கள் சென்று சூரியனது தேர்ச் சக்கரத்தின் வழியைத் தடுக்கவும், அழகிய வீதிகளில் குட முழாவென்ற வாத்தியத்தின் ஒலிக்குச் சோலை தோறும் மயில்கள் களிக்கவும் உள்ள அரும்பாத்தை நகர் என்று கூறப்பெற்றுள்ளது.65

குமரமலைக் குமரேசர் பிள்ளைத்தமிழில் திருப்புல்வயல் என்னும் நகரின்வளம்,

" பூகம் பழுத்த நறுந்தாற்றிற்
புயலார் தெங்கின் பழம்வீழப்
பொறாது சிதறிப் பொய்கை யின்வாழ்
புள்ளின் குலத்திற் படவிரிதன்

மோகம் பழுத்த வாடவர் தோண்
முயங்கு மடவார் நசையொழித்தும்
முற்றூந்துறந்த முதறிவான்
மூவா வின்பம் பெறற்கெண்ணி

யோகம் பழுத்த நெஞ்சகலா
வுறுவ ரனையத் திகழவிண்மட்
டுயர்தண்டலைசூழ் சோணாடா
வும்பர்க் கதிபா வளவா வெண்

போகம் பழுத்த புல்லை நகர்ப்
புனிதா தாலோ தாலேலோ
புனமான்றந்த குறமானைப்
புணர்வோய் தாலோ தாலேலோ[66]

எனக் கூறப் பெற்றுள்ளதில் படைப்புக் கற்பனை அமைந்துள்ளது.

சேயூர் முருகன் பிள்ளைத் தமிழில் சேயூரின் வளம் கூறும் பொழுது வயல்களில் சங்குகள் தூங்குகின்றன. கால் வாய் வழியே எருமை பொழிந்த பால் பாய்கிறது. அதன் விசையால் சேல் எழுந்து முத்து நிரம்பிய உப்பங்கழி யெல்லாம் சென்று சூழ்கின்றன. முத்துகளை உமிழ்ந்த வெண் சடங்குகள் நூறாயிரம் என்று சொல்லும் படி மேய்கின்றன. அவற்றின் பின் ஒரு வாளை செல்கின்றது. குவளை சூடும் உழத்தியர் கூட்டத்தைக் கண்டு அஞ்சி அவை வேகமாகச் சென்றதால் வாழை, மஞ்சள், இஞ்சி, கரும்பு, நெற்பயிர் எல்லாம் மடிந்தன அந்தவேகத்தில் தென்னைமரங்கள் தேங்காய்களை உதிர்த்தன. எனக் கற்பனை செய்யப் பெறறுள்ளது [67] இவ்வாறு இப்பிள்ளைத் தமிழில் பல விடங்களில் படைப்புக் கற்பனை இடம் பெற்றுப் படிப்பார்க்கு இன்பம் பயக்கின்றது.[68]

திருநெல்வேலி காந்திமதியம்மை பிள்ளைத் தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவி யாகிய காநதிமதியம்மையை, செம்பவளக் கால் நிறுத்தி நீல மணி விட்டம் சமைத்து, வெண்தரள வடம் கோர்த்து பதும ராகப் பலகை பூட்டி அமைந்த பொன்னூஞ்சலில் வயிர வயிடு ரிய மணியணிகளின் ஒளி வீசப் புட்பராகம் பதித்த விதான நிழலில் ஐம்முகக் கோமேதக மணியாகிய ஐயனுக்கருகில் பச்சை மரகதமணியாய் ஆடியருளாய் அம்மையே என்று

ஊசலாடுமாறு வேண்டும்பொழுது படைப்புக் கற்பனை இடம் பெற்றுள்ளது 69 இக்கற்பனையில் நவரத்தினமணிகள் ஒன்பதும் இடம்பெற்றிருப்பன படித்து இன்புறத்தக்கது. இப்பிள்ளைத் தமிழில் மேலும் பல விடங்களில் இக்கற்பனை வகையினைக் காணமுடிகின்றது 70

திருமலை முருகன் பிள்ளைத்தமிழில் திருமலை கைலாய மலையாகக் கற்பனை செய்யப் பெற்றுள்ளது. கங்குலும் மங்குலும் ஓர் உருக்கொண்டது போன்ற காட்டெருமை தினைக் கதிரை வயிறு நிறைய உண்ணுகின்றது. பின்னர் தேன் கலந்த நறுஞ்சுவை நீரை நிறையப் பருகுகின்றது. நல்லதோர் ஆனந்தம் அதற்குப் பிறக்கவே மதர்ப்புடன் தன் கன்றை மலை எங்கும் தேடுகின்றது. மதர்ப்பாலும் கன்றை நாடும்மனநெகிழ் வாலும் அதன்மடி தாமாகவே பாலைச் சொரிகின்றன. இதனால் கருமை நிறமுடைய திருமலை கயிலாய மலையாகின்றது. திருமலையிலுள்ள தெய்வீக நீரும் வெண்மை நிறமுடையதால் திருமலை மேலும் மேலும் வெண்மை அடைந்து வெண்மை நிறமுடைய கயிலாய மலையாகவே காட்சி தருகின்றது எனப் படைப்புக் கற்பனை இடம் பெற்றுள்ளது.

தில்லை சிவகாமியம்மைப் பிள்ளைத்தமிழில் வாளை மீன்கள் எழுவதால் பலாப்பழம், வாழைப்பழம், மாம்பழம் ஆகியன விழ, அதனால் மலர்ந்த தாமரைகளையுடைய ஓடைகளும் சிறந்த ஆறுகளும் குளங்களும் நிறைந்த தில்லை நகர் என்று தில்லையின் வளம் கூறும்பொழுது படைப்புக் கற்பனை இடம் பெற்றுள்ளது.71

மேலும் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய சிவகாமியம்மையின் அழகை,

வெட்சிமலர், போன்ற பாதங்களை ஒத்து நடப்பதைக் கற்பன வாகிய பெண் அன்னங்களும் மெச்ச நடித்து ஆச்சரியத் தோடு சாயலைக் கற்பனவாகிய பச்சைநிறத் தோகையுள்ள மயில்களும் தான்கட்டிய கூட்டிலுள்ள கருநிறம் அமைந்த குயில்களும் பச்சை நிறமுள்ள கிளிகளும், மைனாக்களும், சொல்லைக் கற்பனவாகியும் கண்களாகிய இருதாமரைகளின் தொழிலைப் போன்று கற்பனவாகிய பெண் வண்டுகளும் பாட்டுடைத தலைவியைப் போல மற்ற உவமானப் பொருள் களை இகழ்வதற்கு எந்த அளவும் கற்க வில்லை; எவ்வாறு எதிர் நிற்பது என ஒன்று சேர்ந்து வெட்கினவைகளாய்த் தாங்கள் கொண்ட சிறகுகளைத் தங்கள் உடலிலே தட்டின. அத்தகைய அழகு பொருந்தியவள் என்னும் வர்ணனை படைப்புக் கற்பனையாக அமைந்துள்ளது.72

பழமுதிர்சோலைமலை முருகன் பிள்ளைத்தமிழில் முருகனின் வேற்படையும் வள்ளியம்மையின் உறுப்புகளும் ஐந்தொழில் இயற்றுவனவாகக குறிப்பிடும் பொழுது படைப்புக் கற்பனையினைக் காண முடிகின்றது.73

புதுவை திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழில் சக்கரவாளக் கிரியே மதிலாகவும் நெருங்கிய பெரும் புறக்கடலே கோட்டை சூழ்ந்த அகழியாகவும் திசைகள் அரண்மனை வாயில்களாகவும் நிலைத்த புகழ்கொண்ட எட்டு மலைகள் அரண்களாகவும் எட்டுத்திக்குப் பாலர்களுடன்கூடிய தேவ சேனைகள் அம்மதிலின் இயந்திரங்களாகவும் மகாமேரு மலை கொடி மரமாகவும், ஆகாய கங்கை வெண்மையான கொடி யாகவும் பலதீவுகள் வீடுகளாகவும அவ்வீடுகளில் அரிய மனித உயிர்கள் குடியேறி இகபரசுகங்கள் தம்மை தரும

நெறிப்படி கொடுத்து அரசாளுகின்ற அழகிய புதுவை நகர் எனப்புதுவையின் வளம் கூறும்பொழுது படைப்புக் கற்பனை இடம் பெற்றுள்ளது.74

இப்பிள்ளைத்தமிழில் முதன்மையான முதலெழுத்துக் களாகிய சேற்றினால் மொழி அமையப்பட்ட நல்ல செங் கற்கள் செய்து மூன்று புணர்ச்சியினால் சுவர் வைத்துப் பெயர்ச்சொல், வினைச்சொல் ஆகியவற்றைத் தூணக நிறுத்திப் பதத்திற்கு அழகைத் தரும் சாரியை என்பதைப் போதிகையாகச் செய்து வேற்றுமை உருபு உவம உருபு முதலியவற்றை உத்திரமாகப் புகுத்தி வரிசையாக உள்ள பத்துவித எச்சங்களையும் கொடுங்கையாக வைத்து மூன்றாம் வேற்றுமைக் கர்த்தா முதலியவற்றைச் சிறு உத்திரமாகச் செய்து சந்த விருத்தப் பாக்களால் முழுதும் ஆணியினால் தைத்து ஐம்பால் (அல்) ஐந்து இலக்கணப் பகுதிகளை ஓடாக இட்டு, பொருள்கோள் எட்டினையும் அறைகளாகத் தடுத்து நான்கு செய்யுள் வகையினால் சித்தரித்து இருபொருள் பெறும் சிலேடை என்னும் விளக்கு ஏற்றி அமைக்கும் செந்தமிழ் இலக்கணமாகிய வீட்டினுள் விளையாடும் அம்மையே சிறுவீடு கட்டியருள்க என வேண்டும் பொழுது படைப்புக் கற்பனை அமைந்துள்ளது.75 இவ்வாறே இப்பிள்ளைத்தமிழில் இன்னும் பலவிடங்களில் இவ்வகை கற்பனை இடம்பெற்றுக் கற்பார்க்குக் களிபேருவகை ஊட்டுகின்றது. 76

மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழில் இரண்டு திருவடி களிலும் அணிந்துள்ள கிண்கிணியாகிய சதங்கையும் முறையீடு செய்வதுபோல் ஒலிக்கின்ற பரல்களையுடைய சிலம்பணியும் இடைஇற்றுப்போம் இற்றுப்போம் என்று புலம்புகின்ற மேக

லாபரணமும் பொற்சரிகையால் சித்தரிக்கப்பெற்ற பட்டாடை உடுத்த சிறந்த இடையும் மேலாடையும் ஒட்டியாணம் என்னும் இடுப்பணியும் செங்கையில்வார்கின்ற பச்சைகிளியும் அழகிய முலையின்மேல் அணியப்பெற்றுள்ள முத்தழுத்திய மேலாடையும் மங்கலமான திருநாண் அணியும் அழகு ஒழுக நின்று அருள் பொழியும் மதிமுகமும் முகமாகிய சந்திரனின் நீண்ட நிலவு துளிர்க்கின்ற சிறுநகையும் ஞான ஆனந்தம் என்னும் கடலில் மூழ்கி மகரக் குழையணிந்த காதுடன் போர் புரியும் கயன் மீன்களாகிய கண்களும் வடிவுடைய அழகும் மலர்ந் திருக்கப் பெற்ற சுந்தர வல்லி எனக்குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவி அணிகலன்களெல்லாம் அணிந்து திருமங்கல நாணுடன் பொன்னூசலில் வீற்றிருக்கும் திருக்கோலத்தை வர்ணிக்கும்பொழுது படைப்புக்கற்பனை இடம் பெற்றுள்ளதை அறியமுடிகின்றது, 77

## இயைபுக் கற்பனை:

உணர்ச்சி ஒற்றுமையால் இயைத்து அமைக்கப் பெறும் கற்பனை இயைபுக் கற்பனை ஆகும். உள்ளத்தில் பதிந்த உணர்ச்சி, அதையொத்த மற்றொரு காட்சியைக் காணும் பொழுது முன்பு பதிந்த உணர்ச்சி கலையாகப் பரிணமிக்கிறது. கவிதையாக மலர்ந்து கற்பனை மணம் வீசுகின்றது. ஒத்த கருத்தியல் வடிவங்களை உடைய பொருள் கருத்து அல்லது உணர்ச்சி ஆகியவற்றை இயைபுபடுத்திப் புனைந்துரைக்கின் றது. 78

சேயூர் முருகன் பிள்ளைத் தமிழில் பெண்கள் தாமரைப் பொய்கையிலே குளிக்கும் பொழுது அவர்களது அணிகலன் களிலிருந்து ஒரு மாணிக்கம் பொய்கைக்குள் நழுவி விழுந்து

விட்டது. அது தண்ணீருக்குள் கிடக்கும் ஒரு செங்கனி போன்றிருந்தது. அதைக் கயல்மீன் பெற விரும்புகின்றது. சிரல் என்னும் சிச்சிலிப்பறவை அதைக் கொத்தத் திரிகின்றது. நாரை, போதா, தாரா ஆகிய அனைத்தும் அதைக் கண்டு திகைக்கின்றன. பெடையும் பார்ப்பும் உடனாக, தாமரை விட்டெழுந்து வண்டு ஆரவாரிப்ப அன்னம் ஒன்று பொழில் புகுகின்றது. அது முகிலில் புகும் பிறை போன்றிருக்கின்றது என வர்ணித்திருப்பதை நோக்கும் பொழுது இயைபுக் கற்பனையினை அறிய முடிகின்றது.[79]

சேக்கிழார் பிள்ளைத் தமிழில் குன்றத்தூரின் நீர்வளம், பாலாறு நந்தி என்னும் மலையில் தோன்றுகின்றது அம்மலையில் வசிட்ட முனிவர் தவம் செய்த பொழுது அவர் வளர்த்த காமதேனு என்னும் தெய்வப் பசு பொழிந்த பாலே ஆறாகப் பெருக்கெடுத்து ஓடியது. இவ்வாறு தோன்றிய பாலாறு ஓடை, ஏரி, குளம், கிணறு, பொய்கை முதலியவற்றையெல்லாம் நிரம்பி கருங்கடலில் கலந்தது. அதனால் கருங்கடலே வெண்மை நிறமடைந்தது. கண்டவர்கள் அக்கடலைத் திருமால் பள்ளி கொள்ளும் பாற்கடலோ என ஐயுற்றனர் எனக் கூறும் பொழுது இயைபுக் கற்பனையினை அறிய முடிகின்றது.[80]

எல்லாப் பிள்ளைத் தமிழ் நூல்களிலுமுள்ள அம்புலிப் பருவப் பாடல்களில் இயைபுக் கற்பனை இடம் பெற்றுள்ளது.[81]

கோயிலூர்த் திருநெல்லையம்மை பிள்ளைத்தமிழ் 81 சிவஞான பாலைய தேசிகர் பிள்ளைத்தமிழ், 82 திருப்பேரூர் பச்சைநாயகி பிள்ளைத்தமிழ், 84 மயூரகிரிச் சண்முகநாதர் பிள்ளைத்தமிழ், 85 மருதாசலக் கடவுள் பிள்ளைத்தமிழ் 86 ஆகிய நூல்களில் இவ்வகை கற்பனையினைச் சிறப்பாகக் காணலாம்.

## கருத்துவிளக்கக் கற்பனை :

படைப்பாளன் தான்கண்ட காட்சிகளை அப்படியே கூறாமல் அக்காட்சிகளைக் காண்பதால் தன் உள்ளத்தில் பொங்கி எழும் கருத்துணர்ச்சிகளைச் சிந்தைக்கினிய சொற்களில் வடித்துத்தருவது கருத்துவிளக்கக் கற்பனை ஆகும். 87

அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழில் மிக்க அழகையுடைய பெண்களது கூந்தலில் பாடிய ஆண் வண்டோடு பிணங்கிப் பறந்த பெண்வண்டு மலரையுடைய அவ்வனத்தில் மறைந்து கொள்ளும். அங்கு வந்து விளையாடுகின்ற பெண்கள் ஓங்கியடித்தால் மகரந்தங்கள் தாக்க மணமுடைய தேனை வெளிவிட்டு மணம் வீசும். அக்கொம்பு அசைவதால் மயங்கி வெருண்டு அந்தப்பெண் வண்டுகள் முன்பிருந்த ஆண் வண்டுகளைச் சேர்ந்து சுகமளிக்கும் அரும்பாத்தை என அரும்பாத்தையின் வளம் கூறும்பொழுது கருத்து விளக்கக் கற்பனை இடம் பெற்றுள்ளது. 88

சேயூர் முருகன் பிள்ளைத் தமிழில் கரை தோறும் வரும் கருநிற மேதிகள் கண்டு ஓடவும் மடையில் நில்லாமல் கடைசியர் கடையர்கள் எங்கேனும் செல்லவும் மதகுகள் ஒலிக்கின்ற போது முழவோ என்று எண்ணக் கூடியவற்றில் சங்குக் கூட்டங்கள் கோடி கோடியாய் வந்து சாயவும் வண்டுகள் ஆர்ப்பரிக்கவும் கடல் போலும் வாவிகள் பெருகவும் இயற்கை வளம் கெழுமிய சேயூர் எனச் சேயூரின் வளம் கூறும் பொழுது கருத்து விளக்கக் கற்பனை இடம் பெற்றுள்ளது.89 மேலும் அவ்வூரின் வளம் கருப்பஞ்சாறு, தேன், முக்கனிச்சாறு அனைத்தும் கலந்த கழனியில் விளைந்த நெற்பயிரைத் தின்றதால் எருமையின் கடை வாயிலும் பருவத்தே அவ்வினிய பயிர்களை

அரிந்த பிறை வடிவான அரிவாளிலும் அக்கதிரை இட்ட போரிலும் அதனைச் செய்த உழவர் கரங்களிலும் வருக்கைச் சுளையழித்துக் குவித்த களம் போன்ற செந்நெற்களங்களிலும் வண்டுகள் ஆரவாரித்தன என்று கூறும் பொழுது கருத்து விளக்கக் கற்பனை விளங்குகின்றது.90

திருவிடைக்கழி முருகர் பிள்ளைத் தமிழில் சிறுமியர் கட்டும் சிற்றிலில் முருகன் திருவடிகள் பட்டு விடுகின்றன. அதைக் கண்ட சிறுமியர் வேதங்களோ அன்றி அவற்றின் முடிவாகிய உபநிடதங்களோ மலையரசன் மகளாராகிய உமா தேவியார் மடித்தலமோ, மாறாத அன்பர்களுடைய மனக் குளிர் பூந்துறையோ தம்முடைய இச்சிறிய வீடு என வியக் கின்றனர். முருகனது திருவடிகள் தோயும் இத்தனை இடங் களைப் போலத் தம்முடைய வீடும் புண்ணியப்பேறு எய்திற்று என்று சிறுமியர் மகிழ்வைக் கூறும் பொழுது கருத்து விளக் கக் கற்பனை அமைந்துள்ளது.91

மேலும் இப்பிள்ளைத் தமிழில் கோலம் பொலிய நீராடிக் குலவு நுதல் வெண்ணீறணிந்து குளிர்நெய் தடவி நறுங்குஞ்சி ஜோதி முடித்து மை இட்டு ஆபரணங்கள் அணிந்து உச்சி மோந்து முருகனுக்கு உமாதேவியார் முத்தமிடுகிறார். முத்தம் இட்டு வெளியே விட்டிருப்பது தங்களுடைய சிற்றிலை அழிப்பதற்காகவா? எனச் சிறுமியர் குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவனாகிய முருகனிடம் வேண்டும் பொழுது கருத்து விளக்கக் கற்பனை அமைந்துள்ளது.92

புதுவை திரிபுர சுந்தரி பிள்ளைத் தமிழில் மேகங்கள் சஞ்சரிக்கின்ற சோலையிலுள்ள பலாப் பழத்தினின்று வழிந்த

தேன் ஆறாக ஓடி மிகாமல் உழுது வெற்றிலைக்காக ஏற் படுத்திய வழியான கால்வாய் மூலம் ஓடிச் சம்பா நெல் விளை கின்ற வயல்களில் நீர் போலப் பாய்ந்து புதிய வளம் தருகின்ற சிறப்புடைய புதுவை எனப் புதுவையின் வளம் கூறும் பொழுது கருத்து விளக்கக் கற்பனை அமைந்துள்ளது.[93]

மேலும் இவ்வகைக் கற்பனையினை ஆதி சங்கரர் பிள்ளைத் தமிழ்,[94] திருத்தவத்துறைப் பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ், [95] திருவானைக்கா அகிலாண்டநாயகி பிள்ளைத்தமிழ்,[96] திருப்பெருமணநல்லூர் திருவெண்ணீற் றுமை பிள்ளைத்தமிழ்,[97] திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ்[98] முதலிய நூல்களில் கண்டின் புறலாம்.

இவ்வாறு சைவ சமயப் பிள்ளைத்தமிழ் நூல்களில் குழந்தையாகப் பாவித்துப் பாடப் பெறும் பாட்டுடைத் தலைவர் அல்லது தலைவியின் சிறப்புகளைக் கூறும்பொழுதும் அத்தலைவன் அல்லது தலைவி எழுந்தருளியுள்ள ஊரின் வளம் கூறும்பொழுதும் அத்தலைவன் அல்லது தலைவி எழுந்தருளியுள்ள ஊரின் வளம் கூறும் பொழுதும் கற்பனைகள் இடம் பெற்றிருக்கின்றன.

## அடிக்குறிப்புகள்

(1) Winchester, C. T., Some Principles of Literary Criticism, P. 228, Macmillan, London, 1960.

(2) Shelly P. B., The Selected Poetry and Prose of Percy Bysshe Shelley, Edited by carlos Baker, P. 494, The Modern Literary, New york 1951.

(3) சுந்தரமூர்த்தி இ., திருக்குறள் அணிநலம், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, ப. 7., மு. ப. 1971.

(4) John Ruskin, Modern Painters, Vol. II. P P. 251 - 52 George Allen, London, 1903.

(5) சுப்பிரமணியன் டாக்டர் ச. வே. கம்பன் கற்பனை, ப. 43.

(6) திருநாவுக்கரசு, க. த. திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும், ப. 35.

(7) மேலது : 43 - 4.

(8) சுப்பிரமணியன் டாக்டர் ச. வே., கம்பன் கற்பனை, ப. 50.

(9) மேலது : 57.

(10) Winchester, C. T. Some Principles of Literary Criticism, PP. 123 - 130

(11) கலைக்களஞ்சியம், தொகுதி 1. ப. 212

(12) வரதராசன், டாக்டர் மு; இலக்கியத்திறன், ப. 121

(13) சுப்பிரமணியன் டாக்டர் ச. வே., கம்பன் கற்பனை, ப. 20

(14) பாரதியார் கட்டுரைகள், கலைமகள், கன்னித் தமிழ்ப் பதிப்பகம், மதுரை, ப. 91, மு. ப. 1956

(15) தமிழ்மொழியின் வரலாறு: ப. 45

(16) பா. எண் : 98

(17) மேலது : 99

(18) மேலது : 99

(19) சப்பாணி : 2

(20) செங்கீரை : 10

(21) காப்பு : 10

(22) நூலாசிரியர் கருத்து, பா. எண் : 2

(23) பா. எண் : 10

(24) செங்கீரை : 5

(25) மேலது : 7

(26) செங்கீரை : 5

(27) " அயல்சூழ் நாரை கணைக்கால்கண்
டணுகி அணுகிப் பின்தொடர
அன்னந் தோற்க நடந்துகளை
அகழ்ந்தே உறுப்பின் பகைதீர்த்துப்
புயல்சூழ் மலைபோல் முலைகள் தொறும்
பூட்டுநீல வடம்புரளப்
பொன்னங்கொடி போல் ஒல்கி ஒல்கிப்
பொருந்து மருதநிலம்"

பா. எண் : 54

(28) அம்புலி : 2

(29) பொன்னூசல் : 6

(30) ஆசிரியர் : பாவலர் சி. அன்பானந்தம், பா. எண் : 2

(31) மேலது : 51

(32) மேற்படி : 28

(33) "திங்கட் கொழுந்தைக் கொழுந்துபடு படர்சடைச்
செருத்திரு மணவாளன்மேற்
செழுமணப் பந்தரில் எடுத்தெறியும் அமுதவெண்
திரளையிற் புரளுமறுகாற்

பைங்கட் சுரும்பென விசும்பிற் படர்ந்தெழும்
பனிமிதி மிசைத்தா விடும்
பருவமட மாமெனவென் அம்மனை."
பா. எண்: 74

(34) " ஒள்ளொளிய பவளக்கொழுங்கால் மிசைப் பொங்கும்
ஒழுகொளிய வயிரவிட்டத்
தூற்றுஞ் செழுந்தண் நிலாக்கால் விழுந்தனைய
ஒண்தரள வடம் வீக்கியே
அள்ளிட வழிந்துசெற் றொளிதுளும் புங்கிரண
அருணரத் னப்பல் கைபுக்
காடுநின் தோற்றமப் பரிதிமண் டலம்வளர்
அரும்பெருஞ் சுடரையேய்ப்ப"
பா. எண்: 93

(35) " The way in which metaphor is used is a major test of poetic ability; only the greatest can handle is greatly."
Burton, S. H The Criticism of Poetry, P. 40

(36) " Metaphors are not ornamens of discourse they are direct expression of evalutions and are bound to occur when even we have storng feeling to express."

Hayakava, S. I. Language in Thought and Action, P. 122.

(37) பா. எண்: 9

(38) மேலது: 12

(39) மேலது: 60

(40) நூலாசிரியர்: மாசிலாமணி தேசிகர்

(42) " திண்மை படைத்த கயற்கொடி மாறன்
வெதுப்போடு கூனிமிரச்
செய்தமருந்து செழுந்தமிழ் வல்லி
தழைக்க விருத்தியதோ
வெண்மை படைத்த வெலும்புடலாக
நிறுத்திய வேதகனார்
வேதமுடித்த பழம்பொரு ளுண்மை
விளைத்தொழு வித்தகலா
வண்மை புதுக்கிய கற்பக மன்பர்கள்
வைத்த சரக்கறைசூழ்
வல்லம மணர்க்கு வழிப்பகை யீசன்
மனத்து மகிழ்ச்சி விடா
துண்மை விளைத்த சிவக்கலி கோப
னுருட்டுக சிறுதேர
உலகுடை யாளுத அந்தனியானை
யுருட்டுக சிறுதேரே "
பா. எண் : 3

(43) பா. எண் : 71

(44) நூலாசிரியர் : பாவலர் சி. அன்பானந்தம்,
பா. எண் : 4

(45) பா. எண்: 4

(46) மேலது: 41

(47) மேலது: 42

(48) மேலது: 61

(49) மேலது: 59

(50) **Richards, I. A. Principles of Literary Criticism. pp. 118-19, Rout ledge of kegan Panl Ltd, London 1961.**

(51) தண்டியலங்காரம், பக்கம் : 126 - 27

(52) பா. எண் : 27

(53) பா. எண் : 4

(54) சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள், கழகவெளியீடு, ப. 50

(55) பா. எண் : 10

(56) மேலது : 44

(57) "மிக்கவரு வெள்ளத் தெதிர்ந்தேறு பருவரால்
வேகத் துருண்டு போதும்
வேழத்தை முட்டுபு வெகுண்டு வெடிகொண்டுதாய்
விண்ணம் துளைத்து விரைவில்

புக்குமகிழ் மழஇளங் கன்றது தெறித்தெழீஇப்
போயதெங் கென்று நாடும்
புந்திப் பெருங்காம தேனுவின் மடித்தலப்
பொம்மல்தழை வெய்த முட்டத்

திக்குநிக பூப்பசுப் பொழிகின்ற பால்வரால்
செய்த புழையூ டிறங்கித்
திரைசுரை எறிந்துவரு குடிஞைக்கு முன்புதான்
செய்தபெய ரைப்பு துக்கும்

பக்குநவில் அருவளம் படுதொண்டை நன்னாட
பவளவாய் முத்த மருளே
பரவுசீர் உலகெலாம் விரவுசே வையர்பிரான்
பவளவாய் முத்த மருளே"
பா. எண் : 49

(58) "அனந்தான் வெளியுற நடைபயிலும்
அழகு கசியும் கலைமகளும்
அரம்பை மாரும் செழுந்திருவும்"

(59) பா. எண் : 26

(60) நூலாசிரியர்: *மாசிலா மணித் தேசிகர்*

(61) சிற்றிற் பருவம், பா. எண்: 2

(62) **' The creative imagination spontaneously selection among the elements given by experience and combines then into new wholes' wlineheter, C. T., some Principles of Literary Criticism, PP, 123 24**

(63) " சுரும்பர் துளைக்க வுவட்டெடுத்துச்
சொரியு மிரதச் செழுங் கரும்பைச்
சுவைத்துக் கதலிக் குலைசாடித்
தூங்குந் தெங்கம் பழஞ்சிதறி

விரிந்த பசுநெட் டிலைக்கமுகின்
மேவிக் ககனத் தருவையதன்
மீது படர்பூங்கொடிவழி போய்
மிதித்துக் குனித்து விளையாடி

விரிந்த கழையி னெடுங்கயிற்று
வழிபோய் நடிக்கும் பொருநர்திற
மானக் குரக்குக் குலங்குதிக்கும்
வளம்சேர் பொதும்பர் சூழ்குளத்தூர்

பரிந்து தொழுவோர் மனத்துறும்
பாகேதாலோ தாலேலோ
பணில முயர்த்த தரளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ”

தாலப்பருவம்: 5

(64) “கொங்கு விரிந்த நறுங்கமலங்கள்
கொழிக்கு மதுப்புனலாக்
குவிதர ஆழ்ந்துதிர் தண்ணிய தாது
குவிக்கு மெருக்குவையாய்

பங்கதிரந்த வயற்கண விளைந்து
பழுதெழு நெற்லை போய்ப்
பசும்புர வித்திரள் பூட்டிய தேரிற்
பரிதிக கடவுள் புடைப்

பொங்கொளி வெண்கவ ரித்தொகை வீசுவ
போல வொசிந்தசையும்
பொற்பு மிகுங்கம லாகரமேவிய
பூரணி மெய்யடியார்

தங்கள் பணிக்கென வெம்மை யளித்தவ
தாலோ தாலேலோ
தகரக் குழலா முதப் பிடியே
தாலோ தாலேலோ"
தாலப்பருவம் : 6

(65) பா. எண் : 26

(66) மேற்படி, தாலப் : 1

(67) சப்பாணி : 3

(68) முத்தப்பருவம் : 2, 4; வருகைப்பருவம் : 5,6.

(69) பா. எண் : 91

(70) பா. எண்கள் : 23, 33, 54, 56

(71) செங்கீரைப் பருவம் : 10

(72) சப்பாணிப் பருவம் : 6

(73) பா. எண் : 40

(74) சிற்றிறபருவம் : 1

(75) சிற்றிற்பருவம் : 2

(76) தாலப் பருவம், பா எண்கள்: 2,7

(77) பா, எண: 102

(78) The associative imagination associates with an object idea or emotion images emotionally akin"

Winchester, C T some Principles of Literary Criticism, p. 127

(79) வருகைப் பருவம், பா. எண் : 5

(80) செங்கீரைப் பருவம், பா. எண் : 2

(81) காண்க கட்டுரை: சைவ சமயப் பிள்ளைத் தமிழ் நூல்களில் விளங்கும் அம்புலிப் பருவமாண்புகள்.

(82) செங்கீரை : 1,4

(83) முத்தப்பருவம், பா. எண்கள் : 1,2,6

(84) தாலப்பருவம், பா எண்கள் : 1,7

(85) காப்புப்பருவம் : 8, சப்பாணிப் பருவம் : 9

(86) செங்கீரை : 6

(87) "The interPretative imagination Percieves spiritual value or significance and renders objects by Presenting those parts of qualities in which the spiritual value resides" Winchester, C. T. Some Principles of Literary Criticism, P. 130

(88) பா. எண் : 22

(89) செங்கீரைப்பருவம் : 8

(90) வருகைப்பருவம் : 7

(91) சிற்றிற் பருவம், பா. எண்: 1

(92) மேற்படி: 2

(93) தாலப் பருவம், பா. எண் : 6

(94) தாலப் பருவம், பா. எண்: 1, 4, செங்கீரைப் பருவம், பா. எண்கள்: 2, 3.

(95) தாலப் பருவம், பா. எண்கள்: 5, 6 செங்கீரைப் பருவம், பா. எண்கள் : 3,6

(96) செங்கீரைப்பருவம், பா. எண்கள் 1,2,4. சப்பாணிப் பருவம், பா. எண்கள் : 5,6,7; முத்தப்பருவம் பா. எண் : 9

(97) செங்கீரைப்பருவம், பா. எண்கள் : 6,7 சப்பாணிப் பருவம், பா. எண்கள் : 2,3

(98) தாலப்பருவம், பா. எண்கள் : 1,2; செங்கீரைப் பருவம்; பா. எண் : 7,8,9

## (18) உணர்த்தும் திறன்

இலக்கியத்திற்குரிய கூறுகள் பல. அவற்றுள் உணர்த்தும் திறம் மிகமிக இன்றியமையாததாகும். உணர்த்துதல் இல்லையேல் அவ்விலக்கியம் சிறப்புடையதாகாது. வாழ்க்கையே ஆயினும் கலையே ஆயினும் "யான் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்" என்று உணர்வைப் பற்றிப் பேசினால் பயன் விளையாது. அவ்வுணர்வுக்குக் காரணமான பொருளைப் பிறர் நன்கு உணருமாறு செய்தல் வேண்டும். இதுவே உணர்ச்சியை உணர்த்தும் வழியாகும். நூலாசிரியன் மனத்தில் விளங்கிய அனுபவமே படிப்பவரின் மனத்தில் விளங்குமாறு செய்தல் வேண்டும். அனுபவித்தல் என்ன என்று விளக்குதல் போதாது. அந்த அனுபவத்தையே தருதல்வேண்டும் ஒரு மனத்திலிருந்து மற்றொரு மனத்திற்கு அந்த அனுபவம் ஏற்றி அமைய வேண்டும்.

சைவ சமயப் பிள்ளைத் தமிழ் நூல்கள் அனைத்திலும் உணர்த்தும்திறன் சிறப்பாக அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது. 'பிள்ளைத்தமிழ்' என்றவுடன் யாவருக்கும் முதற்கண் நினைவிற்கு வருவது மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழே. இந்த அளவிற்குச்சிறந்து விளங்கும் இந்நூல் இங்குச் சான்றாய்வுக்கு மேற் கொள்ளப் பெற்று உணர்த்தும்திறன் ஆராயப் பெறுகின்றது.

இப்பிள்ளைத் தமிழில் குழந்தையாகப் பாவித்துப் பாடப் பெறும் பாட்டுடைத் தலைவியாகிய மீனாட்சியம்மையின் மண்ணாபுகள், அம்மையிடத்துச் சிவனடியார் ஈடுபடும் பான்மை, அம்மை அடியார்களது உள்ளத்துப் பெருக் கெடுத்தோடும் பேரானந்த வெள்ளமாய் அமையும் நிலை, தண்டமிழின் தனிப் பெருஞ்சிறப்புகள், இறையுணர்வுக் காட்சிகள், அகப் பொருள்,

புறப்பொருள் நலங்கள் மதுரைத்தல வரலாற்றுச் செய்திகள் பாண்டிய நாட்டின் பெருமை, பாண்டியனின் செம்மையான ஆட்சிச் சிறப்பு, மதுரை மாநகரின் இயற்கை வளம், செயற்கை நலம், தண்புனல் பெருக்கெடுத்தோடும் வையை, பொருநையின் மாண்புகள், குமரித்துறை, கொற்கைத் துறை, பொதியமலை முதலியவற்றின் வளங்கள் முதலான செய்திகள் உணர்த்தப் பெற்றுள்ளன. மேலும் இறைவி மதுரை மாநகரில் செழியர் திருமகளாய்த் தடாதகைப் பிராட்டியாய் அவதரித்து, தனி முதல்வனாகிய சிவபிரான் சவுந்தர பாண்டியனாகித் தடாதகையை மணந்து தமிழாட்சி புரிந்தது; குமரவேளும் உக்கிரப் பெருவழுதியாய் உதித்தது ஆகிய திருவிளையாடல்களும் இந்நூலில் உணர்த்தப் பெற்றுள்ளன.

இச்செய்திகளை நூலாசிரியர் எவ்வாறு உணர்ந்து இந்நூலில் உணர்த்தியிருக்கின்றாரோ அவ்வாறே கற்போரும் உணரும் அளவிற்கு இந்நூலில் உணர்த்தும் திறன் சிறப்பாக அமைந்துள்ளது. இந்நூலை இயற்றியவர் குமரகுருபரர். கல்வி கேள்விகளிலும் சைவப்பற்றிலும் சிறந்து விளங்கிய குமரகுருபரர் திருநெல்வேலி, திருக்குற்றாலம், திருச்சுழியல், திருக்கானப்பேர், திருவாடானை, திருப்புனவாயில், திருக்கொடுங்குன்றம், திருப்புவனம், திருப்புத்தூர், திருப்பெருந்துறை, திருவிராமேச்சுரம், திருப்பரங்குன்றம் முதலிய தலங்களை வணங்கி மதுரை மாநகரம் வந்தடைந்தார். அங்குள்ள பெரியாரெல்லாம் அடிகளை எதிர்கொண்டு மிக்க சிறப்புடன் வரவேற்றனர். அப்பெரும்பதியிலே திருமலை நாயக்கர் அரசு வீற்றிருந்தார். அவண், அங்கயற்கண்ணி சந்நிதியிலுள்ள ஒரு திருமடத்தில் அடியார்கள் தங்குமாறு

வேண்ட அடிகள் அமர்ந்து அம்மைமீது பிள்ளைத்தமிழ் ஒன்று பாடியருளினார்.

அம்மை கனவிலே திருமலை நாயக்கருக்குத் தோன்றித் தன் புதல்வன் திருவருள் பெற்றுப் பாடிய செந்தமிழ்ச் சிறு நூலைத் தான் கேட்க விரும்புவதற்காகக் கூறி மறைந்தார். அரசன் உடனே எழுந்து அமைச்சர் முதலானோரை அழைத்து நம்மூரில் வந்திருக்கும் பெரியவர் யாரென்று வினவ, அதற்கு அவர்கள் "வைகுண்ட நகரத்திலே பிறந்து ஐந்தாவது ஆண்டு வரை ஊமையாயிருந்து திருச்செந்திலாதிபன் திருவருளால் பேசும தன்மையும் பாடும் ஆற்றலும் பெற்றுத் துறவு பூண்டு சிவவேடத்துடன் பல திருப்பதிகளுக்குச் சென்று தொழுது இவண் போந்துள்ள குமரகுருபர அடிகள் என்பார் அங்கயற்கண்ணம்மைமீது ஒரு பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார்" என்றனர். பின் அவர்கட்கு அரசன் தன் கனவினைத் தெரிவித்து அவர்களுடன் அடிகள் வைகும் திருமடத்திற்கு ஏகி அடிகளை வாழ்த்தித்தொழுது அம்மைமீது பாடிய சிறுகாப்பியத்தைத் தான் கேட்க விருப்புவதாகக் கூற, அடிகள் அவ்வாறே செய்யலாம் என்று ஏற்றுக் கொண்டு திருநீறு அளித்தார். நாயக்கர் அதனை ஏற்றணிந்து நன்னாள் ஒன்று குறித்து அந்நாளிலே அரங்கேற்றம் தொடங்குவித்தார். அடிகள் கயற்கண் நாயகியை வணங்கி அரசன் முதலிய யாவரும் கூடிய பேரவை பெருமகிழ்வு எய்தும் வண்ணம் பிள்ளைத்தமிழினைத் தமது பெருஞ் சொல்லால் விளக்குவான் புகுந்து ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பருவமாகப் படித்து வந்தார்.

வருகைப் பருவம் அரங்கேற்றும் நாளில் அங்கயற் கண்ணி அருச்சகரின் குழந்தை வடிவினளாய்த் திருமலை

நாயக்கர் மடிமீது வீற்றிருந்தார். அப்பருவத்திலே,

"தொடுக்குங் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
சுவையே அகந்தைக் கிழங்கையகழ்ந்

தெடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்
கேற்றும் விளக்கே வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே எறிதரங்கம்

உடுக்கும் புவனங் கடந்து நின்ற
ஒருவன் திருவுள் ளத்திலழ
கொழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே மதுகரம்வாய்

மடுக்கும் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே"2

என்னும் பாடலை அடிகளார் உள்ளம் உருகப் பாடினார். தொடுக்கப் பெறும் தெய்வத் தன்மையுடைய பழைய பாடல்களாகிய மாலையின் பொருளாய் இருப்பவளே! மணம் மிகுந்த இனிமை முதிர்ந்த துறைகள் அமைந்த இனிய தமிழில் ஒழுகுகின்ற இன்சுவை போன்றவளே! ஆணவமாகிய கிழங்கைத் தோண்டி எறியும் தொண்டர்களின் மனமாகிய கோவிலில ஏற்றப்பெறும் விளக்கே! வளர்கின்ற சிகரத்தையுடைய இமய மலையில் விளையாடுகின்ற இளைய மெல்லிய பெண்யானையே!

வீசுகின்ற அலைகளையுடைய கடலை ஆடையாக உடுத்த பூமிக்கு அப்பாற்பட்ட ஒப்பற்ற பரமசிவன் தனது சிறந்த மனத்தில் அழகு வழியும்படி தீட்டிப் பார்த்திருக்கும் உயிருடன் கூடிய சித்திரமே! வண்டுகள் தேனை வாய் மடுத்துத் துயில் கின்ற கூந்தல் காட்டைத் தாங்கி நிற்கும் இளமையான வஞ்சிக் கொடி போன்றவளே! வருக, மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வே! வருக, வருக! என அழைப்பதாகக் குமரகுருபரர் பாடியபொழுது அங்கயற்கண்ணி அரசன் கழுத்திலிருந்த முத் தாரத்தை எடுத்து அடுத்தப்பாட்டு முடிவதற்குள் அடிகள் கழுத்திலிட்டு மறைந்தருளினாள். இவ்வியப்புமிக்க அருட் செயலைக் கண்டு எல்லோரும் இறும்பூதெய்திப் பேரானந்தக் கடலில் திளைத்தனர்.

மன்னர் அடிகளின் மாண்பினை வியந்து பிள்ளைத்தமிழ் அரங்கேற்றி முடிந்தபின் அடிகளைச் செம்பொன்னாலான அரியணை மீதிருத்தி, அவர் திருமேனியைப் பொன்னாலும் அணிகளாலும் மூழ்குவித்து, வீரக்கழலை அவர் திருவடியில் சாத்தினார். யானை, குதிரை, சிவிகை, குடை, கொடி முதலிய பல விருதுகளும் கொடுக்கப்பெற்றன.[3]

இவ்வரலாற்றையும் இப்பாடலின் சொற்சுவை, பொருட் சுவை முதலியவற்றையும் நோக்கும் பொழுது மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழில் உணர்த்தும் திறன் செம்மைாக அமைந் துள்ளது எனலாம். குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய மீனாட்சி அம்மையே, வருகைப் பருவத்தில் வருக! வருக!! என்று பாடி அழைக்கும் பொழுது நேரில் வந்தாள் என்றால் பாட்டின் உயிர்ப்புத் தன்மையாகிய உணர்த்தும் திறன் முழுமையாக அமைந்துள்ளதை அறிய முடிகின்றது பழம்பாடல் தொடையின் பயனே! தமிழில்

ஒழுத நறுஞ்சுவையே! தொழும்பர் உளக்கோவிலில் ஏற்றும் விளக்கே! இளமென் பிடியே! உயிரோவியமே! வஞ்சிக் கொடியே! மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வே! என்னும் விளிகள் ஒவ்வொன்றும் உவமையாகு பெயராய் அம்மையின் தெய்வத்திருவருட் செயலைத் தெற்றென விளக்குகின்றன. "அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும் தொழும்பர்" என்பது மக்கள் உள்ளமாகிய பள்ளத்தில் வேரூன்றிக் கிழங்கு போல் பருத்து இடங்கொண்டிருப்பதனால் அதனைக் கிழங்கு என்றும் அக்கிழங்கினை வேருடன் பறித்தெறிந்தவரே தொண்டராவர் என்றும், அவருள்ளமே தெய்வத்திற்குத் திருக்கோவில் ஆகும் என்றும் பொருள் உணர்த்துவது சிறப்புடையதாகும்.

செங்கீரைப் பருவத்தில,

"நீராட்டி ஆட்டுபொற் சுண்ணந் திமிர்ந்தள்ளி
நெற்றியில் தொட்டிட்டவெண்
நீற்றினொரு புண்டரக் கீற்றுக்கும் ஏற்றிடவொர்
நித்திலச் சுட்டிசாத்தித்

தாராட்டு சூழியக் கொண்டையும் முடித்துத்
தலைப்பணி திருத்திமுத்தின்
தண்ணொளி ததும்பும் குதம்பையொடு காதுக்கொர்
தமனியக் கொப்புமிட்டுப்

பாராட்டு பாண்டிப் பெருந்தேவி திருமுலைப்
பாலமுதம் ஊட்டியொருதின்
பால்நாறு குமுதம் கனிந்தூறு தேறன்தன்
பட்டாடை மடநனைப்பச்

சீராட்டி வைத்து முத்தாடும் பசுங்கிள்ளை

செங்கீரை ஆடியருளே

தென்னற்கும் அம்பொன்மலை மன்னற்கும் ஒரு செல்வி

செங்கீரை ஆடியருளே"4

என்னும் பாடலில் முதலில் தாய்மார் குழந்தையை எடுத்து நீராட்டுவதையும் பின் துடைத்துச் சுண்ணம் பூசுவதையும், நெற்றியில் வெண்ணீறு பூசுவதையும், பொட்டிடுவதையும் நெற்றிச்சுட்டி சாத்துவதையும் உச்சிக் கொண்டை முடிப்பதையும், தலையில் பல அணிகள் புனைவதையும் செவியில் குதம்பையும் கொப்பும் அணிவதையும் காண முடிகின்றது. இவ்வாறு அழகு செய்த பின் கொங்கைப் பாலை ஊட்டுகின்றனர். பாலூட்டிய பின் வாயில் கனிந்தூறும் எச்சில் பட்டாடையை நனைக்கும்படி மடியில் வைத்துப் பாராட்டுகின்றனர் என முறையே நூலாசியர் உணர்த்தியிருப்பதைக் காணும்பொழுது உலகியல்திறன் நன்கு வெளிப்படுவதைக் காணமுடிகின்றது.

இப்பிள்ளைத்தமிழில், குழந்தையாகப் பாவித்துப் பாடப்பெறும் பாட்டுடைத் தலைவியாகிய மீனாட்சியம்மை வையை ஆற்றுக்கு நீராட வாணியுடன் சென்றாள். வாணி அம்மையிடம் அம்மையின் காதலர் முன்னாளில் பிட்டுக்கு மண் சுமந்த பெருமை பெற்ற இடம் இதுதான் என்று கூறினாள். அதைக்கேட்டவுடன் அம்மை மயங்கி வருந்திக் காதலால் கசிந்து கண்ணீர் வார நெடிது நின்றாள் அதனைக் கண்ட மற்றொரு தாயார் அம்மையிடம் தாங்கள் இவவாறு கண்ணீர் வடித்தால் வையை வெள்ளம் பெருகி விடுமே வெள்ளம்

பெருகினால் மீண்டும் அம்மையின் காதலர் மண்சுமக்க வேண்டுமே. இவருக்கு வேலை கொடுப்பது அம்மைக்குத் தகுமா? விழிநீர் அழிவதை நிறுத்தி விரைந்து நீராடவா என அழைக்கின்றாள்.

மற்றொருதாயர் அம்மையிடம் விரைவாக நீராடுமாறு வேண்டுகின்றாள் அவ்வாறு ஆடினால் அம்மையின் கொங்கையில் அணிந்த குங்குமச்சேறு வண்டலாகிமண்ணோடு கலந்து மணம் நிறைந்த மண்ணாகும். அம்மையின் காதலர் வறிதாய வண்டல் மண்ணையே கூடைகாட்டி வாரிச்சுமந்தவர். மணம் பெற்ற மண்ணைக் கண்டால் விரும்பி வருவார். இது அம்மை தன் காதலரைக் காண்பதற்கு நல்ல சூழ்ச்சிதான். மண்ணைச் சுமக்க அடிக்கடி வந்தால் அம்மையின் மாற்றவள் ஆகிய கங்கைக்குச் சடையில் குடியிருப்பும் ஒழியும் மாற்றவள் தொலைந்தால் அம்மைக்கு மன அமைதியும் உண்டாகும். அம்மை நீராடல் நல்ல செயல்தான் ஆயினும் அவர் மண் சுமக்க வந்தால் பிட்டுகட்டுக் கொடுப்பதற்கு ஒரு முதியவள் வேண்டுமே! அடித்து வேலை வாங்குவதற்குப் ஓர் ஆள் வேண்டுமே! இவவிரண்டு குறைகளையும் எப்படி நிறைவிப்பது எனவே ஆராய்ந்து செய்வோம் என அம்மையிடம் நீராட வேண்டுகின்றனர் தாயர்.

இக்கருத்துகள் அமைந்த,

“ இழியும் புனல்தண் துறைமுன்றில்
இதுவெம் பெருமான் மண்சுமந்த
இடமென் றலர்வெண் கமலப்பெண்
இசைப்பக் கசிந்துள் ளுருகியிரு

விழியும் சிவப்ப ஆனந்த
வெள்ளம் பொழிந்து நின்றனையால்
மீண்டும் பெருக விடுத்தவற் கோர்
வேலை இடுதல் மிகையன்றே

பிழியும் நறைக்கற் பகமலர்ந்த
பிரச மலர்ப்பூந் துகள்மூழ்கும்
பிறைக்கோட் டயிரா வதங்கூந்தற்
பிடியோ டாடத் தேனருவி

பொழியும் பொழிற்கூட டலிற்பொலிவாய்
புதுநீ ராடி அருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி அருளுகவே " 5

" மறிக்கும் திரைத்தண் புனல்வைகை
வண்டல் இடுமண் கூடைகட்டி
வாரிச் சுமந்தோர் அம்மைதுணை
மணிப்பொற் குடத்திற் கரைதூற்றும்

வெறிக்குங் குமச்சே றெக்கரிடும்
விரைப்பூந் துறைமண் பெறினொருத்தி
வெண்பிட் டிடவும் அடித்தொருவன்
வேலை கொளவும் வேண்டுமெனக்

குறிக்கும் இடத்தில் தடந்தூநீர்
குடையப் பெறினுக் கங்கைதிருக்
கோடீ ரத்துக் குடியிருப்பும்
கூடா போலும் பொலன்குவட்டுப்

பொறிக்கும் சுறாக் கொடியுயர்த்தாய்
புதுநீ ராடி அருளுகவே
பொருநைத் துறைவன் பொற்பாவாய்
புதுநீ ராடி அருளுகவே"

என்னும் பாடல்களைப் படிக்கும் பொழுது நூலாசிரியரின் உணர்த்தும்திறன் நன்கு வெளிப்பெறுகின்றது. அவர் பெற்ற அனுபவம் என்ன எனறு சொல்லாமல் அந்த அனுபவத்தையே படிப்போர் அனுபவிக்கும்படி பாடல்கள் அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

அன்றியும் இப்பிள்ளைத்தமிழில் பாட்டுடைத் தலைவியாகிய மீனாட்சியம்மை அணிகலன்களெல்லாம் அணிந்து திருமங்கல நாணும் தாங்கிப் பொன்னூசலில் வீற்றிருக்கும் திருக்கோலத்தை,

"இருபதமும் மென்குரற் கிண்கிணியும் முறையிட்
டிரைத்திடும் அரிச்சிலம்பும்
இறுமிறு மருங்கென் றிரங்குமே கலையும் பொன்
எழுதுசெம் பட்டுவீக்கும்

திருவிடையும் உடைதார மும்ஒட்டி டியாணமும்
செங்கைப் பசுங்கிள்ளையும்
திருமுலைத தரளஉத் தரியமும் மங்கலத
திருநாணும் அழகொழுகநின்

றருள்பொழியும் மதிமுகமும் முகமதியின் நெடுநில
வரும்புகுறு நகையும் ஞான

ஆனந்த மாக்கடல் குடைந்துநழை மகரத்தொ
டமராடும் ஓடரிக்கண்

பொருகயலும் வடிவழகு பூத்தசுந் தரவல்லி
பொன்னூசல் ஆடியருளே
புழுகுநெய்ச் சொக்கர்திரு அழகினுக் கொத்தகொடி
பொன்னூசல் ஆடியருளே"7

என்று பாதாதிகேசமாக வர்ணித்திருக்கின்ற காட்சியைப் படிக்கும்போது அம்மையை நேரில் கண்டு அருள் பெற்ற தாகவே தோன்றுகின்றது.

இவ்வாறு குமரகுருபரர் பெற்ற அனுபவங்களை நல்ல வடிவத்தோடும் கற்பனை அழகோடும் கலந்தளித்திருப்பதனால் தான் அவர்தம் படைப்பு காலங் கடந்து என்றும் நின்று நிலவுகின்றது. தம் ஆழ்ந்த அனுபவத்தைத் திரும்பச் சொணர்ந்து முழுதுமாக உணரவல்ல உள்ளம் படைத்தவர் களும், சில வேளைகளில் அந்த அனுபவத்தை வெளியிட் டுரைக்கத் தக்க சொற்கள் கிடைக்காமல் தடுமாறுதல் உண்டு. குமரகுருபரர் இந்தத் தடுமாற்றத்திற்கு ஆளாகாமல் ஏற்ற இடங்களில் ஏற்ற சொற்களையும் சொற்றொடர்களையும் கையாண்டு உணர்த்தும் திறனை நன்கு வெளிப்படுத்தியிருப் பதை அறிய முடிகின்றது.

சான்றாக நூலாசிரியர் குழந்தையாகப் பாவித்துப் பாடப் பெறும் பாட்டுடைத் தலைவியாகிய மீனாட்சியம்மையைக்குறிப் பிடும் பொழுதெல்லாம் மலைவல்லி, கப்பூரவல்லி, அபிராம வல்லி, மாணிக்கவல்லி, மரகதவல்லி, அபிடேகவல்லி, 8 சயற் கட்குமரி, 9 அங்கயற்கண் அமுது, 10 பாண்டிப்பிராட்டி, 11

அருள்சூற்கொண்ட அங்கயற்கண்ணமுது, 12 சங்கம் வளர்ந்திட நின்ற பொலன்கொடி, 13 மலயத்துவசன் வளர்த்த பசுங்கிளி, 14 குடை நிழலிற் புவிமகளை வளர்த்தவள், 15 பூத்தலத்து முளைத்த முழுமுதல், 16 முக்கட்சுடர்க்கு விருந்திடும் மும்முலையாள், 17 தெய்வத் தமிழ்க்கூடல் களையாத்தழைந்தவள், 18 மதுரைப் பதிபுரப்பவள், 19 செழியர் கோமகள், 20 முழுதுல குடையவொர் கவுரியர் குலமணி, 21 முதுதமிழுததியில் வருமொரு திருமகள், 22 கடம்பாடவிக் கயற்கண் நாயகி, 23 மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வு, 24 அரசர் கோமகள், 25 மதுரைத் துரைப்பெண், 26 மதுரைத் திரு, 27 மதுரைததலைவி, 28 அழகுதழைந்த கல்யாண சுவுந்தரி, 29 மதுரைத் துரை மகள், 30 விடைக்கொடியாவர்கொரு கயறுகொடி கொடுத்த கொடி, 31 பொருநைத துறைவன் பொறபாவை, 32 பொருநைத துறையொடு குமரித துறையவள், 33 புழுகுநெய்ச் சொக்கர் திருவழகினுக் கொத்த கொடி, 34 மதுராபுரிப்பொலி திருப்பாவை, 35 மதுராபுரி மடக்கிள்ளை, 36 மதுரைநாயகி ,37 போர்க்கோலமே திருமணக் கோலமான பெண், 38 கூடற்பெருஞ்செல்வி, 39 வடிவழகு பூத்த சுந்தர வல்லி, 40 எனத் தக்க சொல், சொற்றொடர், அடைமொழி முதலியவற்றுடன் உணர்த்தியிருப்பதைக் காணமுடிகின்றது. இவை போன்றே இந்நூல் பாடல்கள் முழுவதும் ஏற்ற இடங்களில் ஏற்ற சொற்களையும் சொற்றொடர்களையும் அடைகளையும் பெய்து வைத்திருப்பதைக் காணமுடிகின்றது.

இலக்கிய ஆசிரியரின் இறைவன் கைக்கருவி. அருட் கவிஞன் இறைவனுடைய கருவியாவான். இசைப் புலவனுடைய புலமைத் திறமன்றோ யாழிலும் பிற இசைக்கருவிகளிலும்

இசையாய்மலர்வது. எனவே இசைக்குக் காரணம இசைப்புலவன் இசைக்கருவிகளல்ல. 41 இன்னவாறே இலக்கியத்திற்குக்கர்த்தா இறைவனேயாம்; புலவனன்று; அருட்புலவன் அவன் கையிற் கருவியே ஆவான். இப்பரிசை உள்ளபடி அறிந்து தன்அறிவின் முனைப்பை விட்டொழித்து அவன் கையில் தக்க கருவியாய் அமையும்படி தன்னைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டியது ஆசிரியரின் கடமை. இப்போக்கும் அவனிடத்தில் இயற்கையாய அமைந்திருக்கும். 42 அதன்படி ஒழுகும் நிலையிலேயே இறைவன் அருளால் இ ல க் கி ய ம் மலரும். 43 இவவுண்மைகள் குமரகுருபரர்க்கும் அவருடைய நூல்களுக்கும் மிகவும் பொருந்தும். நூலாசிரியர் நோக்கம் தாமுணர்ந்த இறையுணர்வை பிறர்க்கும் அளித்து இன்புறுவதே ஆகும். மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழைப் படிக்கும்பொழுது நூலாசிரியர் பெற்ற அனுபவத்தைச் சிறிதும மாற்றம் இல்லாமல் அப்படியே பெறமுடிகின்றது என்பதை நூலைக் கற்போர் உணர்வர்.

## அடிக்குறிப்புகள்

(1) Abercrombie, L., Principles of Literary Criticism, P. 34

(2) பா. எண் : 61

(3) சுப்பிரமணிய பிள்ளை, கா; குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், பக். 4-6.

(4) பா. எண் : 13

(5) மேற்படி : 89

(6) மேற்படி : 90

(7) மேற்படி : 102

(8) மேற்படி : 1

(9) மேற்படி : 5

(10) மேற்படி : 9

(11) மேற்படி : 23

(12) மேற்படி : 29

(13) மேற்படி : 31

(14) மேற்படி : 29

(15) மேற்படி : 43

(16) மேற்படி : 43

(17) மேற்படி . 49

(18) மேற்படி : 50

(19) மேற்படி : 51

(20) மேற்படி : 52

(21) மேற்படி : 53

(22) மேற்படி : 55

(23) மேற்படி : 58

(24) மேற்படி : 68

(25) மேற்படி : 72

(26) மேற்படி : 73

(27) மேற்படி : 79

(28) மேற்படி : 80

(29) மேற்படி : 82

(30) மேற்படி : 83

(31) மேற்படி : 89

(32) மேற்படி : 91

(33) மேற்படி : 93

(34) மேற்படி : 94

(35) மேற்படி : 95

(36) மேற்படி : 96

(37) மேற்படி : 98

(38) மேற்படி : 101

(39) மேற்படி : 102

(40) இரவீந்திரநாத்தாகூர், கீதாஞ்சலி : 1

(41) John Milton, Paradiye Lost, Book I 6-10.

(42) முத்து வீராசாமி நாயுடு ஜே. இலக்கியச் செல்வி, ப-36.

# (19) பதிப்புப்பணி

அகம் புறம் என்னும் இலக்கிய மரபு மிகு பழங் காலத்திய தமிழிலக்கியத்தை இனங்காண உதவும் ஒரு வரையறை. அறம் பற்றிய நீதி நூல்கள் என்று பிரித் தறிவது தமிழிலக்கிய வரலாற்றின் பிறிதோர் அடிப்படை பொருட்டொடர்நிலைச் செய்யுள் என்னும் காப்பிய அணுகு முறையை ஒட்டித் தோன்றிய இலக்கியங்களைப் பெருங் காப்பியம், சிறுகாப்பியம் என்று வகைப்படுத்திக் காண்பது தமிழிலக்கிய வரலாற்றில் எழுந்த மற்றொரு இலக்கியக் கொள்கையைக் காட்டுவது. துதிப்பாடல்கள், தோத்திரப் பாடல்கள் என்னும் வகையில் இசைத்தமிழ் பெருகி வளர்ந் துள்ளதைப் பார்க்காமல இருக்க முடியாது. புராண இதிகா சங்களைக் கூறு படுத்திப் பல்வேறு சமய சார்பான நூல் களைப் பிரித்தறிவது மேலும் ஓரிலக்கிய நெறியாக உள்ளது. தத்துவ விளக்க நூல்களைப் பிரித்துப் பார்த்தலும் தமிழி லக்கிய வரலாற்றின் ஓர் மதிப்பீட்டுக்கு உதவுகிற கொள் கையாக உள்ளது. முதல்நூல், வழிநூல், சார்புநூல், கருவிநூல் என்றெல்லாம் இலக்கியங்களைச் சீரமைத்துப் பிரித்துணர்வது ஒரு காலக்கட்டத்தில் நிகழ்ந்துள்ளது.

உரைநடை இலக்கியங்களைச் செய்யுள் இலக்கியத் தினின்றும் வேறுபடுத்திக் காண்பதும் ஒரு முறையாக உள்ளது இலக்கண இலக்கியங்களைப் பரிணாமப் பரிமாண பார்வைக்கு உட்படுத்துவதில் நாவல், சிறுகதை, நாடகம் முதலிய பிரிப்பிற்கு இடமில்லை என்று சொல்ல முடியாது அளவிற்குத் தமிழிலக்கிய வரலாறு ஓங்கிஉயர்ந்துள்ளதை அறிய வேண்டியுள்ளது. இவ்வாறு காலந்தோறும் தமிழிலக்கிய இலக்கணங்கள் தோன்றி உருவாவதற்கு அரசியல் சமூக சமய தொழில் வணிக முறைகளோடு அறிவியல் வளர்ச்

சியும் மாறி மாறி வந்துள்ள காரணிகள் என்று கண்டு சீர்தூக்கி எடை போட்டு வகைப்படுத்த இயலும்.

இந்தவகையில் வேற்று நாட்டார் வருகையின் தாக்கத் திற்கு வாழ்க்கைத் துறைகள் பலவும் உள்ளான போது கலை இலக்கியத்துறையிலும் மாற்றங்கள் நிகழ்ந்துள்ளதை மறுத்து ஒதுக்குவதற்கு இல்லை. எழுது பொருள் உள்ளிட்ட அச்சு வசதிகளும் இலக்கண இலக்கிய மாற்றுதல்களுக்கு இடம் தந்து வந்துள்ளதைத் தமிழிலக்கிய வரலாற்றில் சுட்டிக் காட்டாமல் இருக்க முடியாது. இன்னோரன்ன படைப்பு விளக்கக் காரணிகளால் தமிழில் சிறுபிரபந்தங்கள் தனியொரு வகை என்று மதிப்பிடுவது ஏற்றுக் கொள்ளப்பெற்று வந்துள்ளது என்பதைப் பாட்டியல் நூல்கள் கொண்டு உணர முடிகின்றது. இந்த வரலாற்று உள்ளுணர்வில் பதிப்பு முயற்சிக்கும் இடமுண்டு.

இங்கே சிறப்பாய்வுக்கு இடமான சைவ சமயப்பிள்ளைத் தமிழ் நூல்களின் தோற்றம், தொன்மை, வளர்ச்சி முதலிய வரலாற்று உண்மைகளை முழுமையாகவும் அறிவியல் முறை யிலும் அறிந்து, மதிப்பிடுவதற்குப் பிள்ளைத்தமிழ் நூல்களின் அச்சு வெளிப்பாட்டிற்கான பதிப்பு முயற்சிகளை அறிய வேண் டியது அவசியமாகின்றது.

பழந்தமிழ் நூல்களை ஏட்டுவடிவில் தேடித்திரட்டி ஆராய்ந்து தக்கநூல் வடிவில் வெளிப்படுத்த முயன்றவர் களில் ஆறுமுக நாவலர், சி. வை. தாமோதரம் பிள்ளை, தில் லையம்பூர்க் கவிராஜபண்டிதர், வெங்கடாசல முதலியார், இராசகோபால பிள்ளை, விசாகப் பெருமாளையர், மழவை.மகா லிங்க ஐயர், புதுவை நயனப்ப முதலியார், கொட்டையூர் சிவக்

கொழுந்து தேசிகர், வில்லிவாக்கம் தாண்டவராய முதலியார், களத்தூர் வேதகிரி முதலியார், இராமானுஜக் கவிராயர், திருத்தணிகை சரவணப் பெருமாளையர், சோழவந்தான் அரசஞ் சண்முகனார், கா. சு. பிள்ளை, டாக்டர் உ. வே. சாமிநாதய்யர், மயிலை சீனி வேங்கடசாமி, பின்னத்தூர் நாராயணசாமிஐயர் முதலானோர் முன்னின்று தொல்காப்பியம், எட்டுத்தொகை பத்துப்பாட்டு, பதினென் கீழ்க்கணக்கு நூல்கள், ஐம்பெருங் காப்பியங்கள் கம்பராமாயணம், பெரியபுராணம் முதலிய நூல்களை ஏட்டிலிருந்து அச்சிற்குக் கொண்டு வந்து சரி பார்த்து திருந்திய பதிப்புக்களாக வெளிக் கொண்டு வந்த முயற்சிகளோடு சைவ சமயப் பிள்ளைத் தமிழ்நூல்கள் ஏட்டு வடிவில் இருந்து அச்சுவடிவிற்குக் கொண்டுவர மேற்கொள்ளப் பெற்ற முயற்சிகளைக் கண்டறிந்து சுட்டுவது பிள்ளைத் தமிழ் இலக்கிய வரலாற்றின் பரிணாமப் பரிமான வளர்ச்சியை கணக்கிட்டறிய உதவுகின்றது. நூல்கள் பதிப்பிக்கப் பெற்ற கால வரிசைப்படி இக்கட்டுரை அமைகின்றது

புரசை சபாபதி முதலியாரும் சபாபதி செட்டியாருமே பிள்ளைத்தமிழ் நூலை முதன் முதலில் பதிப்பித்திருப்பதாக அறிய முடிகின்றது. இவர்கள் சுப்பிரமணிய ஐயர் இயற்றிய தேவைப் பிள்ளைத்தமிழை 1869 - ஆம் ஆண்டு சென்னை வர்த்தமான தரங்கிணி சாலை அச்சுக்கூடம் வாயிலாகப் பதிப்பித்திருப்பதாக அறிய முடிகின்றது

1878 - ஆம் ஆண்டில், கந்தப்ப அய்யர் இயற்றிய திருத்தணிகைப் பிள்ளைத்தமிழை சாத்தம் பாக்கம், ஆதி கலாநதி அச்சுக்கூடம் வாயிலாகக் கிருஷ்ணசாமி முதலியாரும் தண்டபானி சுவாமிகள் இயற்றிய சென்னை மாநகர்க் கந்தசாமி பேரில் பிள்ளைக்கவி என்னும் நூலைச் சென்னை

புஷ்பாரதச் செட்டியாரது கலாரத் நாகர அச்சுக் கூடத்தின் வாயிலாகச் சுப்பராயச் செட்டியாரும் வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றன.

1880 - ஆம் ஆண்டில், தியாகராசச் செட்டியார் இயற்றிய உமையம்மைப் பிள்ளைத்தமிழைச் சென்னை, வித்தியா வர்த்தினி அச்சுக்கூடம் வாயிலாக இராமகிருஷ்ணச் செட்டியார் வெளியிட்டிருப்பதாகக் காணமுடிகின்றது.

1882 - ஆம் ஆண்டில், கிருஷ்ணசாமி உபாத்தியாயர் இயற்றிய நாகப்பட்டினம் நீலாயதாட்சியம்மைப் பிள்ளைத் தமிழைச் சென்னை, மிமோரியல் அச்சுக்கூடம் வாயிலாகக் கண்ணுப் பிள்ளை என்றும் வழங்கும் இராமலிங்கம்பிள்ளை வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது

1885 - ஆம் ஆண்டில், சிந்நயச் செட்டியார் இயற்றிய மயிலைமலைப் பிள்ளைத்தமிழைச் சென்னை கலாரத்நாகர அச்சுக்கூடம் வெளியிட்டிருப்பதாக அறிய முடிகின்றது.

1887 - ஆம் ஆண்டில், கனகசபைத் தம்பிரான் இயற்றிய ஆதிபுரி வடிவுடையம்மைப் பிள்ளைத்தமிழைச் சென்னை கலாரத்நாகரம் அச்சுக்கூடம் வாயிலாக ஊ. புஷ்பரதச் செட்டியார் வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது. மேலும் இதே ஆண்டில் சிவப்பிரகாசர் சுவாமிகள் இயற்றிய சிவஞான பாலைய தேசிகர் பிள்ளைத்தமிழைச் சென்னை, மிமோரியல் அச்சுக்கூடம் வாயிலாக இராமலிங்க சுவாமிகள் வெளியிட்டிருப்பதாக அறிய முடிகின்றது.

1888 - ஆம் ஆண்டில், தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் இயற்றிய வடதிருமுல்லை வாயில் கொடியிடை

யம்மை பிள்ளைத்தமிழைச் சென்னை கலாரத்நாகர அச்சுக் கூடம் வாயிலாகத் திருவேங்கட நாயுடு வெளியிட்டிருப்ப தாகத் தெரிகின்றது.

1890 - ஆம் ஆண்டில், சொக்கலிங்கச் சிவப்பிரகாசச் சுவாமிகள் இயற்றிய பெரியநாயகியம்மன் பிள்ளைத்தமிழைச் சென்னை கலாரத்நாகர அச்சுக்கூடம் வாயிலாகப் பூவை கலியாண சுந்தர முதலியார் வெளியிட்டிருப்பதாக அறிய முடிகின்றது.

1894 - ஆம் ஆண்டில் வி. நடராச கவிராயர் இயற்றிய வயிரவன் கோவில் வடிவுடையம்மை பிள்ளைத் தமிழைச் சென்னை கலாரத் நாகர அச்சுக்கூடம் வெளியிட் டிருப்பதாக அறிய முடிகின்றது.

1895 - ஆம் ஆண்டில், மருகமலை, மருதமலை தேவஸ்தானத்தைச் சார்ந்த குழந்தைசாமிக் குருக்களும் பிரதி நிதிகளும் மருதாசலக்கடவுள் பிள்ளைத்தமிழை வெளியிட்டி ருப்பதாகத் தெரிகின்றது. அதே ஆண்டில் அரன்வாயில் மகாவித்துவான் வேங்கட சுப்புப்பிள்ளை இயற்றிய கச்சிக் குமரக் கோட்டக்கடவுள் பிள்ளைத்தமிழைச் சென்னை, இந்து யூனியன் அச்சியந்திரசாலை வாயிலாக ம. அ. இராமநாதச் செட்டியார் வெளியிட்டிருப்பதாக அறிய முடிகின்றது.

1896 - ஆம் ஆண்டில் காஞ்சி சபாபதி முதலியார் இயற்றிய திருக்குடந்தை வடிவேலன் பிள்ளைத் தமிழைச் சென்னை கலாரத்நாகர அச்சுக்கூடம் வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது.

1899 - ஆம் ஆண்டில் மு. ரா. அருணாசலக்கவிராயர்

இயற்றிய திருப்பரங்கிரி பிள்ளைத்தமிழைச் சென்னை மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடம் வெளியிட்டிருப்பதைக் காணமுடிகின்றது.

1902-ஆம் ஆண்டில் அந்தகக்கவி வீரராகவர் இயற்றிய சேயூர் முருகன் பிள்ளைத் தமிழை கற்குளம் குப்புசாமி முதலியார் வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது.

1903-ஆம் ஆண்டில் சோணாசல பாரதியார் இயற்றிய் கம்பை முருகன் பிள்ளைத் தமிழைச் சென்னை, கலாரத் நாகர அச்சுக்கூடம் வாயிலாகக் கம்பைச் சந்நதி முறை வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது.

1909 - ஆம் ஆண்டில் வீரபத்திரக்கவிராயர் இயற்றிய குமரமலைக்குமரேசர் பிள்ளைத்தமிழைச் சென்னை மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை வாயிலாக வீரபத்திரக் கவிராயரும் நா. கதிரேசன் செட்டியாரும் வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது.

1910 - ஆம் ஆண்டில், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இயற்றிய மணவைத் திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ், திருவானைக்கா ஸ்ரீ அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ், உறையூர் ஸ்ரீகாந்திமதியம்மை பிள்ளைத்தமிழ், திருக்குடந்தை ஸ்ரீமங்களாம்பிகை பிள்ளைத்தமிழ், திருத்தவத் துறைப் பெருந்திருப்பிராட்டியார் பிள்ளைத்தமிழ், திருவிடைக் கழி முருகர் பிள்ளைத்தமிழ், சேக்கிழார் பிள்ளைத்தமிழ், திருவாவடுதுறை அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் ஆகிய பிள்ளைத்தமிழ் நூல்களை டாக்டர் உ. வே. சாமிநாதையர், திருவாவடுதுறை, திருவாவடுதுறை ஆதினம் வாயிலாக மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய வேறு நூல்

களையும் சேர்த்து "ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத் திரட்டு" என்னும் பெயரில் வெளியிட்டிருப்பதாகத் தெரிய வருகின்றது. அந்நூல்களை டாக்டர் உ. வே. சா. தொகுத்த வரலாறு இத்திரட்டின் முகவுரையில் சொல்லப் பெற்றுள்ளது.

1916 - ஆம் ஆண்டில் பா. வேலு தேதிகர் இயற்றிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் பிள்ளைத்தமிழைச் சென்னை, வேப்பேரி ஞானசம்பந்தர் அச்சியந்திர சாலை வாயிலாகச் சிவநேயச் செல்வர் சிலர் வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது.

1917 - ஆம் ஆண்டில் நமச்சிவாயக் கவிராயர் இயற்றிய பாவநாசம் என்னும் சிங்கை உலகம்மை பிள்ளைத் தமிழை மதுரை எக்செல்சியர் பிரஸ் வாயிலாக மு. ரா. கந்தசாமிக் கவிராயர் பாவநாசம் என்னும் சிங்கைப் பிரபந்தத் திரட்டு என்னும் திரட்டில் சேர்த்து வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது.

1929 - ஆம் ஆண்டில் மாதவச் சிவஞான யோகிகள் இயற்றிய குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், திருக் கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் என்னும் நூல்களைச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர், மாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்த பிரபந்தத் திரட்டு என்னும் திரட்டில் வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது.

1931 - ஆம் ஆண்டில் ஸ்ரீமுத்தைய சுவாமி இயற்றிய ஏம்பல் ஸ்ரீமுத்தைய சுவாமி பிள்ளைத்தமிழைச் சென்னை நோபல் அச்சுக்கூடம் வாயிலாக ஏம்பல் முத்துவீரப்ப செட்டியார் பதிப்பித்திருப்பதாகக் காண முடிகின்றது.

மேலும் இதே ஆண்டில், அப்புசாமி நாவலர் இயற்றிய ஏம்பல் ஸ்ரீமுத்தைய சுவாமிகள் பிள்ளைத்தமிழையும் இவர் மேற்படி அச்சுக்கூடம் வாயிலாகப் பதிப்பித்திருப்பதாகத் தெரிகின்றது.

1932 - ஆம் ஆண்டில் சின்னப்ப நாயக்கர் இயற்றிய பழனிப் பிள்ளைத்தமிழை டாக்டர் உ. வே. சாமிநாதையர் செந்தமிழ் பிரசுரமாக வெளியிட்டிருப்பதாகத் தெரிகின்றது. இந்நூலுக்கு அவர் எழுதிய முகவுரையில், வழக்கமாகப் பருவத்திற்குப் பத்துப்பாடலாகப் பாடப்பெறும் இப்பிள்ளைத் தமிழ் சின்னப்பநாயக்கரால் பருவத்திற்கு மூன்றாகப் பாடப் பெற்றது என்றும் இவ்விதம் விதியை மீறியனவாக, பருவத் திற்கு ஏழாக சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத்தமிழும் ஐயைந்தாகச் சுலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழும் உள்ளன என்றும் கூறியுள்ளதைக் காணமுடிகின்றது.

1937 - ஆம் ஆண்டில் கருணாலய பாண்டியப் புலவர் இயற்றிய திருக்கதிர்காமப் பிள்ளைத் தமிழைக் கொழும்பு ராபர்ட் பிரஸ் லிமிடெட். அச்சுக்களரி வெளியிட்டிருப்பதாக அறியமுடிகின்றது.

1939 - ஆம் ஆண்டில் கார்த்திகேயபுரம் காழிஞான தேசிகர் இயற்றிய திருவீழிமிழலை அழகிய தாமுலையம்மை பிள்ளைத்தமிழ் கொத்தமங்கலம் சிவநேசச் செல்வர் சா. மு. ராம ராமசாமி செட்டியார் ஞாபகார்த்த பதிப்பாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

1940-ஆம் ஆண்டில் நகரம் சங்கர பாண்டியனார் இயற் றிய திருமலை வயிரவர் பிள்ளைத்தமிழைத் தென்காசி லோ காம்பிகை பிரஸ் பதிப்பித்துள்ளதாக அறிய முடிகின்றது. அதே

ஆண்டில் காஞ்சிபுரம் சிதம்பரமுனிவர் இயற்றியசுப்பிரமணியக் கடவுள் சேத்திரக் கோவைப் பிள்ளைத்தமிழைச் சென்னை இராயப்பேட்டை 12, கணபதி முதலிதெரு பா. முருகவேல் புத்தகசாலை பதிப்பித்திருப்பதாகத் தெரிகின்றது.

1941 - ஆம் ஆண்டில் சிதம்பரசுவாமிகள் இயற்றிய திருப்போரூர் சந்நதிமுறை முருகன் பிள்ளைத்தமிழைச் சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜம் திரு. வி. உலகநாத முதலியார் மணிவிழா வெளியீடாகப் பதிப்பித்திருப்பதாகத் தெரிகின்றது.

1950 - ஆம் ஆண்டில் வீரவேலாயுதசாமி பிள்ளைத் தமிழ், சத்திய ஞானப் பண்டாரம் பிள்ளைத்தமிழ், திருப் பெருந்துறை சிவயோக நாயகி பிள்ளைத்தமிழ் ஆகிய நூல்களைத் தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் நிர்வாகக் கமிட்டி வாயிலாக எஸ். முத்துரத்ன முதலியாரும் ஸ்ரீ. S. கோபாலனும் பதிப்பித்திருப்பதாக அறிய முடிகினறது.

1952 - ஆம் ஆண்டில் குமரகுருபரர் இயற்றிய முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழைத் திருப்பனந்தாள் காசிமடம் ஸ்ரீகுமரகுருபரசுவாமிகள் பிரபந்தத்திரட்டு என்னும் தொகுப்பில் பதிப்பித்திருப்பதாகத் தெரிகின்றது.

1953 - ஆம் ஆண்டில் மாசிலாமணி தேசிகர் இயற்றிய திருஞான சம்பந்தர் பிள்ளைத்தமிழைத் திருவாவடுதுறை, ஆதீன வாயிலாக த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை பதிப்பித் திருப்பதாக அறிய முடிகின்றது. மேலும் அதே ஆண்டில் தாண்டவராயப் புலவர் இயற்றிய திருமயிலைச் சிங்கார வேலர் பிள்ளைத்தமிழை Madras, Government Oriental Manuscript Library வாயிலா கதி. சந்திரசேகரன் "திருமயி

லைப் பிரபந்தங்கள்" என்னும் தொகுப்பில் பதிப்பித்திருப்பு தாகத் தெரிகின்றது.

1956 - ஆம் ஆண்டில் புதுவை திரிபுரசுந்தரி பிள்ளைத் தமிழ், தூத்துக்கொடி பாகம் பிரியா வம்மைப் பிள்ளைத் தமிழ், தில்லை சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ், அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத்தமிழ் ஆகிய நூல்களை Madras Government Oriental Manuscript Library வாயிலாக தி. சந்திரசேகரன் ஆங்கில அணிந்துரை, தமிழ் அணிந்துரை, நூற்பெயர் குறிப்புரை, செய்யுள் முதற்குறிப்பகராதி, பாடருப பேதங்கள், கருதும் சில பாடங்கள் ஆகியவற்றுடன் வெளி யிட்டிருப்பதாக அறிய முடிகின்றது. பிழை திருத்தப் பட்டி யலும் இடம் பெற்றுள்ளது. இது இல்லாமல் இருந்திருந்தால் இப்பிள்ளைத்தமிழ்க் கொத்து பாராட்டத்தக்க பதிப்பாக விளங்க வாய்ப்புண்டு. மேலும் இவ்வாண்டில் திருவுத்தர கோசமங்கை மங்களேசுவரி பிள்ளைத்தமிழை க. சுப்பிரமணிய ஐயர் சென்னை கபீர் அச்சுக்கூடம் வாயிலாக வெளியிட் டிருப்பதாக அறிய முடிகின்றது.

1957 ஆம் ஆண்டில கந்தப்ப தேசிகர் இயற்றிய திருததணிகைப் பிள்ளைததமிழ் சுப்பிரமணியக் கவிராயர் திருமயிலாடுதுறைப் பிள்ளைத்தமிழ், தண்டபாணி சுவாமிகள் இயற்றிய பழனிப் பிள்ளைத்தமிழ், அருணாசலக் கவிராயர் இயற்றிய திருப்பரங்குன்றம் பிள்ளைத்தமிழ் ஆகிய பிள்ளைத் தமிழ் நூல்கள் திருச்செந்தூர், திருச்செந்தூர் ஆறுமுக சுவாமி தேவஸ்தான வெளியீடாகத் திருமுருகன் பிள்ளைத் தமிழ்த் திரட்டு என்னும் பெயரில் வெளிவந்திருப்பதாகத் தெரிகிறது.

1958 - ஆம் ஆண்டில் ஈரோடு V. V. C. R. முருகேச

முதலியார் திருச்செங்கோடு செங்கோட்டு வேலவர் பிள்ளைத் தமிழைப் பதிப்பித்திருப்பதாக அறிய முடிகின்றது.

1959 - ஆம் ஆண்டில் புதுவை அருணாசலம் பிள்ளைத் தமிழ், முத்துவீரப்ப சுவாமி பிள்ளைத்தமிழ், முருகப்ப தேவர் பிள்ளைத்தமிழ் இராமலிங்கசுவாமிகள் பிள்ளைத் தமிழ், ஆகிய நூல்களை **Madras, Government Oriental Manuscript Library** வாயிலாக தி. சந்திரசேகரன் "பிள்ளைத் தமிழ்க் கொத்து இரண்டாம் புத்தகம்" என்னும் பெயரில் பதிப்பித்திருப்பதாகத் தெரிகின்றது. இப்பதிப்பில் ஆங்கில அணிந்துரை, தமிழ் அணிந்துரை, நூற்குறிப்புரை, பாடல் குறிப்புரை, அருஞ்சொற்பொருள் சிறப்புச் செய்திகள் முதலியன அடங்கிப் பயனுடைய பதிப்பாக விளங்குகின்றது.

1960 - ஆம் ஆண்டில் ஈரோடு வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் சிவமலைப் பிள்ளைத் தமிழைப் பதிப்பித்துள்ளார்.

1964 - ஆம் ஆண்டில் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் சிவஞான சுவாமிகள் இயற்றிய திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், குமரகுருபரர் இயற்றிய முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ், பகழிக்கூத்தர் இயற்றிய திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ், மார்க்க சகாயதேவர் இயற்றிய திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ், கவிராசபண்டாரத்தையா இயற்றிய திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் ஆகிய ஐந்து நூல்களையும் "பிள்ளைத்தமிழ்க் கொத்து (முதற்புத்தகம்)" எனத் தொகுப்பாக வெளியிட்டுள்ளனர். அப்பதிப்பு அரும் பொருள் விளக்கங்களுடன் அமைந்துள்ளது. மேலும் அதே ஆண்டில் கவிராச பண்டாரத்தையா இயற்றிய திருவிலஞ்சி

முருகன் பிள்ளைத்தமிழ், குமரகுருபரர் இயற்றிய மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மாதவச்சிவஞான சுவாமிகள் இயற்றிய குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், புளியங் குடி திரு. முத்துவீரக் கவிராயர் இயற்றிய கோமதியம்பிகை பிள்ளைத்தமிழ் ஆகிய நூல்களைப் "பிள்ளைத்தமிழ்க் கொத்து (இரண்டாம் புத்தகம்)" என்னும் தொகுப்பாக வெளி யிட்டுள்ளனர் இப்பதிப்பும் அரும் பொருள் விளக்கங்களுடன் அமைந்துள்ளது. இவ்விரு பிள்ளைத்தமிழ்க் கொத்துகளில் அடங்கியுள்ள நூல்கள் தனித்தனி நூல்கசுளாவும் வெளியிடப் பெற்றுள்ளன.

1967 - ஆம் ஆண்டில் சோணாசலப் பாரதியார் இயற்றிய திருவருணை உண்ணா முலையம்மைப் பிள்ளைத் தமிழைச் சென்னை R. S. நடராசன் பதிப்பித்துள்ளார்.

1969 - ஆம் ஆண்டில் கலைவாணன் இயற்றிய காவை முருகன் பிள்ளைத்தமிழைச் சென்னை - 17, உஸ்மான் சாலை, 61 - D, அன்னை நிலையம் வாயிலாகக் கவிஞர் அரங்க சீனிவாசன் பதிப்பித்துள்ளதாக அறிய முடிகின்றது. பதிப்புரை, அணிந்துரை சிறப்பாக அமைந்துள்ளன.

1971 - ஆம் ஆண்டில் பழமுதிர் சோலைமலை முருகன் பிள்ளைத்தமிழைப் பழமுதிர்சோலை மலை காஞ்சி ரா. குப்புசாமி என்கிற சிவக்கொழுந்து பதிப்பித்துள்ளதாகத் தெரிகின்றது. மேலும் அதே ஆண்டில் சற்குருதாசன் இயற்றிய இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத்தமிழைச் சென்னை, 32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, ஸ்ரீ இரெட்டிப் பட்டிசுவாமிகள் இலக்கியப் பதிப்பகத்தால் பதிப்பிக்கப்பட்டுள் ளதாக அறிய முடிகின்றது.

1972-ஆம் ஆண்டில் பாலகவி முத்து கோ. இராமன் இயற்றிய ஸ்ரீ குருவாயூரப்பன் பிள்ளைத்தமிழைச் சென்னை- 18 2-A, C.V ராமன் ரோடு பதிப்பித்துள்ளதாக அறிய முடிகின்றது

1974-ஆம் ஆண்டில் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் இயற்றிய திருப்பேரூர் பச்சை நாயகி அம்மை பிள்ளைத் தமிழைக் கோயமுத்தூர் சின்னவேடம் பட்டி, கௌமார மடாலயம் பதிப்பித்துள்ளதாக அறிய முடிகின்றது.

1975-ஆம் ஆண்டில் அருட்கவி ஸ்ரீதேவி கருமாரிதாசர் இயற்றிய காமாட்சியம்மை பிள்ளைத்தமிழ், ஸ்ரீ காளிகாம்பாள் கமடேஸ்வரர் தேவஸ்தானத் திருக்கோவிலின் திருப்பணிக்குழுத் தலைவரும் திருவேற்காடு ஸ்ரீதேவி உபாசகருமான ஸ்ரீமத் சுவாமி இராமதாசர் அவர்களின் மணிவிழாவை ஒட்டிச் சென்னை, 67, தம்புச்செட்டித் தெரு ஸ்ரீ காளிகாம்பாள கமடேஸ்வரர் தேவஸ்தானத்தினரால் வெளியிடப் பெற்றுள்ளதாக அறிய முடிகின்றது.

மேலும் அதே ஆண்டில் அருட்கவி ஸ்ரீதேவி கருமாரி தாசர் இயற்றிய ஆதிசங்கரர் பிள்ளைத்தமிழ், திருவேற்காடு ஸ்ரீதேவி உபாசகர் ஸ்ரீமத் சுவாமி இராமதாசர் மணிவிழாவை ஒட்டி சென்னை ஸ்ரீதேவி கருமாரி அம்மன் சுவாமி நடேசனார் நிகேதனத்தால் பதிப்பிக்கப் பெற்றுள்ளதாகக் காண முடிகின்றது. அன்றியும் அவ்வாண்டில் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் இயற்றிய தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழ் கோவை, பேரூர் பேரூராதீனம், அருள்மிகு சாந்தலிங்க அடிகளார் திருமடம் வெளியிட்டுள்ளதாக அறிய முடிகின்றது.

1976-ஆம் ஆண்டில் ஸ்ரீதேவி கருமாரிதாசர் இயற்றிய

ஸ்ரீ அருணகிரி நாதர் பிள்ளைத்தமிழ் ஸ்ரீமத் சுவாமி இராம தாசர் 61-வது ஜெயந்தி விழாவினை ஒட்டிச் சென்னை 331 333 தம்பு செட்டித் தெரு தூப்பர்பவர் பப்ளி கேஷன்ஸ் வெளியிட்டுள்ளதாக அறிய முடிகின்றது.

மேற்படி ஆண்டில் ஸ்ரீதேவி கருமாரிதாசர் இயற்றிய காஞ்சிமுனி ஜகத்குரு ஸ்ரீசந்த்ரசேகரேந்திர சுவாமிகள் பிள்ளைத்தமிழ், சென்னை, தூப்பர் பவர் பப்ளிகேஷன்ஸ் வெளியிட்டுள்ளதாக அறிய முடிகின்றது. அன்றியும் அவ்வாண்டில், அரு. சோமசுந்தரன் இயற்றிய மறைமலை அடிகள் பிள்ளைத்தமிழ் இராமநாதபுர மாவட்டம், காரைக்குடி, 123, முத்துப்பட்டணம் மூன்றாம் தெரு, பொன் முடிபதிப்பகம் வெளியிட்டுள்ளதாக அறிய முடிகின்றது.

1977 - ஆம் ஆண்டில் கந்தப்ப முனிவர் இயற்றிய திருத்தணிகை சந்நிதி முறையிலடங்கிய திருத்தணிகைப் பிள்ளைததமிழ், திருவண்ணாமலை திருக்கயிலாய பரம்பரை திருவண்ணாமலை திருத்துறையூர் திருமுதுகுன்றம் வீரசைவ ஆதினம் வெளியிட்டுள்ளதாக அறிய முடிகின்றது. மேலும் அதே ஆணடில் கவிஞர் அடிகள் கு. ஆ. அரங்கநாதனார் இயற்றிய சேலம் பேர்லாண்ட்ஸ் (அழகாபுரி) ஞான சுப்பிரமணிய சுவாமி பிள்ளைத்தமிழ், சேலம் - 4, அழகாபுரி, பேர்லாண்ட்ஸ், ஞான சுப்பிரமணிய சுவாமி திருக்கோவில் வெளியிட்டுள்ளதாக அறிய முடிகின்றது.

1978 - ஆம் ஆண்டில், அரு. சோமசுந்தரன் இயற்றிய ஸ்ரீகுரு தட்சணாமூர்த்தி பிள்ளைத்தமிழ், காரைக்குடி பொன்முடி பதிப்பகம் வெளியிட்டுள்ளதாக அறிய முடிகின்றது. மேலும் அவ்வாண்டில் பாவலர் சி. அன்பானந்தம் இயற்றிய

மறைமலை அடிகள் பிள்ளைத்தமிழ், காரைக்குடி மெய்யமமைப் பதிப்பகம் வெளியிட்டுள்ளதாக அறிய முடிகின்றது. தனித் தமிழ் இயக்கத்தந்தை மறைமலையடிகளாரின் நூற்றாண்டு விழாவினை ஒட்டி நடந்த பிள்ளைத்தமிழ்ப் படைப்பிலக்கியப் போட்டியில் முதற்பரிசு பெற்ற நூல் இதுவாகும் இந்நூல் சிறந்த ஆராய்ச்சி முன்னுரையுடன் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

1982 - ஆம் ஆண்டில் சென்னை திருவான்மியூர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம் சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழைப் பதிப்பித்துள்ளதாக அறிய முடிகின்றது. இந்நூல் ஆங்கில முன்னுரை, தமிழ் அணிந்துரை, பதிப்பாசிரியர் குறிப்பு, ஆராய்ச்சிக்குறிப்பு, பாடல்களுக்குக் குறிப்புரை, செய்யுள் முதற்குறிப்பகராதி அரும்பதம் முதலியவற்றின் அகராதி ஆகியவற்றுடன் சிறப் பாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளதாக அறிய முடிகின்றது.

இங்கே சுட்டிய எல்லாப் பிள்ளைத்தமிழ் நூல்களிலும் பதிப்புரையைக் காண முடிகின்றது. ஒருசில நூல்களைத் தவிர மற்ற நூல்களுக்கு அணிந்துரையோ அல்லது ஆய்வுரையோ இடம் பெற்றுள்ளதைக் காண முடிகின்றது. ஒருசில நூல்கள் மூன்று அல்லது நான்கு பதிப்புகளைக் கூடப்பெற்றிருப்பதைக் காண முடிகின்றது.

தஞ்சாவூர் சரபோஜி நூலகம் பரசமய கோளரியார் பிள்ளைத்தமிழ், சரபோஜிராசன் பிள்ளைத்தமிழ் ஆகிய நூல் களைத் தற்போது பதிப்பித்து வருகின்றது.

பிள்ளைத்தமிழ் நூல்களைக் காலாவதி ஆகிப் போன நூல்களாகக் கருதாமல் அவற்றை மீண்டும் மறுவடிவம்

கொடுத்துப் புத்துயிரளிப்பதை ஒரு தவிர்க்க முடியாத - புனிதமான - பொறுப்பாகவும் கடமையாகவும் மேற்கொண்ட பெருமை கல்வி நிறுவனங்களுக்கும் பதிப்பு வெளியிட்டு நிறுவனங்களுக்கும் தனிநபர்களுக்கும் உண்டு என்பது தெரிகின்றது.

இத்தகைய வெளியீட்டு முயற்சிக்குக் கல்வி நோக்கம்,, சமயநோக்கம், காசு, பணம் திரட்டும் வணிக நோக்கம் கலை இலக்கிய நலம் காணும் அழகியல் (ரசனை) நோக்கம் முதலியவற்றுள் ஏதாவது ஒன்றோ அல்லது பிறவோ இருந்திருப்பதைக் காணமுடிகின்றது. ஆக, புதிய வாழ்க்கை முறையில் அவ்வப்போது தோன்றி வந்த புதிய கூடுதலான தேவைகளை நிறைவேற்றும் பயன் கருதி இத்தகைய பழமையான நூல்களுக்கு அச்சு வடிவம் கொடுக்க வேண்டியது ஒரு வரலாற்றுத் தேவையாகி விட்டதை அறிய முடிகின்றது.

வெவ்வேறு நோக்கத்திற்கு வெவ்வேறு பதிப்புகள் வெளிவந்ததையும் அறிய முடிகின்றது. பாடத்திட்டத்தைத் தழுவி மாணவர்கள் ஆசிரியர்கள் தேவையை ஈடு செய்ய தனிநூல்கள் கழக வெளியீடுகளாக வெளிவந்துள்ளதை அறியமுடிகின்றது. பக்திப்பரவசத்தில் சமயப்பிரச்சாரம் கருதி இலவச வெளியீடாகவும் சிலநூல்கள் வெளியிடப் பெற்றுள்ளதைக்காண முடிகின்றது.

அதே நேரத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பலவகைப் பிள்ளைத்தமிழ் நூல்களையும் இணைத்துத் திரட்டிப் பிள்ளைத் தமிழ்க் கொத்து என்னும் பெயரில் ஆராய்ச்சி முன்னுரைகளோடும் அவசியமான பொருள் வளத்தோடும் வெளிவந்

துள்ளதை அறிய முடிகின்றது. இக்கொத்துகள் நூலகத் தேவையை நிறைவு செய்வதோடு பிள்ளைத்தமிழ் இலக்கிய வரலாற்றையும் வளர்ச்சியையும் உறுதி செய்து வருவதையும் அறிய முடிகின்றது.

தனி ஆசிரியர்களை முன்வைத்து அவர்கள் இயற்றியுள்ள வேறு சிற்றிலக்கிய வகைகளோடு பிள்ளைத்தமிழ் நூல்களும் உளப்படுத்தப் பெற்று வெளியிடப்பெற்றுள்ளதையும் அறியமுடிகின்றது. அன்றியும் தனிக்கடவுள் சார்ந்த வெவ்வேறு பிள்ளைத்தமிழ் நூல்களும் தனித்தொகுப்பாக வெளியிடப் பெற்றுள்ளது. மேலும் ஆராய்ச்சிச் சொற்பொழிவுகளை முதன்மையாக்கி ஒரு சமயச் சார்பான பிள்ளைத்தமிழ் நூல்களுக்குச் சிறப்புச் செய்தும் நூல்கள் வெளியிடப் பெற்றுள்ளன.

காலவெள்ளத்திற்கும் கடல்கோள், செல்லரிப்பு, தீயிடல், வெள்ளப்பெருக்கு முதலிய சீரழிவுகளுக்கும் இரையாகி மறைந்துபட்ட கணக்கிலடங்காத தமிழ் நூல்களின் பட்டியலில் ஒரே ஒரு பிள்ளைத்தமிழ் மட்டுமே இடம் பெற்றுள்ளது 1 இதிலிருந்து பிள்ளைத்தமிழ் நூல்களின் தோற்ற காலத்திலிருந்து இன்று வரை அவை மக்களின் பயன்பாட்டு வழக்கிலிருந்து விலகிப்போய் வழக்கற்று அழிந்துபட வில்லை; அவை காலந்தோறும் போற்றப் பெற்றே வந்திருக்கின்றன என அறிய முடிகின்றது.

## அடிக்குறிப்பு

(1) வேங்கடசாமி, மயிலை சீனி, மறைந்துபோன தமிழ் நூல்கள், ப. 160.

# பின்னிணைப்பு

**1. ஆய்வுக்கு மேற்கொண்ட சைவ சமயப் பிள்ளைத் தமிழ் நூல்களின் பட்டியல் :**

| | | |
|---|---|---|
| (1) | அதிராவடிகள், | முத்தப் பிள்ளையார் பிள்ளைத் தமிழ்பதிப்பு வரங்கள் கிடைக்கப்பெறவில்லை. |
| (2) | அப்பாவையர், மகா வித்துவான், | குகையூர் பெரியநாயகி அம்மன் பிள்ளைத் தமிழ், ப. வி. கி |
| (3) | அப்புக்குட்டி ஐயர், | நல்லூர்ச் சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ், ப. வி. கி. |
| (4) | அப்புசாமி, நாவலர் | ஏம்பல் ஸ்ரீமுத்தையசுவாமி பிள்ளைத்தமிழ், ஏம்பல்முத்து வீரப்பச்செட்டியார், ப. ஆ, நோபல் அச்சுக்கூடம், சென்னை, மு. ப. 1931 |
| (5) | அரங்கசாமி, புதுவைக் கவிஞர், | மறைமலையடிகளார் பிள்ளைத் தமிழ், ப. வி. கி |
| (6) | அரங்கநாதனார், கு. ஆ, | சேலம் பேர்லாண்ட்ஸ்(அழகாபுரி) ஞானசுப்பிரமணிய சுவாமி பிள்ளைத்தமிழ், ஞானசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் பேர்லாண்ட்ஸ் அழகாபுரி, சேலம்4 மு. ப. 1977. |

(7) அருணாசலக் கவிராயர், மு. ரா., தில்லைச் சிவகாமியம்மைப் பிள்ளைத்தமிழ், பிள்ளைத்தமிழ்க் கொத்து, Government Oriental Manuscripts Library, Madras, மு. ப. 1956

(8) ” சேதுபர்வதவர்த்தினியம்மை பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(9) ” சேறைத் தவம் பெற்ற நாயகி பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(10) ” திருப்பரங்கிரி பிள்ளைத்தமிழ், மதராசு ரிப்பன் அச்சுக்கூடம் சென்னை, மு. ப. 1899

(11) ” திருப்பரங்குன்றப் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(12) அழகிய சொக்கநாதர், திருநெல்வேலிக் காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(13) அழகிய சொக்கநாதப் பிள்ளை, திருப்பெருமணநல்லூர்த் திருவெண்ணீற்றுமைப் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(14) அன்பானந்தம், பாவலர்சி, மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ், மெய்யம்மை பதிப்பகா,

சென்னை - 14, காரைக்குடி- 1, மு. ப. 1978.

(15) இரகுநாத பட்டர்; மகரநெடுங்குழைக்காதர் பிள்ளைத்தமிழ், பிள்ளைத்தமிழ்க் கொத்து, (இரண்டாம் பாகம்) Government Oriental Manus cripts Library, Madras, மு. ப. 1959.

(16) இராமநாத பிள்ளை, சாணாங் குப்பம், திருத்துருவமலை முருகர் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(17) இராமன், மு. கோ, ஸ்ரீ குருவாயூரப்பன் பிள்ளைத்தமிழ், 2-AC.V. ராமன்ரோடு, சென்னை-18, மு ப. 1972

(18) " திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(19) கச்சியப்ப முனிவர், சென்னை விநாயகர்பிள்ளைத்தமிழ் ப. வி. கி.

(20) கணபதி ஆச்சாரி, தேசிய விநாயகர் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(21) கணபதி ஆசாரியர், நீ, கன்னியாகுமரிப் பகவதி அம்மன்

பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(22) கந்தசாமி அடிகள், குருந்தமலை முருகன் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(23) ” சிரவை முருகன் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(24) ” திருப்போரூர் பச்சை நாயகி அம்மை பிள்ளைத்தமிழ், கௌமார மடாலயம், சின்ன வேடம்பட்டி, கோயமுத்தூர் மு. ப. 1974

(25) கந்தசாமிக் கவிராயர், பவானி வேதநாயகர் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(26) ” வேத நாயகி அம்மன் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(27) கந்தசாமி சுவாமிகள், தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(28) கந்தப்ப ஐயர், திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ், கிருஷ்ணசாமி முதலியார், ப. ஆ. ஆதிகலாநிதி அச்சுக்கூடம், சாத்தம் பாக்கம், மு. ப. 1878

(29) கந்தப்ப தேசிகர், திருத்தணிகைப் பிள்ளைத் தமிழ்

திருமுருகன்பிள்ளைத்தமிழ்த்திரட்டு திருச்செந்தூர் ஆறுமுக சுவாமி தேவஸ்தான வெளியீடு திருச்செந்தூர், மு. ப. 1957.

(30) கந்தப்ப முனிவர், திருத்தணிகை சந்நிதி முறையிடங்கிய திருத்தணிகைப் பிள்ளைத்தமிழ் ஸ்ரீலஸ்ரீ கல்யாண சுந்தர சிவப்பிரகாச பண்டார சந்நிதிகள், விருத்தாசலம், திருக்கயிலாயபரம்பரை திருவண்ணாமலை திருத்துறையூர், திருமுதுகுன்றம் வீரசைவ ஆதீனம் திருவண்ணாமலை, மு. ப. 1977

(31) கருத்த முத்துப்பிள்ளை, சிவகிரி குமரக்கடவுள் பிள்ளைத் தமிழ் ப. வி. கி.

(32) கருணாலய பாண்டியப் புலவர் திருக்கதிர்காமப் பிள்ளைத் தமிழ், கொழும்பு ராபட் பிரஸ் லிமிடெட் அச்சுக்களரி, கொழும்பு மு ப. 1937

(33) கலைவாணன், காவை முருகன் பிள்ளைத் தமிழ், கவிஞர் அரங்க சீனுவாசன், ப. ஆ அன்னை நிலையம், 61 D, உசுமான்சாலை, சென்னை-17 மு. ப.1969.

(34) கவிராச பண்டாரம், இலஞ்சி வேலவன் பிள்ளைத்தமிழ் ப. வி. கி

(35) கவிராசப் பண்டாரத்தையா, — திருமலை முருகன் பிள்ளைத்தமிழ், பிள்ளைத்தமிழ்க் கொத்து (முதற் புத்தகம்) கழக வெளியீடு, திருநெல்வேலி-6 சென்னை-1, மு. ப. 1964

(36) „ — திருவிலஞ்சி முருகன் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(37) கனகராஜ் ஐயர். ந, — திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ், ப வி கி.

(38) „ — திருக்கோகர்ணம் பெரியநாயகி பிள்ளைத்தமிழ், ப வி. கி

(39) கனகசபைக் கவிராயர், — கடம்பர் கோவில் பிள்ளைத்தமிழ், ப. வி. கி

(40) கனகசபைத் தம்பிரான், — ஆதிபுரி வடிவுடையம்மைப் பிள்ளைத்தமிழ், ஊ புஷ்பரதச் செட்டியார், ப. ஆ கலாரத்நாகரம் அச்சுக்கூடம், சென்னை, மு. ப 1887

(41) காளிச் சுவாமிகள், — கழுகுமலைப் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(42) கிருட்டிணையர், — சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(43) கிருஷ்ணசாமி உபாத்தியாயர், — நாகப்பட்டினம் நீலாயதாட்சியம்மைப் பிள்ளைத்தமிழ், கணணுப்

பிள்ளை என்று வழங்கும் இராமலிங்கம் பிள்ளை, ப. ஆ, மிமோரியல் அச்சுக்கூடம், சென்னை, மு. ப 1882

(44) குமரகுருபரர், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், டாக்டர் உ. வே. ச. ப. ஆ. ஸ்ரீகுமர குருபரசுவாமிகள் பிரபந்தத்திரட்டு, காசிமடம், திருப்பனந்தாள், மு ப. 1952

(45) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், பிள்ளைத்தமிழ்க் கொத்து (இரண்டாம் புத்தகம்) கழக வெளியீடு, திருநெல்வேலி - 6, சென்னை - 1, மு. ப. 1964

(46) குமாரபண்டாரம், பழனி, திருவீரை மரகதவல்லியம்மை பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(47) குருசாமி அடிகள், பரவை நாச்சியார் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(48) கோவிந்த பிள்ளை, உறையூர் நாச்சியார் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(49) சக்திவேற்பிள்ளை, ஆ, மந்திரமூர்த்தி விநாயகர் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(50) சங்கரகுமார முனிவர், சச்சிதானந்த விநாயகர் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(51) சங்கர பாண்டியனார், நகரம், திருமலை வயிரவர் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(52) சண்முகம் செட்டியார், அ, அள்கை உமையம்மை பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(53) சண்முகதாச பிள்ளை, ச, ஆறுமுக நயினார் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(54) சபாபதி முதலியார், காஞ்சி, திருக்குடந்தை வடிவேலன் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(55) சற்குருதாசன், இருடியர் பட்டிக்குருநாதர் பிள்ளைத்தமிழ், சற்குருதாசன் ப. ஆ. ஸ்ரீஇரெட்டிப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம் 32, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை - 1,

(56) சாமிநாதப் பிள்ளை, சாமிநாதன் பிள்ளைத்தமிழ் ப.வி.கி

(57) சாமிநாதப் புலவர், குந்தாணி, சென்னிமலைப் பிள்ளைத் தமிழ் ப. வி. கி.

(58) சிங்காரவேலு முதலியார், ப, திருப்பெரும் பேற்று முருகர் பிள்ளைத்தமிழ், ப, வி. கி.

(59) சிதம்பர சுவாமிகள், திருப்போரூர் சந்நிதி முறை முருகன் பிள்ளைத் தமிழ், திரு. வி. உலகநாத முதலியார் மணிவிழா வெளியீடு, சைவ சித்தாந்த மகாசமாஜம் சென்னை, மு. ப. 1941.

(60) சிதம்பரநாதன், க, கதிரை மலைக்கந்தன் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(61) சிதம்பர முனிவர், காஞ்சிபுரம், சுப்பிரமணியக்கடவுள், சேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ், பா. முருகவேள் புத்தகசாலை, 12 கணபதி முதலிதெரு, இராயப்பேட்டை, சென்னை, மு. ப. 1940

(62) ,, காஞ்சி காமாட்சியம்மை பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(63) சிந்நயச் செட்டியார், மயின்மலைப் பிள்ளைத் தமிழ், கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை, மு. ப, 1885.

(64) சிவசுப்பிரமணியச் செட்டியார், பூவை மாநகர்க்குமரன் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(65) சிவசுப்பிரமணிய தேசிகர், அழகாபுரி உமையம்மை ஆனந்தப் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

| | | |
|---|---|---|
| (66) | ,, | கழனிவாசல் திருவருணாசல தேசிக ரததினப் பிள்ளைத் தமிழ், ப.வி.கி. |
| (67) | சிவப்பிரகாச சுவாமிகள் | சிவஞான பாலைய தேசிகர் பிள்ளைத்தமிழ், இராமலிங்க சுவாமிகள், ப. ஆ. மிமோரியல் அச்சுக்கூடம், சென்னை, மு.ப. 1887. |
| (68) | சிவராமப்பிள்ளை மு., | மங்களநாயகியம்மை பிள்ளைத தமிழ், ப.வி.கி. |
| (69) | சிவராமலிங்கம் பிள்ளை, | ஆய்க்குடி முருகர் பிள்ளைத் தமிழ், ப.வி.கி. |
| (70) | சின்னய்யன், | குன்றக்குடிப் பிள்ளைத்தமிழ், ப.வி.கி |
| (71) | சின்னய்யச்செட்டியார், | மயின்மலைப் பிள்ளைத்தமிழ், ப.வி.கி. |
| (72) | சின்னப்ப நாயக்கர், | பழனிப் பிள்ளைத்தமிழ், ப. வி. கி. |
| (73) | சுந்தரர், பொன்னேரி, | இராமலிங்க சுவாமிகள் பிள்ளைத் தமிழ், T. சந்திரசேகரன் ப. ஆ. பிள்ளைததமிழ்க்கொத்து, (இரண்டாம் புத்தகம்) Government Oriental Manuscripts Library, Madras, மு.ப. 1959. |

(74) சுந்தரம்பிள்ளை, பொ. இராமலிங்க சுவாமிகள் பிள்ளைத் தமிழ், ப, வி. கி.

(75) சுப்பராய அடிகள், அருணாசல ஞானதேசிகர் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(76) சுப்பராய செட்டியார், திருவதிகை பெரியநாயகியம்மை பிள்ளைத்தமிழ், ப வி.கி.

(77) சுப்பிரமணிய ஐயர், மழவை, மயூரகிரிச் சண்முகநாதர் பிள்ளைத் தமிழ் பிள்ளைத்தமிழ்க் கொத்து Government Oriental Manuscripts Library Madras, மு.ப.1956.

(78) சுப்பிரமணிய ஐயர், தேவைப் பிள்ளைத்தமிழ், புரசை சபாபதி முதலியார் & சபாபதி செட்டியார், ப.ஆ.கள். வர்த்தமான தரங்கிணி சாகை அச்சுக்கூடம் சென்னை, மு.ப. 1869,

(79) ,, திருவிலஞ்சி முருகன் பிள்ளைத் தமிழ், பிள்ளைத்தமிழ்க் கொத்து, (இரண்டாம் புத்தகம்) கழக வெளியீடு, திருநெல்வேலி-6, சென்னை-1 மு.ப. 1964.

(80) சுப்பிரமணிய ஐயர், சதாவதானம்; கண்டனூர் மீனாட்சியம்மை

பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(81) „ கோயிலூர்ப் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(82) சுப்பிரமணிய ஐயர், ஸ்ரீ பிரம்ம, கோயிலூர்த் திருநெல்லையம்மை பிள்ளைத்தமிழ், ஸ்ரீ வீரசேகர ஞான தேசிகர் மடாலயம், கோயிலூர்.

(83) சுப்பிரமணியக் கவிராயர், திருமயிலாடுதுறைப் பிள்ளைத் தமிழ், திருமுருகன் பிள்ளைத் தமிழ்ததிரட்டு, திருச்செந்தூர் ஆறுமுகசுவாமி தேவஸ்தான வெளியீடு, திருச்செந்தூர், மு ப, 1957

(84) ” செப்பறைப் பிள்ளைத்தமிழ், ப. வி. கி

(85) சுப்பிரமணியச் செட்டியார், திருவதிகை வீரட்டானம் பெரிய நாயகி பிள்ளைததமிழ், ப. வி. கி.

(86) சுப்பிரமணியபாரதியார்,
மழவராயனேந்தல், குன்றை முருகன் பிள்ளைத்தமிழ்,
ப. வி. கி.

(87) சுப்பிரமணியமுதலியார்,
C.K, திருப்புக் கொளியூர் அவிநாசிப் பெருங்கருணையம்மைப் பிள்ளைத் தமிழ், சேக்கிழார் நிலையம், கோயமுத்தூர்.

(88) சுப்பிரமணிய முனிவர்,
தொட்டிக்கலை, அறம் வளர்த்தநாயகி பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(89) ” வடதிருமுல்லைவாயில் கொடியிடையம்மை பிள்ளைத்தமிழ், திருவேங்கட நாயுடு, ப. ஆ. கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை, மு. ப. 1888

(90) சுப்பிரமணிய முனிவர், ஆயலூர் முருகர் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(91) சுவாமியடியான், மெய்ஞ்ஞானப் பிள்ளைத்தமிழ், எல். தேவநாயகம் பிள்ளை, ப ஆ. சர்ச்மிஸன் பிரஸ், பாளையங்கோட்டை, மு. ப. 1870

| | |
|---|---|
| (92) செங்கல்வராயப் பிள்ளை., வ. சு., | திருத்தணிகைச் சிங்காரவேலர் பிள்ளைத்தமிழ், ப.வி.கி. |
| (93) ,, | திருச்சுழியல் துணைமாலையம்மை பிள்ளைத்தமிழ், ப.வி,கி. |
| (94) ,, | நால்வர் பிள்ளைத்தமிழ், ப,வி கி. |
| (95) செண்பையர், காவலன், | செண்பை ஞானப்பிரகாசர் பிள்ளைத் தமிழ், ப.வி.கி. |
| (96) செய்குதம்பிப் பாவலர், | கோட்டாற்றுப் பிள்ளைத்தமிழ், ப.வி.கி. |
| (97) செல்லப்பன், புதுவயல், | பிருந்தவன நகர் முருகன் பிள்ளைத் தமிழ், ப.வி.கி. |
| (98) சொக்கலிங்கம், இயாய. சொ. | சுந்தரர் பிள்ளைத்தமிழ், ப.வி.கி. |
| (99) ,, | திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ், ப.வி கி. |
| (100) ,, | மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ், ப,வி.கி. |
| (101) ,, | திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ், ப.வி.கி. |

(102) சொக்கலிங்கய்யா, சிவகாமி பிள்ளைத்தமிழ், ப.வி.கி

(103) ,, திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் ப.வி.கி.

(104) ,, திருநாவுக்கரசர் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(105) ,, சுந்தரர் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(106) ,, மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(107) சொக்கலிங்கச் செட்டியார் — சைவ சமயாசாரியர்களாகிய நாலவர் பிள்ளைத்தமிழ், ஞானசமபந்த செட்டியார், முத்து வள்ளியப்பச் செட்டியார் முதலிய நால்வர் பதிப்பு, குஞ்சிதச் சரணம் பிரஸ், சிதம்பரம்.

(108) ,, சிவகாமி பிள்ளைத்தமிழ் ப.வி.கி.

(109) சொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகள், பெரியநாயகியம்மன் பிள்ளைத்தமிழ், கலயாணசுந்தர முதலியார், பூவை,கலாரத்நாகர அச்சுக்கூடம், சென்னை, மு. ப. 1890

(110) சோணாசலப் பாரதியார், திருவருணை உண்ணாமுலை அம்மை பிள்ளைத்தமிழ், ப.வி.கி

(111) ,, கம்பைமுருகர் பிள்ளைத்மைிழ்,
கம்பைச் சந்நிதிமுறை, கலாரத் அச்சுக்கூடம், சென்னை, மு. ப. 1903.

(112) சோமசுந்தரன், அரு, ஸ்ரீகுரு தட்சணாமூர்த்தி பிள்ளைத் தமிழ், பொன்முடி பதிப்பகம், காரைக்குடி, மு. ப. 1978

(113) ,, மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ், பொன்முடி பதிப்பகம், 123, முத்துப் பட்டணம் மூன்றாம் தெரு, காரைக் குடி, இராமநாதபுரம் ம்ாவட்டம், மு.ப. 1976

(114) ஞான தேசிகர், காழி, திருவீழிவிழலை அழகிய மாமுலை யம்மை பிள்ளைத்தமிழ், கொத்த மங்கலம் சிவநேசச் செல்வர் சா.மு.ராம. ராமசாமி செட்டியார், ஞாபகார்த்த பதிப்பு, கார்த்திகேய புரம், மு. ப. 1939

(115) தண்டபாணி அடிகள், பழனிப்பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(116) ,, சென்னை முருகன் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(117) ,, புதுவைப் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(118) ,, வள்ளி நாயகி பிள்ளைத்தமிழ், ப.வி கி

(119) தண்டபாணி சுவாமிகள், பழனிப் பிள்ளைத்தமிழ், திருமுருகன் பிள்ளைத்தமிழ்த் திரட்டு, திருச்செந்தூர் ஆறுமுக சுவாமி தேவஸ்தான வெளியீடு, திருச்செநதூர், மு. ப. 1957

(120) ,, பான்டி நாயகன் பிள்ளைத்தமிழ், தமிழ், ப.வி. கி.

(121) ,, சென்னை மாநகர்க் கந்தசாமி பேரில் பிள்ளைக கவி, சுப்பராயச் செட்டியார், ப. ஆ. புஷ்பரதச் செட்டியார் கலாரத்நாகரம் என்னும் அச்சுக்கூடம், சென்னை.

(122) தண்டாயுதசுவாமிகள், பழனிப் பிள்ளைத்தமிழ் ப. வி. கி.

(123) தத்துவராய சுவாமிகள், பிள்ளைத்திருநாமம், ப.வி.கி.

(124) தத்துவராயர், சொரூபானந்தர் பிள்ளைத் தமிழ் ப.வி.கி.

(125) தாண்டவராயப் புலவர்., — திருமயிலைச் சிங்காரவேலர் பிள்ளைத்தமிழ், திருமயிலைப் பிரபந்தங்கள், Government Oriental Manuscripts Library. Madras, மு.ப. 1953.

(126) ” — குருந்தமலை முருகன் பிள்ளைத் தமிழ், ப.வி.கி.

(127) தாண்டவராயமுனிவர், — சுயம்பிரகாச தேசிகர் பிள்ளைத் தமிழ், ப.வி.கி.

(128) தியாகராயர், — அளகாபுரி உமையம்மைப் பிள்ளைத்தமிழ் ப. வி. கி.

(129) தியாகராசச் செட்டியார்., — உமையம்பிகை பிள்ளைத்தமிழ், இராமகிருஷ்ண செட்டியார், வித்யா வர்த்தினி அச்சுக்கூடம்.சென்னை. மு.ப. 1880

(130) திரிகூடராசப்பக் கவிராயர் — குற்றாலப் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(131) தெய்வ சிகாமணிக் கவிராயர் , — அறம்வளர்த்த அம்பிகைபேரில் பிள்ளைத்தமிழ், திருச்சிற்றம்பல

சுவாமிகள், சிந்தாமணி எந்திர சாலை, பாளையங்கோட்டை

(132) நடராசக்கவிராயர், வி. வயிரவன் கோவில் வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ், புஷ்பரதச் செட்டியார், கலாரத் நாகர அச்சுக் கூடம், சென்னை. மு. ப. 1894

(133) நரசிங்கப்பிள்ளை, வயிரவசுவாமி பிள்ளைத்தமிழ் ப.வி.கி.

(134) நடேசக் கவுண்டர், மங்கையர்கரசியார் பிள்ளைத்தமிழ். ப. வி. கி.

(135) நமசிவாயக்கவிராயர், பாவநாசம் என்னும் சிங்கை உலகம்மைபிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(136) நமசிவாயப் புலவர், முத்திருளப்பன் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(137) நரசிம்மப் பாரதி அ, அங்கயற்கண்ணம்மை பிள்ளைத் தமிழ் ப. வி. கி.

(138) நெல்லையப்பர், மேலைக்கொழுந்து மாமலைக் குமரன் பிள்ளைத்தமிழ் ப வி. கி.

கா.நா.

(139) பகழிக் கூத்தர், திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் பிள்ளைத்தமிழ்க் கொத்து (முதற் புத்தகம்) கழக வெளியீடு திருநெல்வேலி - 6. சென்னை - 1. மு.ப. 1953.

(140) பலராம ஐயர், யவனாம்பிகை பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(141) பழனிப் பண்டாரம். திருவீரை மரகதவல்லியம்மை பிள்ளைத்தமிழ், ப.வி,கி.

(142) பாலசுப்பிரமணிய ஐயர், நல்லூர்ச் சுப்பிரமணியர்பிள்ளைத் தமிழ், ப.வி.கி.

(143) பானுகவி அடிகள், இளமுலையம்மை பிள்ளைத் தமிழ் ப. வி. கி.

(144) பீமகவிப்புலவர், சிவபுரம் மீனாம்பிகை பிள்ளைத் தமிழ், ப. வி. கி,

(145) ,, செந்நற்கொடி சண்முகநாதன் பிள்ளைத்தமிழ் ப.வி.கி.

(146) புளியங்குடிப் பிள்ளை, கோமதியம்மை பிள்ளைத்தமிழ் ப. வி. கி.

(147) பொதுவன், செங்கை, கொங்குக்குமரிப் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(148) பொன்னாயிரங்கவிராய மூர்த்திகள், சங்கரகுமாரர் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(149) மணி அப்பாவு ஐயர், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பிள்ளைத்தமிழ், ப. வி. கி

(150) மருதாசலக் கவுண்டர் வ. மு, மருதாசல முருகர் பிள்ளைத் தமிழ் ப. வி. கி.

(151) மாசிலாமணிதேசிகர், திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ், த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, ப. ஆ. திருவாவடுதுறை ஆதீன வெளியீடு 29, திருவாவடுதுறை மு. ப. 1953.

(152) மாதவ சிவஞான யோகிகள், குளத்தூர்அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், மாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்த பிரபந்தத்திரட்டு, கழக வெளியீடு, திருநெல்வேலி-1, மு.ப. 1929.

(153) ,, திருக்கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், மாதவச் சிவஞான யோகிகள் அருளிச்செய்த பிரபந்தத் திரட்டு, கழக வெளியீடு, திருநெல்வேலி - 1, மு.ப. 1929.

| | |
|---|---|
| (154) மார்க்கசகாயர், | திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ், பிள்ளைத்தமிழ்க் கொத்து (இரண்டாம் புத்தகம்) கழக வெளியீடு, திருநெல்வேலி 6, சென்னை - 1, மு.ப. 1964 |
| (155) மீனாட்சி சுந்தரக் கவிராயர், முகவூர், | ஆண்டியப்பப் பிள்ளைத் தமிழ், ப.வி.கி. |
| (156) மீனாட்சி சுந்தரம் பிள்ளை மகாவித்துவான் | மணவைத் திருவெண்ணீற்றுமை பிள்ளைத்தமிழ், டாக்டர் உ. வே. சாமிநாதய்யர், ப. ஆ. மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் பிரபந்தத்திரட்டு, திருவாவடுதுறை, ஆதீனம், திருவாவடுதுறை, மு.ப. 1910. |
| (157) ,, | திருவானைக்கா ஸ்ரீ அகிலாண்ட நாயகி பிள்ளைத்தமிழ், மேற்படி பதிப்பு. |
| (158) ,, | உறையூர் ஸ்ரீ காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ், மேற்படி பதிப்பு |
| (159) ,, | திருக்குடந்தை ஸ்ரீ மங்களாம்பிகை பிள்ளைத்தமிழ், மேற்படி பதிப்பு |
| 150) ,, | திருத்தவத்துறைப் பெருந்திருப் பிராட்டியார் பிள்ளைத் தமிழ், |

மேற்படி பதிப்பு

(161) „ திருவிடைக்கழி முருகர் பிள்ளைத் தமிழ், மேற்படி பதிப்பு

(162) „ திருவாவடுதுறை அம்பலவாணர் தேசிகர் பிள்ளைத்தமிழ் மேற்படி பதிப்பு

(163) „ சேக்கிழார் பிள்ளைத்தமிழ்மூலமும், விளக்கவுரையும், பாலூார் கண்ணப்ப முதலியார், ஸ்ரீ கந்தப்பெருமான் தேவதானம், திருப்போரூர், மு. ப, 1964.

(164) „ பிரம்ம வித்தியநாயகிபிள்ளைத் தமிழ், ப, வி. கி.

(165) „ திருவெண்காட்டுப் பெரியநாயகி பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(166) „ கண்ணபுரம் பாகம்பிரியாள் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(167) முத்தப்பச்செட்டியார், செயங்கொண்ட சோழீசர் பிள்ளைத்தமிழ், ப.வி.கி

(168) முத்துக்குமரன், திரிபுரசுந்தரி பிள்ளைத்தமிழ், தி. சந்திரசேகரன், ப.ஆ. பிள்ளைத் தமிழ்க்கொத்து, Government Oriental Manuscripts Library Madras, மு.ப. 1956.

(169) முத்துசாமிப் பாரதி, ஞானசித்தர்பிள்ளைத்தமிழ்,ப.வி கி

(170) முத்து நயினாத்தை முதலியார், பச்சைநாயகியம்மன் பிள்ளைத் தமிழ் ப.வி.கி.

(171) முத்துவீரக்கவிராயர், சங்கரநாராயணர் கோவில் கோமதி யம்பிகை பிள்ளைத்தமிழ், ப.வி.கி

(172) முத்தைய சுவாமி, ஏம்பல் ஸ்ரீ முத்தைய சுவாமி பிள்ளைத்தமிழ், ஏம்பல் முத்து வீரப்ப செட்டியார், ப ஆ நோபல் அச்சுக்கூடம், சென்னை, மு. ப, 1931

(173) வடிவேல், அருணை சி. திருவருணை முருகன் பிள்ளைத் தமிழ், ப.வி.கி.

(174) வன்னியப்பப் பாவலர், திருவனந்தை சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ், மீனாட்சிநாத பிள்ளை, ப,ஆ. ஆரியப் பிரகாசினி அச்சுக்கூடம், திருநெல்வேலி மு.ப. 1888.

(175) வாசுதேவ முதலியார், அவிநாசிக் கருணாம்பிகை பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(176) வீர சுப்பைய சுவாமிகள், சௌந்தர்யநாயகி பிள்ளைத்தமிழ் ப. வி. கி.

(177) வீரசைவ கனகசபைக் கவிராயர் மணத்தட்டைப் பிள்ளையார் பிள்ளைத்தமிழ், ப,வி,கி.

| | |
|---|---|
| (178) வீரபத்திரக் கவிராயர், | குமரமலைக் குமரேசர் பிள்ளைத்தமிழ், வீரபத்திரக் கவிராயர் நா. கதிரேசன் செட்டியார், ப. ஆ. கள் மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை, மு.ப. 1909. |
| (179) வீரராகவர், அந்தகக்கவி. | சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் குப்புசாமி முதலியார், ப. ஆ. கற்குளம், 1902. |
| (180) ,, | செழியதரையன் பிள்ளைத்தமிழ், ப. வி. கி. |
| (181) ,, | செய்யூர் பிள்ளைத்தமிழ், ப. வி. கி. |
| (182) ,, | விட்டிலர் அம்மையப்பன் பிள்ளைத் தமிழ், ப வி.கி. |
| (183) வேங்கடசுப்பு பிள்ளை மகாவித்துவான், அரன்வாயில், | கச்சிக்குமரக் கோட்டக் கடவுள் பிள்ளைத்தமிழ், ம.அ.இராமநாதஞ் செட்டியார், ப.ஆ. இந்து யூனியன் அச்சியந்திர சாலை, சென்னை, மு. ப. 1895. |
| (184) வேங்கடசுப்பிரமணியம், ஈ. வே, | திருத்தணிகை முருகன் பிள்ளைத் தமிழ் ஸ்ரீ குமார தருவமர், திருக்கைத் திருப்புகழ் சங்கம், 15, தணிகாசலம் பிள்ளைத் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5 மு. ப. 1864. |

(185) வேலு தேசிகர், பா, சுந்தரமூர்த்திசுவாமிகள் பிள்ளைத் தமிழ், சிவநேசச் செல்வர் சிலர், ப.ஆ.கள் ஞானசம்பந்தர் அச்சியந்திரசாலை,வேப்பேரி,சென்னை, மு. ப. 1916.

(186) வைத்தியநாதச் செட்டியார், நெல்லியோடையம்மன் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(187) வைத்தியநாத தேசிகர், மயிலம்மைபிள்ளைத்தமிழ், ப.வி.கி

(188) ,, கமலாலய,அம்மன் பிள்ளைத்தமிழ், வித்துவான் வீ. சொக்கலிங்கம், ப. ஆ. தமிழ்த்துறை, சரசுவதி மகால் நூல் நிலையம், தஞ்சாவூர். மு ப. 1969.

(189) வைரக்கண் வேலாயுத புலவர், வடிவுடையம்மை பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(190) ஸ்ரீதேவி கருமாரி தாசர் அருட்கவி, ஸ்ரீ அருணகிரிநாதர் பிள்ளைத் தமிழ், சூப்பர்பவர் பப்ளிகேஷன்ஸ் 331-333, தப்பு செட்டித் தெரு. சென்னை, மு. ப. 1976

(191) ,, ஆதிசங்கரர் பிள்ளைத் தமிழ், ஸ்ரீ தேவி கருமாரி அம்மன் சுவாமி நடேசனார் நிகேதனம், சென்னை, மு. ப. 1975.

(192) ,, காஞ்சிமுனிவர் ஜகத்குரு ஸ்ரீ சந்த்ர சேகரேந்த்ர சுவாமிகள் பிள்ளைத் தமிழ், சூப்பர்பவர் பப்ளிகேஷன்ஸ்,

சென்னை. மு, ப. 1976

(193) ,, காமாட்சியம்மை பிள்ளைத்தமிழ் ஸ்ரீ காளிகாம்பாள் கமடேஸ்வரர் தேவஸ்தானம், சென்னை, மு. ப. 1975.

(194) ,, ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(195) நூலாசிரியர் பெயர் கிடைக்கவில்லை, அமுதிக்குடி அய்யனார் பிள்ளைத் தமிழ், ப.வி.கி.

(196) ,, அபயாம்பிகை பிள்ளைத்தமிழ் ப.வி.கி.

(197) ,, அரும்பாத்தை வேதவிநாயகர் பிள்ளைத் தமிழ், தி.சந்திரசேகரன், பிள்ளைத்தமிழ்க்கொத்து, Government Oriental Manuscripts Library Madras, மு ப. 1956.

(198) ,, கமலாம்பிகை பிள்ளைத்தமிழ், ப.வி.கி.

(199) ,, சத்தியஞான பண்டாரம் பிள்ளைத் தமிழ், எஸ். முத்துரத்ன முதலியார் & ஸ்ரீ S. கோபாலன், ப. ஆ.கள், சரஸ்வதி மகால் நூல் நிலையம், தஞ்சாவூர், மு. ப. 1950.

(200) ,, சிவமலைப் பிள்ளைத்தமிழ், வித்து வான் வே. ரா. தெய்வசிகாமணிக்

ப வி.கி.

(202) ,, சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத் தமிழ், டாக்டர் உ வே. சாமி நாதய்யர் நூலகம்,திருவான்மியூர், சென்னை, மு. ப. 1982

(203) ,, திருச்செங்கோடு செங்கோட்டு வேலவர் பிள்ளைத்தமிழ் V.V.C.R. முருகேசமுதலியார், ப ஆ. ஈரோடு, மு.ப. 1958.

(204) ,, திரும்பெருந்துறை சிவயோக நாயகி பிள்ளைத்தமிழ், எஸ். முத்துரத்ன முதலியார் & ஸ்ரீ S. கோபாலன், ப. ஆ. கள். சரசுவதி மகால் நூல் நிலையம் தஞ்சாவூர், மு. ப. 1950

(205) ,, திருவுத்தரகோச மங்களேசுவரி பிள்ளைத்தமிழ், க. சுப்பிரமணிய ஐயர், ப ஆ, கபீர் அச்சுக்கூடம், சென்னை. மு. ப. 1956.

(206) ,, தூத்துக்கொடி பாகம்பிரியா ளம்மைப் பிள்ளைததமிழ், தி.சந்தி, சேகரன், பிள்ளைத்தமிழ்க்கொத்து. Government Oriental Manuscripts Library, Madras, மு. ப. 1956.

(207) ” பழமுதிர்சோலை மலைமுருகன் பிள்ளைத்தமிழ், காஞ்சி ரா. குப்பு சாமி என்கிற சிவக்கொழுந்து ப.ஆ. பழமுதிர்சோலைமலை, மு.ப. 1971,

(208) ” புதுசந்நிதி கந்தர் பிள்ளைத் தமிழ், ப. வி. கி.

(209) ” புதுவை அருணாசலம் பிள்ளைத் தமிழ், தி.சந்திரசேகரன் பிள்ளைத் தமிழ்கொத்து, Government Oriental Manuscripts Library, Madras. மு.ப. 1959.

(210) ” மங்களேசுவரி பிள்ளைத் தமிழ், ப.வி.கி.

(211) ” மருதாசலக் கடவுள் பிள்ளைத்தமிழ், குழந்தைசாமிக குருக்கள், பிரதி நிதிகள், ப. ஆ. கள், மருதமலை தேவஸ்தானம் மருதமலை, ப, ஆ. 1895

(212) ” மாதவ சிவஞான சுவாமிகள் பிள்ளைத்தமிழ், ப. வி. கி.

(213) ,, முத்துவீரப்ப சுவாமி பிள்ளைத் தமிழ், தி. சந்திரசேகரன், பிள்ளைத்தமிழ்க்கொத்து, Government Oriental Manuscripts Library, Madras, மு. ப. 1959.

(214) ,, முருகப்ப தேவர் பிள்ளைத் தமிழ், தி. சந்திரசேகரன்ப. ஆ.பிள்ளைத் தமிழ்க்கொத்து (இரண்டாம் புத்தகம்) Government Oriental Manuscripts Library Madras மு. ப. 1959.

(215) ,, யோகநாயகியம்மன் பிள்ளைத் தமிழ், ப,வி.கி.

(216) ,, யோகி சாத்தையர் பிள்ளைத்தமிழ், தி. சந்திரசேகரன், பிள்ளைத்தமிழ்க் கொத்து (இரண்டாம் புத்தகம்) Government Oriental Manuscripts Library, Madras, மு. ப. 1959

(217) ,, வீரவேலாயுத சுவாமி பிள்ளைத் தமிழ், எஸ். முத்துரத்ன முதலியார்

& ஸ்ரீ S. கோபாலன், ப. ஆ. கள்.
சரசுவதி மகால் நூல் நிலையம்,
தஞ்சாவூர், மு. ப. 1950.

(218)

வெற்றிவேல் கடவுள் பிள்ளைத்
தமிழ், ப.வி.கி.

---

## (2) துணை நூற்பட்டியல்


(1) அருணாசலம், டாக்டர் ப, பக்தி இலக்கியம் ஓர் அறிமுகம் தமிழ்ப் புத்தகாலயம், 576, பைகிராப்ட்ஸ் ரோடு, சென்னை-5, மு.ப. 1973.

(2) அருணாசலம், மு., தமிழ் இலக்கிய வரலாறு, பன்னிரண்டாம் நூற்றாண்டு, முதல் பாகம் காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், மாயூரம், தஞ்சை ஜில்லா, மு.ப. 1973.

(3) ஐயனாரிதனார், புறப்பொருள் வெண்பா மாலை, கழக வெளியீடு, சென்னை - 1, ம. ப. 1979

(4) காசிராசன், டாக்டர் இரா. உலகக் காப்பியங்கள், தமிழ்ப் பதிப்பகம், மனை எண் 33, தி.மலை நகர் அனெக்ஸ், பெருங்குடி, சென்னை - 96, மு. ப 1980

(5) குமரகுருபர சுவாமிகள், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, டாக்டர் உ.வே. சா. குறிப்புரையுடன், ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள், மு. ப. 1952.

(6) கோபால கிருஷ்ணன், வே. தா. (பூவண்ணன்) குழந்தை இலக்கியவரலாறு, சாந்தி நூலகம், சென்னை - 1, மு ப. 1960.

(7) சண்முகம் பிள்ளை, மு, சிற்றிலக்கிய வகைகள், மணிவாசகர் நூலகம், 14, சுங்,

குராம் தெரு, பாரிமுனை,
சென்னை-1 மு. ப. 1982

(8) சுந்தரமூர்த்தி, இ. திருக்குறள் அணிநலம்,சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை - 5, மு.ப. 1971

(9) சுப்பிரமணியன் டாக்டர் ச. வே., கம்பன் கற்பனை, தமிழ்ப் பதிப்பகம், 2, கால்வாய்க் கரைச் சாலை கஸ்தூரிபாய் நகர், அடையாறு, சென்னை-20, மு. ப, 1978.

(10) „ இலக்கணத் தொகை யாப்பு பாட்டியல் தமிழ்ப் பதிப்பகம், 2, கால் வாய்க் கரைச்சாலை, கஸ்தூரிபாய் நகர், அடையாறு, சென்னை - 20. மு. ப. 1978

(11) சுப்பிரமணிய பிள்ளை, கா, குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், கழக வெளியீடு, சென்னை-1, மு. ப. 1963

(12) செயராமன் டாக்டர் ந. வீ., சிற்றிலக்கியச் செல்வம், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், இ ப, 1979

(13) திருவள்ளுவர், திருக்குறள், மாணவர் மன்ற வெளியீடு, மாணவர் மன்றம், சென்னை நான்காம் பதிப்பு, 1973,

(14) தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருளதிகாரம் இளம்பூரணம், கழக வெளியீடு, சென்னை-1, ம. ப 1977

(15) பரமசிவானந்தம், அ.மு., சமயமும் சமூகமும், தமிழ்க்கலைப் பதிப்பகம், தமிழ்க்கலை இல்லம், சென்னை- 30, மு. ப. 1958.

(16) பாலசுப்பிரமணியன், டாக்டர் சி, கட்டுரைவளம், நறுமலர்ப்பதிப்பகம் பாரி நிலையம், 59, பிராட் வே, சென்னை-1, மு ப. 1972

(17) முத்துச் சண்முகம் டாக்டர்., & நிர்மலா மோகன், சிற்றிலக்கியங்களின் தோற்றமும் வகையும், முத்துப் பதிப்பகம் ஆழ்வார் நகர், மதுரை-19 மு. ப. 1979.

(18) முத்துராசன் டாக்டர் கு, சிற்றிலக்கியச் சிந்தனைகள் தேன்தமிழ்ப் பதிப்பகம், சேலம்-1, மு. ப. 1981.

(19) வரதராசன், டாக்டர் மு, இலக்கிய மரபு, பாரி நிலையம், 184 பிராட்வே சென்னை - 1, 1979

(20) ” இலக்கியத்திறன், பாரி நிலையம், 184, பிராட் வே, சென்னை-1. மு. ப. 1979.

(21) வேங்கடசாமி, மயிலை, சீனி, மறைந்துபோன தமிழ் நூல்கள், சாந்தி நூலகம் 2-122 பிராட்வே, சென்னை-1. இ.ப.மே. 1967

(22) பலர் சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் 1, 2, 3, 4, 5, 6 மாநாடுகள், கழக வெளியீடு சென்னை-1.

(23) பலர் ... கலைக்களஞ்சியம் தொகுதி - 1,7. தமிழ் வளர்ச்சிக் கழகம் சென்னை. 1960.

(24) பழனிசாமி, வை., கா. சு. பிள்ளையின் ஆராய்ச்சி திறன், எம். ஃபில்பட்ட ஆய்வேடு 1980. மதுரைக்காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

(25) Abercrombic, L., Principles of Literary Criticism, Vora & Co, Publighters Private Ltd., Bombay - 2.

(26) Hudson, W.H., An Introduction to the Study of Literature, George G. Harrap & Co., Ltd., London, Reprint 1955.

(27) Lyon, Ph. B., The Discovery of Poetry Edward Arnald Publishers Ltd,London, 1931.

## இந்நூலாசிரியர் பற்றிப் பேராசிரியர்கள்

"திரு. கு. முத்துராசன் அவர்கள் எழுத்தாற்றலில் வல்லவர்; தமிழிலக்கிய நெறியின் தகவின் நுட்பத்தினை உணர்ந்தவர், ஆழ்ந்த படிப்பு, தெளிந்த அறிவு, அரிய முயற்சி, உயர்ந்த சிந்தனை, விழுமிய பணி இவைகளின் மொத்த வடிவாக இந்நூல் திகழ்கின்றது. இதற்கு முன்னர் சங்க காலம் குறித்தும் சிற்றிலக்கியச் சிந்தனைகள் குறித்தும் இவர் எழுதியுள்ள நூல்கள் கற்றோர் பாராட்டவும் மற்றோர் பயன்பெறவுமான போக்கில் அமைந்திருக்கக் காணலாம்"

— டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
அணிந்துரை, காப்பியக் கருத்தோட்டங்கள்.

"திரு. கு. முத்துராசன் அவர்கள் நுணுகிக் கற்கும் ஆய்வாளர். தமிழுக்குத் தேவையான ஒரு நூலை ஆய்வுக் கண்ணோட்டத்தோடு அணுகிச் சிறப்புறத் தந்துள்ளார். இது போன்ற நல்ல தமிழ் நூல்களைத் தமிழகத்திற்குத் தர வேண்டும் என்று வேண்டுகிறேன்.

— டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
அணிந்துரை, சேரமான்பெருமாள்நாயனார் பாடல்கள்-ஓர் ஆய்வு

"இந்நூலைக் கணித்துப் பார்க்கின்றேன். பயன்மிக்க பணியின் விளைவாக உருவான நூல் என்ற கருத்தே ஓங்குகின்றது."

— டாக்டர் ம. ரா. போ. குருசாமி.
அணிந்துரை, சிற்றிலக்கியச் சிந்தனைகள்.

"சுறுசுறுப்பும் ஊக்கமும் எழுச்சியும் தமிழுள்ளமும் கொண்ட இளைஞர். நன்கு பேசும் ஆற்றலும் செம்மையுற எழுதும் திறனும் கொண்டவர். தமிழ்மொழிக்கு ஆக்கம் தரும் பணிகள் பல செய்து முடிப்பார்."

— டாக்டர் க. தாமோதரனார்
அணிந்துரை, சங்க காலம்,

"இவ் ஆய்வு நூலைக் கற்போர் இந்த நூலுக்காக இவர் எவ்வளவு உழைத்துள்ளார் என்றே வியப்பர் தெளிந்த முடிவுகள் பலவற்றை இந்நூலில் காணும்போது இவர் தனக்கெனச் சிறந்ததோர் எதிர் காலத்தை உருவாக்கிக் கொண்டார் என்றே நம்புகின்றேன்."

— டாக்டர் பொன். சவுரிராசன்
ஆய்வுரை, சங்ககாலம்